# ஆவணம்

இதழ்: 9 ஜூலை 1998



தமிழகத் தொல்லியல் கழகம்
தஞ்சாவூர்

# ஆவணம் இதழில் பங்கேற்போர் நினைவுக்கு

தமிழக வரலாற்றை வளப்படுத்தும் அடிப்படைச் சான்றுகள் குறித்து கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளல் தமிழகத் தொல்லியல் கழகத்தின் முதன்மையான குறிக்கோள். அந்தக் குறிக்கோளை அடையும் வகையில் கீழ்க்குறிப்பிட்ட பரந்த தலைப்புகளை ஒட்டிக் கட்டுரைகளும் குறிப்புகளும் வரவேற்கப்படுகின்றன.

1. புதியனவாகக் கண்டுபிடிக்கப்பட்ட தொல்பொருள்கள், தொன்மையான ஊரிருக்கைச் சின்னங்கள், கலைப்பொருள்கள், காசுகள், கல்வெட்டுகள், செம்பு அல்லது ஓலைப் பட்டயங்கள், சுவடிகள், ஆகியன பற்றிய குறிப்புகள்;
2. கல்வெட்டு முதலிய எழுத்தாவணங்களானால் அவற்றின் மூலப் பாடம், மையப்படி அல்லது கண்படி;
3. மூலச் சான்றுகளை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட வரலாற்றுக் கட்டுரைகள், திறனாய்வுகள்;
4. புதிய நூல்கள், கட்டுரைகள் பற்றிய மதிப்பீடு அல்லது குறிப்புகள்;
5. நாளேடுகளில் வந்த அரிய வரலாற்றுச் செய்திகளின் திரட்டு;
6. கருத்தரங்க நிகழ்ச்சிகள் பற்றிய செய்தித் திரட்டு;

மேற்கண்ட யாவற்றுக்கும் ஒளிப்படமும், வரைபடமும் அனுப்பலாம். படங்கள் $8 \times 10$ செ.மீ. மிகாமல் இருக்க வேண்டும்.

கல்வெட்டுகளில் மைப்படிகள், கண்படிகள் அனுப்புவோர் அவற்றின் தெளிவான ஒளிப்படங்களை மட்டும் ($8 \times 10$ செ.மீ. மிகாமல்) அனுப்புதல் வேண்டும். மூல மைப்படிகளை அனுப்புதல் கூடாது.

வரைபடங்கள் யாவும் $8 \times 10$ செ.மீ. மிகாமல் இருத்தல் வேண்டும். வரைபடங்களின் விளக்கங்கள் யாவும் தமிழில் இருக்க வேண்டும்.

பார்வை நூல்களைக் கட்டுரைகளில் குறிப்பிடும் போது கீழ்க்கண்ட முறையைப் பின்பற்ற வேண்டும்.

1. குறிப்பு எண்கள் தொடர் எண்களாகத் தரப்படவேண்டும்.
2. கட்டுரையின் முடிவில் பார்வை நூல்களைத் தரவேண்டும்.
3. கீழ்க்கண்ட அமைப்பில் பார்வை நூல் விவரங்கள் இருத்தல் வேண்டும்.

**நூல்களுக்கு**

நூல் ஆசிரியர் பெயர் (தந்தை அல்லது குறிப்பு எழுத்துகள் முதலிலும், தொடர்ந்து முழுப்பெயரும்), நூல் பெயர் (அடிக்கோடிடப்படல் வேண்டும்), தொகுதி எண், நூலின் பதிப்பு, நூல் வெளியிட்டோர் மற்றும் அவர் ஊர்-இடம், வெளிவந்த ஆண்டு, பக்க எண்கள், படங்கள், நிலப்படங்கள், புகைப்படங்கள் உள்ள பக்க எண் மற்றும் அதன் வரிசை எண்.

*(தொடர்ச்சி பின் அட்டையில்)*

# தமிழகத் தொல்லியல் கழகம்

மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் 613 005.

## செயற்குழு

| | |
|---|---|
| தலைவர் | என். சேதுராமன், B.Sc., D.M.I.T. |
| துணைத்தலைவர் | கொடுமுடி சண்முகன், B.E., Ph.D. |
| | எஸ். எம். கமால், M.A., Ph.D. |
| செயலர் | கா. ராஜன், M.A, M.A., Ph.D. |
| இணைச்செயலர் | சு. இராஜவேலு, M.A., M.Phil. |
| பொருளாளர் | பா. ஜெயக்குமார், M.A., M.Phil. |
| பதிப்பாசிரியர் | சு. இராசகோபால், MA., Ph.D. |
| செயற்குழு உறுப்பினர் | நடன. காசிநாதன், M.A. |
| | எம்.டி. சம்பத், M.A., Ph.D. |
| | வி. ஜீவானந்தன், B.Sc., M.B.B.S. |
| | கே. சதாசிவன், M.A., Ph.D. |
| | பி. சந்திரசேகரன், M.A., M.Phil., Ph.D. |
| | மா. கணேசன், M.A., Ph.D. |
| | சொ. சாந்தலிங்கம், M.A. M.Phil. |
| | வெ. இரா. துரைச்சாமி, M.A., B.Ed. |

---

**பதிப்புக் குழு**

எ. சுப்பராயலு, தமிழ்ப் பல்கலைக்கழகம்.
ப. சண்முகம், சென்னைப் பல்கலைக்கழகம்
கோ. விசய வேணுகோபால், பாண்டிச்சேரி

# பதிப்பாசிரியர் உரை

ஆவணம் 9 இதழ் வழக்கம் போல் சிறப்பாக வெளிவர ஒத்துழைப்புத் தந்த கட்டுரையாளர்களுக்கும் பதிப்புக் குழுவினருக்கும் நன்றி தெரிவிக்க கடமைப்பட்டுள்ளேன். ஆனால் ஒரு வருத்தப்பட வேண்டிய செய்தி பெரும்பாலான கட்டுரையாளர்கள் ஆவணம் விதிகளைக் கடைப் பிடிக்கவில்லையென்பது. விதிகளைக் கடைப்பிடித்தால் எல்லோருக்கும் நல்லது. பிழையில்லாமலும், நேர்த்தியாகவும் உரிய நேரத்தில் அச்சிட்டு வெளியிட அது உதவும். வருங்காலத்தில் இக்குறையை நீக்க வேண்டுமாய் கழக உறுப்பினர் யாவரையும் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இவ்விதழ் அழகாகவும் விரைவாகவும் அச்சிட்டுத்தந்த அலமு பிரிண்டிங் நிறுவனத்தாருக்கு மிக்க நன்றி.

**சு. இராசகோபால்**

# பொருளடக்கம்

# 1. இந்தியக் கல்வெட்டியல் ஆய்வு நிலை

கே.ஜி. கிருஷ்ணன், மைசூர்.

உலகத்து நாடுகளில் கல்வெட்டுகளின் வாயிலாக மிகச் சிறந்த அளவில் பல நூற்றாண்டுகள் தொடர்ந்த வரலாற்றினை அறிய உதவும் சிறப்புப் பெற்ற நாடு இந்தியா. சற்றேறக்குறைய கி.பி. 300லிருந்து இந்தியாவின் பல பகுதிகளிலிருந்து தொடர்ந்து நிகழ்ச்சிகளை அறிவதற்கு ஒவ்வொரு ஆண்டிலும் கல்வெட்டு கிடைக்கின்றது. எல்லாக் கல்வெட்டுகளையும் காலவரிசையில் அடுக்கிப் பார்க்கும் பொழுதுதான் இவ்வுண்மை வெளிப்படும் என்பதை நாம் தயாரித்து வரும் உட்டங்கித வித்யா அரண்ய கல்வெட்டுத் தொடர்கள் காட்டி வருகின்றன. இன்று வடமொழிக் கல்வெட்டுகளை அவ்வாறு காட்டுவதில் முயற்சி நடந்து வருகிறது என்றாலும் அந்த அந்த பிராந்திய மொழிகளில் இம்முயற்சியை மேற்கொண்டாலும் இது வெளியாகும். மௌரியர், குஷாணர், சகர், சாதவாகனர் முதலிய தனிப்பட்ட குலங்களின் அரசர் கல்வெட்டுகள் தனித்தனியாக இருப்பதை ஒருசேர வைத்து காலவரிசையில் அடுக்கி அவற்றை ஓதி ஆராய்ந்து வந்தால் இன்று வரை புலப்படாத உண்மைகளை, மனித வரலாற்றின் பெரும்போக்கான நிலையினைத் தொடர்ந்து அறிய உதவலாம். ஆயினும் இடைவெளிகள் இல்லை என்று சொல்ல முடியாது. அவற்றிற்கு இலக்கியம், நாட்டுப்புறச் சான்றுகள், அகழ்வாராய்ச்சி முடிவுகள் இவற்றிலிருந்து செய்திகளைச் சேர்த்துக் கொள்ளலாம். பெரும்பாகம் கல்வெட்டுக்கே உரியது என்பது தெளிவு.

அத்தகைய கல்வெட்டுகளை முழுதும் தேடித்தெளிந்தோமா என்றால் இல்லை என்றே வேதனையோடு சொல்ல வேண்டியிருக்கின்றது. கல்வெட்டுகளைத் தேடுவதில் மூன்று முறைகள் இருக்கின்றன. பொது மக்கள் தாம் கண்டதைக் காட்டிக் கேட்கும்பொழுது அவர்களுக்காக படியெடுத்துத் தெரிவிப்பது ஒன்று. துறையாளர்களே ஆய்வு அடிப்படையில் பழைய இடங்களைத் தேடி அங்கு மறைந்து கிடக்கும் கல்வெட்டுகளை படியெடுத்து வெளியிடுவது இரண்டாவது. மூன்றாவது ஒவ்வொரு வட்டமாகச் சென்று ஒவ்வொரு பட்டியிலும் தொட்டியிலும் புகுந்து முறையாகத் தேடி முழுதும் படியெடுப்பது. இம்மூன்று முறைகளையும் நான் அறிந்து கொண்டு 1950 முதல் பணி செய்து வந்தேன். இது இத்துறையில் என் முன்னோர் செய்த பணி. படிப்படியாக இம்முறை கைவிடப்பட்டு வருகின்றது. ஆயினும் எந்த ஊரில் புகுந்து தேடினாலும் கல்வெட்டு கிடைக்கும் என்ற நிலையில் கல்வெட்டுகள்

கிடைத்து வந்தன. 1883ம் ஆண்டில் தொடங்கிய பணி தொடர்ந்து நடந்து வருகிறது. மத்திய அரசின் ஆண்டறிக்கைகளை நோக்குவார்க்கு இது தெள்ளென விளங்கும். இன்னும் அறியப்படாத கல்வெட்டுகள் நம் நாட்டின் பல்வேறு பகுதிகளில் இருக்கின்றன. இம் முயற்சிகள் எல்லாம் நாளிதழ்களில் காணப்படுவதில்லை.

பல ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டில் ஒரு சிறு புரட்சி நடந்தது. திரு. நாகசாமியின் முயற்சியால் கோடைக்காலப் பயிற்சியைப் பெற்ற ஆசிரியர்களைப் படைத்து தமிழ்நாட்டின் பல பகுதிகளில் அவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் வெளியிடப்பட்டன. இன்றும் அது நடந்து வருவதால் ஆண்டுதோறும் கல்வெட்டுப் பயிற்சி பெற்ற சிலர் களம் புகுந்து கல்வெட்டுப் பணியைப் பல வகைகளில் செய்து வருகின்றனர். ஆனால் அன்னார் கண்டுபிடிக்கும் கல்வெட்டுகள் அரசுத் துறையினரால் சில காலம் வெளியிடப்பட்டு வந்தன. எனினும் தனியார் கண்டுபிடிக்கும் கல்வெட்டுகளை வெளியிட ஓர் வாய்ப்பு தேவையாக இருந்தது. அண்மையில் தொடங்கப்பட்ட 'ஆவணம்' இந்த வாய்ப்பைக் கொடுக்கிறது. இதன் மூலமாக பல இளைஞர்கள் தம் தம் ஊர்களில் காணப்படும் கல்வெட்டுகளைப் படித்து ஆவணத்தில் வெளியிட்டு வருகின்றனர். அந்த இதழ்களை ஆவணத்தார் எனக்கு அன்புடன் அனுப்பி வைத்தனர். அதைப் பார்வையிடும் பொழுது தமிழ்நாட்டில் இப்பொழுது எத்துணை ஆர்வமும் திறமையும் கொண்ட ஆய்வாளர்கள் தோன்றி வருகின்றார்கள் என்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். ஆனால் அரசுத் துறையாளர்கள் போல் அவர்களால் செய்ய முடியவில்லை என்பது தெளிவாயிற்று. குற்றம் அவர்கள் பால் இல்லை. தனிமனிதனால் செய்ய முடியாத காரியத்தை அரசுத்துறையினரே முழுதும் செய்ய இயலாதபோது ஒருவரையும் குறை சொல்ல இயலாது. எனினும் தனிப்பட்ட முறையில் முயற்சி செய்பவர்க்கு ஒரு எளிய முறையைச் சொல்ல விரும்புகின்றேன். சுண்ணாம்புக் கலவையை கல்வெட்டுக் கற்களின்மேல் பூசிக் காய்ந்த பிறகு அழித்துப் பள்ளங்களில் தங்கி விடும் சுண்ணாம்புத் தடத்தைக் கொண்டு கல்வெட்டை முழுதும் படித்துவிடலாம். ஆய்வும் முற்றுப் பெறும். சுண்ணாம்பும் எளிய பொருளே.

ஒவ்வொரு கல்வெட்டையும் படி எடுத்தல் தனியார்க்கு இயலாது. தனியார் அனைவர்க்கும் கல்வெட்டுப் படிகள் கிடைத்தல் அரிது. பொருளும் பதவியும் வாய்த்தவர் பலர்க்கு வேண்டிய கல்வெட்டு மூலங்கள் கிடைத்து விடுகின்றன. அந்த முறையில் திரு. சேதுராமன், திரு. திருமலை, திரு. கராஷிமா போன்றோர் தமக்குக் கிடைத்த மூலங்களைக் கொண்டு சிறந்த ஆராய்ச்சி செய்திருக்கின்றார்கள் என்பது உண்மை. எனினும் அத்தகைய வாய்ப்பு இல்லாத பலநூறு ஆய்வாளர்

களுக்கு கல்வெட்டு மூலங்கள் என்று கிடைக்கும்? இதற்கு வழி தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளை விரைவுபட வெளியிடுவதே. இவ்வெளியீடுகள் மாவட்டம், வட்டம்தோறும் நூலகங்களில் கிடைக்க வழி செய்ய வேண்டும். அந்த நிலையில் மேற்குறிப்பிட்ட இளைஞர்கள் மேலும் சிறந்த ஆய்வு செய்ய நேரும். ஆராய்ச்சி தொடரும்.

இன்றுள்ள நிலைமையில் தமிழ்க் கல்வெட்டுகள் பல ஆயிரங்கள் வெளியிடப்படாத நிலையில் இருக்கின்றன. வடமொழி, தெலுங்கு, கன்னடம் என்ற மொழிக் கல்வெட்டுகள் மிகப் பல வெளிவந்துள்ளன. இந்த நிலைமையை மாற்ற மத்திய அரசுக் கல்வெட்டுத்துறைக்குப் பொறுப்பு அதிகம். நான் ஓய்வு எடுத்துக்கொள்ளும் வரை 1907ம் ஆண்டில் தொகுத்த தமிழ்க்கல்வெட்டுகள் அடங்கிய தொகுதி 23 வெளிவந்தது. பிற்பட்ட ஆண்டுகளில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகளின் தொகுதிகளும் விரைவில் வெளிவரவேண்டும். இதற்கெனத் தனிக்குழு அமைத்து இப்பணி முடுக்கிவிடப்படவேண்டும் என்பதே என் வேண்டுகோள். அவ்வாறே எஞ்சியுள்ள கன்னட, தெலுங்கு, மொழிக் கல்வெட்டுகள் தொகுதிகளும் வெளிவர வேண்டும்.

வடமொழிக் கல்வெட்டுகளைப் படியெடுத்து வெளியிடத் தனிப்பிரிவு மைசூர் மையத்தில் நெடுங்காலமாக இருந்தும் அவற்றைத் தொகுத்து தனிப்பட்ட குப்த, வாகாடக, கலசூரி, பரமார என்ற குல அடிப்படையில் வெளியிடுவதற்கு வெளியிலிருக்கும் தனிப்பட்ட மேதாவிகளையே தொல்பொருள் துறை பயன்படுத்தி வருகிறது. இன்றைய நிலையில் இதுவே நீடிக்கும்படியான கட்டாய நிலை இருந்து வருகிறது. இந்த முறையையும் தமிழ்க் கல்வெட்டுகளை வெளியிடுவதற்கு மேற் கொள்ளவில்லை என்பது வருந்துதற்குரியது. இதுவரை நிர்வாக நிலை பற்றிச் சொன்னேன். இனி கல்வெட்டுகளை ஆய்வு செய்து வரலாறு காண எடுக்கப்பட்ட முயற்சிகளைப் பற்றி கூறுகின்றேன்.

அசோகனின் கல்வெட்டுகள் தென்னாட்டில் 14வது அக்ஷரேகைவரை பரந்து காணப்படுகின்றன. இச்செய்தியையும் அசோகனின் கல்வெட்டுகள் சேரமானையும், அதியமானையும் சுதந்திரமான அயல்நாட்டு மன்னர்கள் வரிசையிலும் வைத்துப் பேசும் செய்தியையும் சேர்த்து ஆராயும்பொழுது மௌரியரின் தாக்கம் தமிழ்நாட்டின் வடவெல்லைவரை ஏற்பட்டிருக்க் வேண்டும். எனவே கர்நாடகம், ஆந்திரம் என்ற இருமாநிலங்களிலும் வடநாட்டு எழுத்துக்களே பயன்பட்டு வந்தன. மேலும் பாகத மொழிக் கல்வெட்டுகளே தோன்றியுள்ளன. தமிழ்நாட்டில் மட்டும் பாகத அதாவது பிராகிருத மொழியில் கல்வெட்டுகள் தோன்ற இடமில்லாமல் போயிற்று. இந்த நிலைமை காரணமாக கன்னட தெலுங்கு எழுத்துக்கள் தோன்றுவதற்கு

முன்பே அம்மாநிலங்களில் வடவெழுத்துக்களே புழக்கத்தில் இருந்தன. அதனால் கன்னட தெலுங்கு மொழியில் எழுதமுற்பட்ட காலத்தில் வடவெழுத்துகள் கலந்த நெடுங்கணக்கே நிலவி வந்தது. ஆனால் தமிழ்நாட்டில் இந்த வளர்ச்சியோ மாற்றமோ இல்லை. எனினும் வடக்கே எழுதப்பட்ட எழுத்துக்களுக்கும் மிகப் பழமையான தமிழ் நாட்டு குகைக் கல்வெட்டுகளில் கண்ட எழுத்துக்களுக்கும் அடிப்படையான நெடுங்கணக்களவில் ஒரு ஒற்றுமை காணப்பட்டது. இதை மனதிற் கொண்டு பெரும்பாலான ஆராய்ச்சியாளர்கள் குகைக் கல்வெட்டுகளில் காணப்படும் எழுத்துக்கள் தமிழை எழுதுவதற்காக வடநாட்டிலிருந்து கடன் வாங்கிக் கொண்டார்கள் என்று சொல்லி வருகின்றார்கள். வடவெழுத்துக்களில் எகர ஒகரக் குற்றெழுத்துக்கள் இல்லாததால் அவற்றிற்கு ஒரு புள்ளியை இட்டு அமைத்துக் கொண்டார்கள் என்றும் சொல்லி வருகின்றார்கள். இதனால் சில தவறான கருத்துக்கள் புகுந்து உண்மைகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டன. தமக்கு என்று தனி எழுத்து இல்லாமையால் வடநாட்டு எழுத்துக்களை ஏற்றுக் கொண்டு பின் எகர ஒகரக் குற்றெழுத்துக்கள் வடநாட்டு முறையில் இல்லாததால் புள்ளிபெய்து எழுதினார்கள். அதாவது புள்ளி தயாராக இருக்கின்றது, எழுத்துதான் இல்லை என்பது போன்றது வாதம். இது பொருந்தாது. தமிழ் எழுத்து முறைக்கும் மற்றும் ஒலிப்பதற்கும், புள்ளி இயல்பானது. எழுத்துக்களோடு பெயரையும் அவர்களும் ஏற்றுக் கொண்டார்களா? இல்லை.

வடநாட்டு எழுத்துக்களுக்கும் குகைக் கல்வெட்டு எழுத்துக்களுக்கும் நெடுக்கணக்கில் அடிப்படை எழுத்துக்களில் ஒற்றுமை காணப்படுகிறது. கஙசஞடணதநபமயரலவ என்ற எழுத்துக்கள் ஒன்றே. வேறுபட்ட எழுத்துக்களின் உருவங்களை ஒப்பு நோக்குவார்க்கு ஒன்று விளங்காமல் போகாது. தமிழின் நான்கு சிறப்பெழுத்துக்களுக்கு அவற்றோடு ஒலி ஒற்றுமை உடைய ரலடந என்ற எழுத்துக்களிலிருந்து றளழன என்ற எழுத்துக்களைத் தமிழர்கள் படைத்துக் கொண்டார்கள். ஆனால் வடசொல்லில் கங, சஞ, டண, தந, பம என்ற இணை எழுத்துகளுக்கு இடைப்பட்ட பதினைந்து எழுத்துக்களும் அடிப்படை எழுத்துக்களின் உருவங்களோடு ஒற்றுமை உடையன அல்ல. ஆக தமிழ் எழுத்துக்களுக்கு ஒரு தனித்தன்மை காணப்படுகிறது. அடுத்த நிலையில் இவையே இந்தியா முழுவதும் முதலில் பரவியிருக்கலாம் என்று சொல்ல வாய்ப்புண்டு.

தமிழர் வடக்கிலிருந்து எழுத்துக்களை ஏற்றுக் கொண்டார்கள் என்று வாது செய்பவர்கள் ஒன்றை மறந்தார்கள். அசோகன் கல்வெட்டில் காணப்படும் எழுத்துமுறையில் தமிழ் மொழிச் செய்திகளையும் எழுத முடியும் என்பதே அது. ஆகையால் தமிழ் எழுத்துக்களை அதா

வது இந்தியா முழுதும் பரவியிருந்த தமிழ் நெடுங்கணக்கு எழுத்துக் கள் மௌரியர் காலத்துக்கு முன்பே வழக்கிலிருந்திருக்க வேண்டும். 'மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல்' என்ற தொல்காப்பிய நூற் பாவை ஒட்டி புள்ளி குத்தும் முறை முன்பே கண்டுபிடிக்கப்பட்டது. எப்பொழுதுமே புள்ளி இல்லாமலேயே பெரும்பாலான கல்வெட்டு கள் எழுதப்படுவதால் புள்ளி இல்லாமையை ஒரு எதிர்வாதத்திற்கு சான்றாகக் கொள்ள இயலாது. தமிழ் அறிவுடையவர்களுக்காகத்தானே தமிழ்க் கல்வெட்டுகள் எழுதப்பட்டன.

எழுத்துக்களுக்குப் பெயர் வைக்கும் முறையிலும் ஒரு தவறான கருத்து. தமிழ்-பிராமி என்ற பெயர் வழக்கு தவறானது. எழுத்து தோன் றிய விதம் அறியப்படாததால் பிரமன் படைத்ததாக எண்ணி பிராமி என்ற பெயர் வடநாட்டு வழக்கு. லலிதவிஸ்தரம் என்ற பழைய நூலில் காணப்படும் பட்டியலில் தாமிழி என்ற பெயர் காணப்படுகின்றது. தச ரதன் மகன் தாசரதி என்ற வடசொல்லாக்க முறையை ஒட்டி தமிழ் எழு தப் பயன்பட்ட எழுத்து தாமிழி என்று அந்நூலார் கருதினார்கள் போலும். எனவே, தமிழ்நாட்டார் எதற்காக பிராமி என்று பெயர் வைக்க வேண்டும்? அழகு உடையவள் அழகி, அருள் உடையவர் அருளி, என்பதைப் போல தமிழ் எழுதும் எழுத்து தமிழி என்றே கொள் ளலாம். அதிகம் சொல்வானேன், தமிழ் என்றே சொல்லலாம். தமிழ் எழுத்துக்களின் தனித்தன்மை இதனை உறுதி செய்கிறது. வடக்கிலி ருந்து வந்தனவற்றை ஏற்றுக் கொண்டதைப்போல தெற்கிலிருந்து வடக்கே போன சொற்களில் திராவிடம் என்பது ஒன்று. ஒரிய மாநிலத் தில் காரவேலனின் ஹாதிகும்பா கல்வெட்டில் அவனது ஆட்சியில் பதி னொன்றாவது ஆண்டில் 113 ஆண்டுகளாக இயங்கிவந்த திரமிரக் கூட்டணியை முறியடித்ததாகச் சொல்லப்படுகிறது. திரமிர என்பது தமி ழின் திரிபு. இது திரவிட என்று பிற்காலத்தில் ஒலி மாறியிருக்கலாம். திர என்ற முதலெழுத்து தமிழ்மொழி மரபில் இல்லாததொன்று.

மேற்சொன்ன நிலையில் திரு. ஐராவதம் மகாதேவன் வாசித்தளித்த குகைக் கல்வெட்டுகளில் மிகப்பழமையான மீனாக்ஷிபுரம் கல்வெட்டு கள் இரண்டும் தமிழ் எழுத்துக்களை எழுதும் முறையைக் காண எடுத் துக் கொண்ட முயற்சிகளின் பரிசோதனைக் களமாகக் காணப்படுகின்றன. மெய்யையும் உயிரையும் பிரித்து எழுதியும் அன், இன் போன்ற விகுதிச் சொற்களை வேறாக எழுதியும் பார்த்தனர். அடுத்த நிலையில் மெய்யெழுத்தை மெய்யாகவும் உயிர்மெய்யாகவும் படிக்கக் கூடிய நிலையைப் படைத்தார்கள். இந்த முயற்சி எப்பொழுது மேற் கொள்ளப்பட்டது என்று சொல்ல இயலாது. மேலும் இக்குகைக் கல்வெட்டுகளை முழுதுமாகப் படிக்கும்பொழுது வடவெழுத்துக்கள் கலந்த சொற்களில் வடவெழுத்தை நீக்கி அதற்கு இணையான தமிழ்

எழுத்தைப் பெய்து எழுதி வந்தார்கள் என்பது தெளிவாகின்றது. ஒரு தமிழ் மேதாவி இந்த முறையைக் கொண்டு வந்திருக்க வேண்டும். அதைத்தான் தொல்காப்பியர் 'வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே' என்ற நூற்பாவில் சுட்டிக்காட்டுகின்றார். இதற்கு உரையாளர்கள் அனைவரும் பிழைபட விளக்கம் அளித்துள்ளார்கள். எனினும் இதனால் தமிழ்ச் சொல்லாக்கம் பலவாறாகப் பெறுகிற்று.

அசோகப் பேரரசன் தமிழ் மன்னர் நால்வரை அயல்நாட்டு மன்னவரோடு சமமாக வைத்துப் பேசுகின்றான். அந்நால்வரில் இருவர் கேரளபுத, ஸ(அ)தியபுத என்று பெயர் சொல்லப்படுகின்றனர். இவ்விரண்டும் சேரமான், அதியமான் என்ற இரு தமிழ்ப் பெயர்களின் சொல்லாக்கம். மான் என்பது மகன் என்பதன் திரிபு. வழிவந்தவன் என்ற பொருளில் வருகின்றது. அதைப்போலவே மலையமான், தொண்டைமான் என்பனவும். குறுநில மன்னரில் அதியமான் பெயரை மட்டும் சொல்லக் காரணம் என்ன? எல்லை காவலாக இருந்தமையால் என்பது தெளிவு. சேரனின் இனத்தவனாகிய அதியனை அதாவது அதியமான் குடிகளின் தலைமகனைச் சேரன் கொங்கு நாட்டைத் தன்வயப்பட்ட பின்னரே தன் ஆட்சிக்கடங்கிய புதுப்பகுதிகளைக் காப்பதற்கு வைத்தானாதல் வேண்டும். எனவே அதற்கு முன்னரே சேரன் கொங்கு நாட்டை அடக்கிக் கருவூரில் குடியேறி கருவூர் வஞ்சி என்று தன் குடியினரின் முதல் தலைநகர் வஞ்சியை நினைவு படுத்திக் கொண்டான். அவன்தான் கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும்பொறை. அதியனுக்குப் பிறகுதானே அதியமான் வந்திருக்க வேண்டும். ஆகையால் அசோகன் குறிப்பிடும் அதியமானுக்கு முன்னாலேயே அதியன் தமிழ்நாட்டின் வடவெல்லையை ஆளத்தலைப்பட்டான் என்பது ஒருதலை. இந்நிகழ்ச்சிகளெல்லாம் அசோகனின் ஆட்சி தொடங்கு முன் அல்லது கி.மு. 257க்கு முன் நடைபெற்றிருக்க வேண்டும். அதியன் ஆட்சி செய்தது எப்பொழுது என்று இன்று சொல்ல இயலாது. அதியனைப் பற்றிய சங்க இலக்கியப் பாடல்கள் அசோகன் காலத்துக்கு முற்பட்டவை.

அண்மையில் சேரர் நாணயங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. சேரர் கல்வெட்டும் மலைநாட்டில் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதாக ஒரு செய்தி வெளிவந்தது. கடும்புத என்ற சொல்லாட்சி இருப்பதாகவும் அது கடுமான் கோதை என்ற சேர அரசன் பெயர் என்றும் சொல்லப்பட்டது. கடுமான் என்பதற்கு குதிரை என்று பொருள். கோதை எப்பொழுதும் குதிரையில் வலம் வருவதால் கடுமான் கோதை என்று அழைக்கப்பட்டான். கடு என்ற உரிச் சொல்லுக்கு விரைவு, கடுமை என்ற பொருள்கள் உள. கடுங்கோ என்ற சொல்லாட்சியை நோக்குக.

மான் என்பது விலங்கு. இதைப் புத என்று (சேரமான் அதியமான் என்பவற்றை கேரளபுத, அதியபுத என்று மொழி பெயர்த்ததைப் போல்) மொழிபெயர்த்தனர், சாதவாகனரின் ஆட்சித் தாக்கத்தால் அப்படிச் செய்யப்பட்டது என்ற வாதங்கள் பொருந்தாதவை. கடுமான் என்ற சொல்லில் உள்ள கடு என்பது சேர, அதிய, மலைய, தொண்டை என்ற சொற்களைப் போல் எந்த ஒரு அரசர்குடிக்கும் பெயர் அன்று.

சாதவாகனர்களிடம் ஒரு பழக்கம் காணப்பட்டது. அவர்களின் கல்வெட்டுகளைக் கால வரிசையில் அடுக்கிவைத்து ஆராய்ந்ததில் சாதகர்ணி, புலுமாவி என்ற பட்டப் பெயர்களை மாறி மாறி வைத்துக் கொண்டார்கள் என்று அறியப்படுகின்றது. இது சோழர்களில் இராசகேசரி, பரகேசரி, பாண்டியர்களில் மாறன், சடையன், கங்கர்களில் சத்யவாக்ய, நீதிமார்க என்ற பட்டங்கள் மாறி, மாறி வழங்கப்பட்டதை நினைவூட்டுகின்றது. ஒரு மன்னன் சாதகர்ணி அல்லது இராசகேசரி அல்லது மாறன் அல்லது சத்யவாக்யன் என்று கொண்டால் அடுத்த மன்னன் முறையே புலுமாவி, பரகேசரி, சடையன் அல்லது நீதிமார்கன் என்ற பெயர்களை வைத்துக் கொண்டான். இந்தப் பழக்கத்தை முதலில் சாதவாகனர் ஏற்படுத்தினார்களோ என்று தோன்றுகின்றது. சங்க காலத்தில் கிள்ளி, வளவன், மாறன், செழியன் என்ற பெயர்கள் இவ்வாறு வழங்கப்பட்டனவோ என்று ஆராயப்பட வாய்ப்புண்டு.

குகைக் கல்வெட்டுகள் பெரும்பாலும் சமணரால் எழுதப்பட்டவை. அந்தக் காலத்தில் ஊர்களில் வாழ்ந்தவர்கள் கற்களைத் தங்கள் செய்திகளை அறிவிக்கப் பயன்படுத்தவில்லை. எனவே கல்வெட்டுத் தொடரில் ஒரு பெரிய இடைவெளி தோன்றிற்று. அங்கொன்றும் இங்கொன்றுமாக அறச்சலூர், பூலாங்குறிச்சி முதலான இடங்களில் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. தமிழ் எழுத்து வளர்ச்சியில் அறச்சலூருக்கு ஒரு தனி இடமுண்டு. மேற்சொல்லப்பட்ட அடிப்படை எழுத்துக்களில் தோன்றிய முதல் மாறுதல் அங்கேதான் நிகழ்ந்தது. வட்டெழுத்து பிறந்தது. தமிழெழுத்து பிரிந்தது.

தமிழ்ப் பண்பாட்டின் அறிகுறிகளாக நமக்குக் கிடைக்கின்றவை நெடுங்கல், பெருங்கல், நடுகல் என்பவை. கல்லால் கட்டடம் எழுப்பப்படவில்லை. ஈமச்சடங்குகளுக்காக பயன்படுத்தப்பட்ட கற்களை முன்னோரையும் நீத்தாரையும் நினைவுக்கூரத்தான் கொண்டார்கள். ஆகையால்தான் மேற்குறிப்பிட்ட இடைவெளி நிகழ்ந்தது. இந்த நிலையை மாற்றிய பணி மகேந்திர பல்லவனால் செய்யப்பட்டது. செங்கல், சுண்ணாம்பு, இரும்பு, மரம் இவை இல்லாமல் ஒரு இலக்கியப் படைப்பாகக் கருதப்படக்கூடிய ஒரு கோயிலை மும்மூர்த்திகளை முன்னிட்டுக் கட்டினேன் என்று பெருமையுடன் சொல்லிக் கொள்கிறான். பிறகுதான் கற்கோயில்கள் குகைகளைக் குடைந்தும் பரமேச்சுர

வர்மன் காலத்திலிருந்து அடுக்கி வைத்தும் கட்டப்பட நேர்ந்தன. தேவாரம் பாடிய மூவரும் இக்கோயில்களைத் தவிர்த்து வந்தனர். பெரும்பாலான தமிழ் மக்கள் இந்த மாறுதலை முழுமனதுடன் வர வேற்கவில்லை. ஆதித்த சோழனும் அவன் காலத்தை ஒட்டி வாழ்ந்த குறுநில மன்னரும் காவிரியின் இரு கரையிலும் கற்கோயில்களைக் கட் டத் தொடங்கினர். அது ஒரு இயக்கமாகவே மாறி சில குறிப்பிட்ட தனி மனிதர்கள் கற்றளி கட்ட வேண்டும் என்று பைத்தியமே பிடித்து அலைந்தனர். ஆனால் அவர்களைக் 'கற்றளிப் பிச்சன்' என்று மக்கள் போற்றினர். இந்தக் காலக்கட்டத்தில் தான் கல்வெட்டுகள் பெருகலா யின.

குடவரைக் கோயில்களை அமைத்த மகேந்திர பல்லவன் இன் னொரு புரட்சியும் கொண்டு வந்தான். வடமொழியில் வல்லவனாகிய அவன் தன் மாநிலமான ஆந்திர தேசத்து குண்டூர் எல்லையிலிருந்து வந்தவன். எனவே ஆந்திர கர்நாடக மாநிலங்களில் வழக்கத்திலிருந்த தென்னக எழுத்துக்களை (தெலுங்கு, கன்னட எழுத்துக்களின் முன் னோடி) தமிழ்நாட்டிலும் வழக்கத்தில் கொண்டு வந்தான். ஏற்கனவே தமிழ் எழுத்துக்கள் இருந்தமையால் வடவெழுத்துக்களுக்கும், தமிழ் எழுத்துக்களுக்கும் பொதுவான எழுத்துக்களின் வடிவங்களையும் இணைத்து ஒரு எழுத்து வகையை ஏற்படுத்தினான். அதுதான் கிரந்தம் எனப்படுவது. இச்செய்திகளைத் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை கட்டடங்களில் உள்ள தூண்களில் பொறிக்கப்பட்ட எழுத்துக்களைப் பார்ப்போர்க்கு விளங்கும். அவற்றில் பல்லவனுடைய தெலுங்கு மொழிப் பட்டப் பெயர்களும் அடங்கும்.

சாதவாகனரும், இக்ஷுவாகு வம்சத்தினரும் வைதிக மதத்தைப் பின்பற்றியவர். வெளியிலிருந்து வந்த சகக்ஷத்ரபர், பஹ்லவர் முறையே தம்முடைய குருமார்களின் கோத்திரங்களாகிய பிருஹத்பலா யன, பாரத்துவாஜ கோத்திரத்தை மேற்கொண்டு வைதிக மதத்தைத் தழுவியராக வாழ்ந்தார்கள். இவற்றின் அடிப்படையில் வம்சாவளியை யும் அமைத்துக் கொண்டார்கள். இச்செய்திகளோடு தக்ஷசீலத்து ஹெலியதோர என்றவன் பாகவதன் என்று தன்னை அழைத்துக் கொண்ட செய்தியையும் வைத்து எண்ணினால் வலிமையினாலோ, மத ஒற்றுமை உணர்ச்சியாலோ அயல் நாட்டவரும் வைதிக மதத்தைச் சேர்ந்தவரானார்கள் என்பதை அறியலாம். அதைப் போல பிராம்மண னான மயூரசர்மன் மயூரவர்மன் ஆன கதை, அதாவது க்ஷத்திரியனின் கடமையை மேற்கொண்ட கதையை நாம் அறிவோம். அவ்வாறே கலப்பு மணமும் மிகப்பழமையானதே. அதற்கு வர்ணசங்கரம் என்று பெயர். இதைத் (சாதுர்வர்ணய சங்கரம்) தவிர்க்க கௌதமிபுத்திர சாத கர்ணன் முயன்றும் தானே தன் மகளை சகமன்னன் ஒருவனுக்கு மண

முடிக்க நேர்ந்தது அரசியல் காரணங்களால் என்பது புலப்படுகின்றது. குழப்பம் ஏற்படக்கூடாது என்பதற்காக இக்கலப்பு மணங்களில் பிறந்த வர்களுக்கு வெவ்வேறு கடமைகளையும் உரிமைகளையும் விதிக்க வேத சாஸ்திரங்கள் அறிந்த சபையார் கூடித் தீர்மானித்தனர் என்பதைக் குலோத்துங்கனின் திருவாரூர்க் கல்வெட்டு ஒன்று உணர்த்துகின்றது. இது தொடர்ந்து எண்ணற்ற சாதிகள் உருவானது வேறு கதை.

கொங்கு நாட்டின் நினைவாக இன்று தொடங்கும் நிகழ்ச்சியைப் பற்றி ஒரு சில செய்திகள். பண்டைய கொங்கு நாட்டில் முடிமன்னர் ஆட்சி இல்லை. குடிமக்கள் ஆட்சியே நடைபெற்றது. ஆவின் வள மும், மணிக்கற்களின் வளமும் நிறைந்த கொங்கு நாட்டைத் தம் வசம் கொண்டு வருவதற்காக சேர சோழ பாண்டியர் தம்முள் போர் செய்து கொண்டிருந்தனர். ஒரு கால கட்டத்தில் சேர மன்னர் கொங்கு நாட் டைக் கைப்பற்றிக் கருவூரில் குடியேறி அதை இன்னொரு வஞ்சியூரா கக் கருதி ஆளத் தலைப்பட்டனர். புறநானூற்றுச் சொற்களும் பதிற்றுப்பத்துச் செய்திகளும் இதற்குச் சான்று பகர்கின்றன. இந்நிலை யில் வடக்கே காவலனாக நியமிக்கப்பட்ட அதியனும் அவன் வழிவந்த அதியமான்களும் காவிரியின் வடகரையிலிருந்து தமிழ்நாட்டின் வட வெல்லைவரை ஆண்டு வந்தனர். புகழூர்க் கல்வெட்டு இச்சேரரின் கடைசி அரசர்களை நமக்கு அறிமுகப்படுத்துகின்றன. இக்கால அள வில் கங்கரும் புகுந்தனர். கன்னட நாட்டினரின் ஆட்சித் தாக்கத்தால் எல்லா ஊர்களிலும் காமிண்டர் என்று அழைக்கப்பட்ட பலர் உள் ளாட்சி நடத்தி வந்தார்கள். இன்று அவர்கள் பரம்பரையினர் கவுண்டர் என்ற செல்வாக்கு மிகுந்த தலைவர்களாக இருக்கின்றனர். கங்கரின் கன்னட தமிழ்க் கல்வெட்டுகள் இதை உணர்த்துகின்றன. பின் சோழ பாண்டியர் செல்வாக்கு மிகுந்த பொழுது கோநாட்டான் வழிவந்த மன் னர்கள் நீர்ப்பரப்பில் விளையும் நாணல்களைப் போல் வளைந்தும் பிறகு நிமிர்ந்தும் ஆட்சி செலுத்தினார்கள். சோழரிடமிருந்து கேசரி, பர கேசரி என்ற பட்டங்களையும் பாண்டியரிடமிருந்து வீரபாண்டியன், சுந் தர பாண்டியன் என்ற பெயர்களையும் இம்மன்னர்கள் வைத்துக் கொண்டனர். கடற்கரை வாய்க்கப் பெறவில்லை யாயினும் கொங்கின் வளம் மற்றப் பிராந்திய மன்னரைக் கவர்ந்து வருவது இன்றளவும் வர லாற்றில் ஊடுருவி நிற்கும் உண்மை.

முன் மூவர் தேவாரத்தைக் குறிப்பிட்டோம். சைவ சமயக் குரவர் நால்வரில் மாணிக்கவாசகரை மூவரோடு சேர்த்துக் கருதும் வழக்கு முத லில் இல்லை. ஆயினும் மாணிக்கவாசகரை மூவருக்கும் முற்பட்டவ ராகக் கொள்ளப் பல முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டிருக்கின்றன. அரிகேசரி வரகுணன் என்ற பாண்டிய அரசர்களோடு தொடர்புபடுத்தப் பட்ட மாணிக்கவாசகரை எப்படி அவ்வாறு கொள்ள இயலும்? வர

லாற்றில் நாம் அறிந்த இரு வரகுணரில் முன்னவன் 'பராந்தகன் பரம வைஷ்ணவன் தானாகி' என்று செப்பேட்டு வாசகத்தின்படி மாணிக்க வாசகரோடு தொடர்புடையவன் ஆகான். பின்னவன் தளவாய்புரம் (திருமங்கலம்) செப்பேட்டில் 'பிள்ளைபிறை சடைக்கணிந்த பினாக பாணி எம்பெருமானை உள்ளத்திலினிதிருவி உலகங்காக்கின்ற நாளில்' என்று சொல்வதிலிருந்து பரமசைவனாகி ஆட்சியிலிருந்தும் சிவனன்புமாட்சி பெற்று வாழ்ந்தான் என்று நாம் அறியலாம். எனவே வாதவூரடிகளாகிய மாணிக்கவாசகர் இரண்டாவது வரகுணன் காலத்த வர். ஆயினும் இது தொடர்பாக ஏன் இந்த மாணிக்கவாசகர் மட்டும் தனிப்பட்டவராகவே சைவ சித்தாந்த வழியிலும் வழிபடப்பட்ட முறையிலும் காணப்படுகின்றார். இது மேலும் ஆராயப்பட வேண்டிய தாகும்.

பெயர் மாற்றத்தில் அண்மையில் ஒரு புரட்சி நடந்தது. அது தொடர்பாக ஒரு சிறு ஆய்வில் நாடு ஊர்ப் பெயர்கள் இயற்கையின் தொடர்புடையன என்று அறிய நேர்ந்தது. திரு. சுப்பராயலு அவர்கள் பட்டியலிட்டுக்காட்டும் பெயர்களில் பெரும்பாலானவை இயற்கை யோடு தொடர்புடையன. பாச்சாற்றுப் போக்கு, நாட்டாற்றுப்போக்கு, தேனாற்றுப் போக்கு என்பன சிறிய ஆறுகளாலும், வடகரை, தென் கரை என்பவை பேராறுகளாலும் மாடக்குளக்கீழ், இராசிங்கன் குளக் கீழ் என்பவை நீர்நிலைகளாலும் சேரநாடு, கொங்குநாடு, தொண்டைநாடு, நடுநாடு, சோழநாடு, பாண்டிநாடு என்ற பெரும்பகு திகள் மன்னர் அல்லது மக்கள் பெயராலும் செங்குன்றக் கோட்டம், பல்குன்றக் கோட்டம் என்பவை குன்றுகளாலும், மிழலைக்கூற்றம், பாகனூர்க்கூற்றம் என்பவை ஆற்றிடைக் குறையானமையாலும் என்று இவ்வாறு சங்ககால மரபை ஒட்டி இயற்கையோடு பொருத்தப் பெயர் கொண்டன என்பதை அறியலாம்.

இப்பேர்ப்பட்ட ஆய்வுகள் பலவும் இன்னும் விரிவாகச் செய்து புத்தக வடிவில் வெளிக்கொண்டுவரத் திட்டமிடல் வேண்டும். நன்றி. வணக்கம்.

---

[1997 ஜூலை மாதம் ஈரோட்டில் நடைபெற்ற தமிழகத் தொல்லியல் கழக எட்டாவது கருத்தரங்கில் ஆற்றிய தலைமை உரை]

---

# 2. எகிப்து நாட்டில் தமிழில் எழுதிய தாழி

ஐராவதம் மகாதேவன், சென்னை.

எகிப்து நாட்டில் செங்கடல் கரையில் ரோமானியர் காலத்தில் பெரெனிகெ (Berenike) என்ற புகழ்பெற்ற துறைமுகம் இருந்தது. இத்து றைமுகத்தின் வழியாக ரோமானியக் கப்பல்கள் மேற்கில் மத்தியத ரைக் கடலோர நாடுகளுடனும், தெற்கில் ஆப்பிரிக்க நாடுகளுடனும், கிழக்கில் இந்திய நாட்டுடனும் வாணிபத்தில் ஈடுபட்டிருந்தன. கி.பி. முதல், இரண்டாம் நூற்றாண்டுகளில் இவ்வாணிபம் செழிப்பாக நடை பெற்று வந்தது என்று ரோமானிய ஆசிரியர்களான ஸ்ட்ரேபோ (Strabo), ப்ளைனி (Pliny) ஆகியோர் தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளார்கள். இக்க டல் வாணிபம் கி.பி.3-5 நூற்றாண்டுகளில் குறையத் தொடங்கி கி.பி. 6-ம் நூற்றாண்டில் நின்றுபோனது.

1994-95 ஆண்டுகளில் டெலாவேர் (Delaware) பல்கலைக்கழகமும் லெய்டன் (Leiden) பல்கலைக்கழகமும் இணைந்து இத் துறைமுகப் பகு தியில் அகழாய்வு நடத்தின. 1995-ல் நடந்த அகழ்வின்போது கிடைத்த ஒரு மதுச்சாடி (Amphora) துண்டத்தில் தமிழ்மொழியில் தமிழ்-பிராமி எழுத்துகளில் எழுதியுள்ள வாசகம் கண்டுபிடிக்கப்பட்டது. (படங்கள் 2.1, 2). அகழ்வின் ஆழம், கூடவே கிடைத்த ரோமானிய நாணயங்கள், மதுச்சாடியின் அமைப்பு ஆகியவற்றின் அடிப்படையில் சாடியின் காலம் சுமார் கி.பி.60-70 என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. தமிழ்-பிராமி எழுத்துகளின் கால வரையறை இவ்வளவு துல்லியமாக (ஒரு பத்தாண்டுக்குள்) கணிக்கப்படுவது இதுவே முதல் முறையாகும்.

இந்த அகழாய்வின் முதல்வர் பேராசிரியர் ஸ்டீவன் ஸைட்பாதம் (Steven Sidebotham) சாடியின் புகைப்படத்தை எனக்கு அனுப்பி தமிழ்-பிராமி வாசகத்தைப் படிக்க உதவி கோரினார். நான் எழுதிய கட் டுரை *Berenike 95* என்ற நூலில் வெளியாகியுள்ளது. அதன் சுருக்கத்தை இங்கு தந்திருக்கிறேன்.

மதுச்சாடித் துண்டத்தின் நீளம் 19.2 செ.மீ., அகலம் 14.3 செ.மீ. இதன் மீது ஐந்து தமிழ்-பிராமி எழுத்துகளும் இறுதியில் இரு பெருங் கற்காலக் குறியீடுகளும் ஆழமாகக் கீறப்பட்டுள்ளன. முதல் மூன்று எழுத்துகளின் தலைப் பகுதி ஓரளவு சேதமடைந்துள்ள போதிலும் அவற்றை அடையாளம் கண்டுகொள்ள முடிகிறது. வாசகம் வருமாறு:

கொற பூமான்**

*இதைக் கொ[ற்]ற[ப்] பூமான் என்று வாசிக்க வேண்டும். தமிழ் - பிராமி கல்வெட்டுகளில் பெரும்பாலும் மெய்யெழுத்துகள் இரட்டித்து எழுதப்படுவதில்லை. றகர, ணகரங்களைப் பயன்படுத்தியுள்ள இந்த வாசகம் தமிழில் எழுதப்பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை. கொற்ற(ன்) என்ற பெயர் தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளில் கிடைக்கிறது. (உ.ம்: கொற்றந்தை; புகளூர் கல்வெட்டுகள்). பூமான் என்பது 'அரசன்' என்று பொருள் தரும் வடமொழிச் சொல்லாகும் (தமிழ்ப் பேரகராதி). கொற்றமான் என்ற பெயர் பிற்காலத் தமிழ்க் கல்வெட்டில் கிடைத்துள்ளது (இக. 1921, எண்.409).*

*சில ஆண்டுகளுக்கு முன்னர், எகிப்து நாட்டின் செங்கடல் கரையில் பெரெனிகெ துறைமுகத்திற்கு வடக்கில் க்வெஸிர் அல்-காதிம்* (Quseir al-Qadim)) *என்ற இடத்தில் அமைந்திருந்த பண்டைய ரோமானியத் துறைமுகத்தை அகழாய்வு செய்தபொழுது அங்கிருந்து சாதன் (சாத்தன்), கணன் (கண்ணன்) என்று தமிழில் தமிழ்-பிராமி எழுத்துகளால் எழுதப்பட்ட இரு பானைத்துண்டுகள் கிடைத்தன. அவையும் கி.பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்தவை. இதே பெயர்கள் இதே கால கட்டத்தில் அரிக்கமேட்டு பானைக் கீறல்களில் கிடைத்திருப்பதையும் இங்கு நினைவுகூரலாம்.*

*சங்க காலத்தில் தமிழகத்திற்கும் ரோமாபுரிக்கும் இடையே நடைபெற்ற செழிப்பான கடல் வாணிபத்திற்கு இவை நேரிடைச் சான்றுகளாகும்.*

---

**துணைநூல்:**

*Berenike 95: Preliminary Report on the excavation of Berenike.* By Steven Sidebotham & Willemina Wendrich, Leiden, 1996.

---




படம் 2.1: எகிப்து நாட்டில் பெரெனிகெ துறைமுகத்தில் கிடைத்த ரோமானிய மதுச்சாடி. (நன்றி. *Berenike* 95, ப. 206)




படம் 2.2: ரோமானிய மதுச்சாடியில் தமிழ்-பிராமி எழுத்துகள். (நன்றி. *Berenike* 95, ப. 207 - மூலத்தின் வரைபடம்)

# 3. எடக்கல் குகைக் கல்வெட்டுகள்

ஐராவதம் மகாதேவன், சென்னை;
சு. சுவாமிநாதன், மைசூர்.

**முன்னுரை**

கேரளத்தில் இதுவரை கிடைத்துள்ள கல்வெட்டுகளைப் பற்றிய ஆய்வுநூல்களில் கி.பி.9-ம் நூற்றாண்டிலிருந்துதான் அவை கிடைக்கத் தொடங்குகின்றன என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டுக ளாக டி.எ. கோபிநாத ராவ் திருவாங்கூர் தொல்லியல் தொகுப்புகளில் வெளியிட்ட கட்டுரைகளையும், கல்வெட்டுகளில் மலையாள மொழி யின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் ஆய்வு செய்த ஏ. சந்திரசேகர், கே. ரத்னம்மா ஆகியோரின் நூல்களையும் குறிப்பிடலாம்.

ஆயினும் இக்கால கட்டத்திற்கு மிகவும் முன்னதாகவே கேரளத் தில் கல்வெட்டுகள் தோன்றிவிட்டன என்பதைக் காட்டும் சில பழைய குறிப்புகள் எங்களுக்கு அண்மையில் கிடைத்தன. அவற்றின் அடிப்ப டையில் கேரளத்தின் மிகப் பழைய கல்வெட்டுகளை நேரிடையாக மீண்டும் ஆய்வு செய்து சரியான வாசிப்புகளுடன் வெளியிட வேண் டும் என்ற நோக்கத்துடன் 1995-96-ல் ஒரு வல்லுநர் குழு எடக்கல் மலைக் குகையில் இருமுறை கள ஆய்வு செய்தது. அதில் ஐராவதம் மகாதேவன் (சென்னை), டாக்டர். சு.சுவாமிநாதன் (மைசூர்), பேராசி ரியர்கள் ராகவ வாரியர் (கோழிக்கோடு), ராஜன் குருக்கள் (கோட்ட யம்), ஆ. சீதாராமன் (தஞ்சாவூர்) ஆகியோர் பங்கேற்றனர். இக்கள ஆய்விற்குப் பலவகைகளிலும் உதவி செய்த திரு. மாதவ் கட்டி, டாக் டர். எம்.டி. சம்பத் (மையத் தொல்லெழுத்தியல் துறை, மைசூர்), வய நாடு மாவட்டக் கலெக்டர் திரு. விஸ்வாஸ் மேத்தா, இ.ஆ.ப., ஆகியோருக்கு எங்கள் குழுவின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**எடக்கல் மலைக் குகை**

கேரள மாநிலத்தில் வயநாடு மாவட்டத்தில் சுல்தான் பத்தேரி என்ற நகரத்திற்கு 6 கி.மீ. தென்மேற்கில் எடக்கல் மலை உள்ளது. இது கர்நாடகம், கேரளம், தமிழ்நாடு ஆகிய மூன்று மாநிலங்களின் சந்திப் பிற்கு (trijunction) மிக அருகில் அமைந்துள்ளது தனிச் சிறப்பாகும். மலையின் உச்சி கடல் மட்டத்திற்கு 4000 அடிக்கு மேலும், தரை மட் டத்திற்கு 1500 அடிக்கு மேலும் உள்ளது. மலையுச்சிக்குச் சற்றுக்கீழாக இரு இயற்கைக் குகைகள் ஒன்றன்மேல் ஒன்றாக இரு தளங்களில்

அமைந்துள்ளன. ஏறும் பாதை மிகவும் கடினமானது. ஆங்காங்கே செங்குத்தாக இருக்கும் பாறைச் சரிவுகளில் ஏறுவதற்கு வசதியாக உயரமான இரும்பு ஏணிகளைப் பொருத்தியிருக்கிறார்கள். கீழ்க் குகையில் ஒரு வற்றாத சுனை உள்ளது. மேல் குகை மிகவும் விசாலமாக ஒரு பெரிய மண்டபம் போலக் காட்சியளிக்கிறது.

மேல் குகையில் வடக்கிலும் தெற்கிலுமாக அமைந்துள்ள நீண்ட பாறைச் சுவர்களில் கற்கால ஓவியங்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. இவை கற்கால மனிதர்களால் கூரிய கல் உளிகளைக் கொண்டு கோடுகளாகக் கீறி வரையப்பட்டுள்ளன. இவற்றைக் காண நம் நாட்டிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் சுற்றுலாப் பயணிகள் வருகின்றனர்.

1894-ல் மலபார் மாவட்ட காவல்துறைத் தலைவராகப் பணியாற்றிய ஃபாஸெட் (F. Fawcett) என்ற ஆங்கிலேய அதிகாரி தான் முதன் முதலாக இக்குகையிலுள்ள கற்கால ஓவியங்களைத் தற்செயலாகக் கண்டுபிடித்தார். அவர் அக் குகைக்குப் பலமுறை சென்று ஓவியங்களின் ஒளிப்படங்களையும் கண்படிகளையும் எடுத்து அவற்றைப் பற்றி *இந்தியன் ஆன்டிக்வெரி* (*Indian Antiquary*, Vol.XXX) என்ற இதழில் 1901-ல் ஓர் அரிய ஆய்வுக் கட்டுரையை வெளியிட்டார். கற்கால ஓவியங்களுக்கு இடையிலேயே ஆங்காங்கு காணப்பட்ட கல்வெட்டுகளையும் அவர் கண்டுபிடித்து அவற்றின் புகைப்படங்களை அன்றைய மையத் தொல்லெழுத்தியல் துறைத்தலைவரான ஹுல்ஷ் (E. Hultszch) துரைக்கு அனுப்பிவைத்தார். அவரும் அக் கல்வெட்டுகளின் மசிப்படங்களை எடுக்க ஏற்பாடு செய்து அவற்றைப் பற்றி ஒரு சிறு குறிப்பைத் தொல்லெழுத்தியல் துறையின் 1897-ம் ஆண்டறிக்கையில் வெளியிட்டார் (எண்.120-123). கல்வெட்டுகளின் மசிப்படங்களும் (படம் 3.1) அவற்றைப் பற்றி ஹுல்ஷ் தெரிவித்த கருத்துகளும் ஃபாஸெட் 1901-ல் எழுதிய ஆய்வுக் கட்டுரையில் இடம் பெற்றுள்ளன.

**சம்ஸ்க்ருதக் கல்வெட்டு**

அக் கல்வெட்டுகளில் ஒன்று சம்ஸ்க்ருத மொழியில் தென் பிராமி எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளது. அதை மட்டுமே ஹுல்ஷ் வாசித்து விளக்கியிருக்கிறார். அதன் வாசகம் வருமாறு:

**3:1** விஷ்ணு வர்ம்ம குடும்பி$_3$ய குல வர்த்த$_4$ நஸ்ய லிகி$_2$த (படம் 3.1.)

இதன் பொருள் 'ஸ்ரீ விஷ்ணுவர்மனின் குடும்பமும் குலமும் வளர எழுதியது' என்பதாகும். (ஹுல்ஷ் 'குடும்பிய' என்பதை ஒரு குலத்தின் பெயராகக் கருதியிருக்கிறார்.) இம் மன்னன் கதம்ப குலத்தைச் சேர்ந்தவன் என்றும், இக் கல்வெட்டின் காலம் சுமார் கி.பி.5-ம் நூற்றாண்டின் இறுதி என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர். இதுவே இது வரை கேரளம் உள்ளிட்ட பண்டைத் தமிழகத்தில் கிடைத்துள்ள

வடமொழிக் கல்வெட்டுகளில் காலத்தால் முந்தையது என்பதை இங்கு குறிப்பிடவேண்டும்.

**தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள்**

மேலும் இரு கல்வெட்டுகள் குகையின் வடக்குப் பாறைச் சுவரில் உள்ள ஒரு பிளவிற்கு இருபுறமும் ஒரே வரியில் எழுதப்பட்டுள்ளன. வலதுபுறக் கல்வெட்டு ஏற்கனவே இருந்த கீற்று ஓவியங்களின் மேலேயே பொறிக்கப்பட்டுள்ளது. (படம் 3.1.4) இவை 'மிகவும் பண்டைய எழுத்துகளில்' உள்ளன என்றும் தம்மால் வாசிக்க இயலவில்லை என்றும் ஹுல்ஷ் குறிப்பிட்டிருக்கிறார். இதுவரை வாசிக்கப்படாத இக் கல்வெட்டுகளை நேரில் ஆய்வு செய்யவே எங்கள் குழு எடக்கல் குகைக்கு 1995 அக்டோபர் மாதத்திலும், மீண்டும் 1996 பிப்ரவரி மாதத்திலும் சென்றது. ஆனால் மிகுந்த கவனத்துடன் தேடிப்பார்த்த பிறகும் இக் கல்வெட்டுகளை எங்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. சுற்றுலாப் பயணிகள் இக் கல்வெட்டுகளின் மேலேயே தங்கள் பெயர்களைக் கிறுக்கியிருப்பதால் கல்வெட்டுகள் முற்றிலுமாக அழிந்துவிட்டன என்று தெரிந்து மிகவும் வருந்தினோம். ஆயினும் தமிழகத்தின் தவப் பயனாக நூறாண்டுகளுக்கு முன்னரே ஹுல்ஷ் எடுத்த மசிப்படங்களின் அச்சுப்பிரதி மட்டும் ஃபாஸெட் எழுதிய கட்டுரை மூலமாக எஞ்சியுள்ளது. (இந்த மசிப்படங்களின் மூலப் பிரதிகள் இப்பொழுது மைசூரில் மையத் தொல்லெழுத்தியல் துறையில் இல்லை).

இக் கல்வெட்டுகளின் வாசகங்கள் வருமாறு:

**3:2** கோ பூதி விர (படம் 3.1.4, இடதுபுறம்)

**3:3** கோ வா தான் (படம் 3.1.4, வலதுபுறம்)

இக் கல்வெட்டுகளை 'கோ பூதி வீர(ன்)' என்றும் 'கோ வாதன்' அதாவது 'கோ ஆதன்' என்றும் வாசிக்க வேண்டும். இக் கல்வெட்டுகளின் காலம் சுமார் கி.பி.2-3 நூற்றாண்டுகளாகும். இவையே கேரளம் உள்ளிட்ட பண்டைத் தமிழகத்தில் முதன் முதலாகக் கண்டுபிடிக்கப்பட்ட தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளாகும்.

கோ பூதி வீரன் ஒரு வேளிர் குலத் தலைவனாக இருக்கலாம். பிற்கால வேளிர் கல்வெட்டுகளில் பூதி என்ற பெயர் காணப்படுகிறது. (உ-ம்.: பூதி விக்கிரம கேசரி; கொடும்பாளூர்க் கல்வெட்டுகள்). கோ ஆதன் ஒரு சங்க காலச் சேர மன்னனின் பெயர் என்பதில் ஐயமில்லை. ஆதன் என்ற பெயர் சங்க காலச் சேர மன்னர் பலருக்கு இருந்தது. (உ-ம்: சேரலாதன்). இவன் அவர்களில் ஒருவனாக இருக்கக் கூடும். புகளூர் இரும்பொறைக் கல்வெட்டுகளில் கோ ஆதன் என்று மன்ன



படம் 3.1.1-4: எடக்கல் குகைக் கல்வெட்டுகள். இம் மசிப்படிகள் 1897-ல் எடுக்கப்பட்டு 1901-ல் வெளியிடப்பட்டவை. (*Indian Antiquary*, Vol.XXX).

னின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளதை இங்கு ஒப்பிட்டுப் பார்க்கலாம். இக் கல்வெட்டுகள் ஏறத்தாழ சம காலத்தவையாகும்.

இப்பொழுது அழிந்துவிட்ட மேற்கூறிய இரு கல்வெட்டுகளைத் தேடும்போது குகையின் வடக்குப் பாறைச் சுவரிலேயே உள்ள மேலும் இரு தமிழ்- பிராமிக் கல்வெட்டுகளை எங்கள் குழுவினர் முதன் முறை யாகக் கண்டுபிடித்துள்ளனர். இக் கல்வெட்டுகளும் கி.பி.2-3-ம் நூற் றாண்டைச் சார்ந்தவையாகும். அவற்றின் வாசகங்கள் வருமாறு:

**3:4** ஒபனப விர அ (படம் 3.2)

**3:5** கடும்மிபுத சேர* (படம் 3.3)

(*இங்கு ஒரு குறியீடு உள்ளது.)

4-ம் கல்வெட்டை ஒ[ப்]பன[ப்]ப வீர-அ என்று வாசித்து 'ஒப்ப னப்ப வீரனுடைய' என்று பொருள் கொள்ளவேண்டும். இவன் சேர மன்னனின் படை வீரருள் ஒருவனாக இருக்கலாம். ஒப்பன் என்றால் 'அழகியவன்' என்று பொருள். 'ஒப்பு உடை ஒருவனை' என்பது தேவார வாக்கு (474:7). அப்பன் என்ற சொல் மதிப்பைக் குறிக்கும் பின் னொட்டு. பெயரின் இறுதியில் காணப்படும் -அ என்ற உருபு பண் டைத் தமிழில் ஆறாம் வேற்றுமையைக் குறித்தது.

5-ம் கல்வெட்டு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. கல்வெட்டே 'சேர' என்று குறிப்பிடுவதாலும், தமிழ்-பிராமி எழுத்துகளில் இக் கல் வெட்டு உள்ளதாலும் இவன் சங்ககாலச் சேரமன்னன் என்று தெளிவா கத் தெரிகிறது. இதுவே கேரளம் உள்ளிட்ட பண்டைத் தமிழகத்தில் 'சேர' என்ற குலப் பெயரைச் சுட்டும் ஒரே தமிழ்-பிராமிக் கல்வெட்டா கும்.

கடும்மிபுத என்ற சொல்லில் தமிழும் பிராகிருதமும் கலந்துள்ளது. ஜம்பை தமிழ்-பிராமிக் கல்வெட்டில் அதியன் நெடுமான் அஞ்சி 'ஸதி யபுதோ' என்று அழைக்கப்படுவதை இங்கு ஒப்பிட்டுப் பார்க்கலாம். கடும்மி என்பதை கடும் அல்லது கடுமி என்ற தமிழ்ச் சொல்லாக கொள்ளலாம் (உ-ம்: நெடும் >நெடுமி). புத என்ற பிராகிருதச் சொல் சம்ஸ்கிருதத்தில் புத்திர என்ற சொல்லுக்கு நேரானது. அதைத் தமிழில் 'மகன்' என்று மொழி பெயர்க்கலாம். மகன் என்ற சொல் மான் என் றும் திரியும் (உ-ம்: பெருமகன் > பெருமான்). கடும்மிபுத என்பதைத் தமிழில் கடும்-மகன் அதாவது கடுமான் என்று எடுத்துக் கொள்ளலாம். ஆகவே இக் கல்வெட்டு கடுமான் சேர[ன்] என்ற சேரவேந்தனைக் குறிப்பிடுகிறது. பெயரின் இறுதியில் வரையப்பட்டுள்ள குறியீடு சேர ரின் சின்னமாகிய பனையைக் குறிப்பதாக இருக்கலாம். (இக் கல்



படம் 3.2: எடக்கல் குகையில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு தமிழ்-பிராமிக் கல்வெட்டு. (மசிப்படியும் நேரடியாக விளம்பிய வரைபடமும்).

வெட்டின் இடையில் காணப்படும் நீண்ட கோடு ஏற்கனவே பாறையில் கீறப்பட்ட ஓவியத்தின் பகுதியாகும்).

சங்க நூல்களில் சேர மன்னர் இருவருக்கு கடுமான் என்ற அடைமொழி தரப்பட்டுள்ளது. மாந்தரஞ் சேரலிரும்பொறை 'கடுமான் பொறைய' என்று அழைக்கப்படுகிறான் (புறம். 53:5). சேரமான் குட்டுவன் கோதை 'கடுமான் கோதை' என்று விளிக்கப்படுகிறான் (புறம். 54:8). நாணயவியல் அறிஞர் திரு. இரா. கிருஷ்ணமூர்த்தி அண்மையில் குட்டுவன் கோதையின் வெள்ளி நாணயத்தை வெளிப்படுத்தியிருக்கிறார். கடும்மிபுத சேர என்னும் கடுமான் சேரன் மேற்குறித்த இரு சேர மன்னர்களில் ஒருவனாக இருத்தல் கூடும். இக் கருத்து மேலும் ஆய்வுக்குரியது.

கடுமான் என்ற சொல்லுக்கு 'வேகமான குதிரை' என்று உரையாசிரியர்கள் பொருள் கூறியிருப்பது எல்லா இடங்களிலும் பொருத்தமாக அமையவில்லை. எடுத்துக்காட்டாக 'கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி' (புறம். 206:6) என்ற இடத்தைக் குறிப்பிடலாம். சங்க காலத்தில் வேந்தர்களுக்கும் குறுநில மன்னர்களுக்கும் கொடுக்கப்பட்ட மதிப்பைக் காட்டும் ஓர் அடைமொழி என்றே இதை எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த அடைமொழி 'கடுமையானவன்' என்ற பொருளைத் தருகிறது. மேலும் எடக்கல் கல்வெட்டில் காணப்படும் புத என்ற சொல் மான் (மகன்) என்ற தமிழ்ச் சொல்லின் வடமொழியாக்கம் என்பதும் அதற்கு 'குதிரை' என்ற பொருள் இல்லை என்பதும் இங்கு குறிப்பிடப்படும் கருத்தை உறுதி செய்வதாக அமைந்துள்ளது.

**தொடக்க கால வட்டெழுத்துக் கல்வெட்டுகள்**

எடக்கல் குகையின் தெற்குப் பாறைச் சுவரில் உள்ள சம்ஸ்கிருதக் கல்வெட்டுக்கு அருகிலேயே இரு தமிழ்க் கல்வெட்டுகள் தொடக்க கால வட்டெழுத்துகளில் ஆழமாகவும் தெளிவாகவும் பொறிக்கப்பட்டுள்ளன. எழுத்தமைதியிலிருந்து இவை சுமார் கி.பி. 5-6-ம் நூற்றாண்டுகளைச் சார்ந்தவை என்று கூறலாம். ஹுல்ஷ் இக்கல்வெட்டுகளின் மசிப்படிகளை எடுத்திருக்கிறார்; ஃபாஸெட் அவற்றைத் தம் கட்டுரையில் வெளியிட்டிருக்கிறார். இக்கல்வெட்டுகளின் வாசகங்கள் வருமாறு:

**3:6** பல்புலி தாத்த காரி (படம் 3.1.2)

**3:7** வெங்கோமலை கச்சவநு சத்தி (படம் 3.1.3)

6-ம் கல்வெட்டை ஹுல்ஷ் முதலில் பலம்புலி தாநந்த காரி என்றும் பிறகு பல்புலி தான் - அந்தகாரி, அதாவது 'பல புலிகளைத் தானே அழித்தவன்' என்றும் இருவிதமாக வாசித்துள்ளார். இக் கல்வெட்டில்



படம் 3.3: எடக்கல் குகையில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட மற்றொரு தமிழ் பிராமிக் கல்வெட்டு. (மசிப்படியும் நேரடியாக விளம்பிய வரைபடமும்).

மெய்யெழுத்துகளின் மீது காணப்படும் இரு புள்ளிகளையும் அவர் கிரந்த எழுத்துகளில் வரும் அநுஸ்வாரம் என்று முதலிலும், பிறகு முதல் புள்ளியைத் தமிழில் வரும் புள்ளியாகவும், இரண்டாவது புள்ளியை கிரந்தத்தில் வரும் அநுஸ்வாரம் ஆகவும் வாசித்துள்ளதால் அவருடைய வாசிப்பு சரியாக அமையவில்லை. தமிழ்க் கல்வெட்டுகளில் கிரந்த அநுஸ்வாரம் வராது. ஆகையால் இக்கல்வெட்டை நாங்கள் மேற்கூறியவாறு திருத்தி வாசித்துள்ளோம். *பல்புலி* என்ற ஊரைச் சார்ந்த *தாத்த காரி* என்பவன் இக் கல்வெட்டைப் பொறித்துள்ளான். *தாத்த* என்ற சொல் வடமொழியில் 'தகப்பன்' என்று பொருள்படுகிறது. *காரி* என்ற பெயர் 'கரிய நிறத்தினன்' ஆகிய மால் அல்லது கண்ணனைக் குறிக்கும்.

7-வது கல்வெட்டைத் தம்மால் வாசிக்க முடியவில்லை என்று ஹுல்ஷ் கூறியிருக்கிறார். ஆயினும் பெரிய எழுத்துகளில் தெளிவாக வெட்டப்பட்டுள்ள இந்த வட்டெழுத்துக் கல்வெட்டை எங்களால் எளிதாகவே வாசிக்க முடிந்தது.

இக்கல்வெட்டில் வெங்கோமலை என்ற இடத்தைச் சேர்ந்த கச்சவநு சத்தி என்பான் குறிக்கப்படுகிறான். வெங்கோராஷ்ட்ரம் என்ற நிலப்பகுதி ஆந்திரக் கிளையைச் சார்ந்த பல்லவ சிம்மவர்மனின் மாங்களூர்ச் செப்பேடுகளில் குறிப்பிடப்படுகிறது. வெங்கோமலை அந்த நிலப்பகுதியைச் சார்ந்ததாக இருக்கலாம். எடக்கல் குகையில் சம்ஸ்க்ருதக் கல்வெட்டில் குறிப்பிடப்படும் கதம்ப அரசன் விஷ்ணுவர்மன் காஞ்சி பல்லவமன்னன் இரண்டாம் சிம்மவர்மனுக்கு கீழிருந்து ஆண்டவன். மேலும் இதே விஷ்ணுவர்மன் எடக்கல்லுக்கு அருகிலுள்ள கூடலூரில் முகாமிட்டிருந்தபோது அளித்த செப்பேடுகளும் கிடைத்துள்ளன (ஹெர்பத செப்பேடுகள்). **கச்சவநு** என்ற பேச்சுமொழி வழக்கு கச்சவன் என்ற பெயரைக் குறிக்கிறது. இது ஒரு கோத்திரப் பெயராகும். பிற்காலக் கல்வெட்டுகளில் இப்பெயர் கசவன், கச்சுவன், காச்சுவன், காச்சுவந் என்று பலவாறாக எழுதப்பட்டுள்ளது (உ-ம்: திருப்பைஞ்ஞீலி குடைவரைக் கல்வெட்டுகள்). சத்தி என்பது சக்தி என்ற வடசொல்லின் தமிழாக்கம். பிற்காலக் கல்வெட்டுகளிலும் சத்தி என்ற பெயர் காணப்படுகிறது (உ-ம்: காடவர்கோன் சத்தி). இக்கல்வெட்டில் வரும் மூன்று மெய்யெழுத்துக்களின் மீதும் புள்ளியிடப்பட்டுள்ளது.

**முடிவுரை**

எடக்கல் மலைக்குகையிலுள்ள சம்ஸ்க்ருதக் கல்வெட்டைப் பற்றிக் கடந்த காலத்தில் சில ஆய்வுகள் வெளியாகியுள்ளன. ஆனால் இதே குகையில் பொறிக்கப்பட்டுள்ள ஆறு தமிழ்க் கல்வெட்டுகள் ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக அறிஞர்களின் கவனத்தை ஈர்க்கவில்லை.

எங்களுக்குத் தெரிந்தவரை 1897-1901 ஆண்டுகளில் ஹுல்ஷ் நடத்திய ஆய்வுக்கும் 1995-96 ஆண்டுகளில் எங்கள் குழுவினர் மேற்கொண்ட மீளாய்வுக்கும் இடைப்பட்ட காலத்தில் இக் கல்வெட்டுகளை எவரும் படியெடுத்ததாகவோ ஆய்வு செய்ததாகவோ சான்றுகள் இல்லை. இதற்கிடையில் எடக்கல் குகையிலுள்ள இரு முக்கியமான தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள் அழிக்கப்பட்டுவிட்டன. எஞ்சியுள்ளவைகளையாவது தகுந்த முறையில் இரும்புவேலி அமைத்துப் பாதுகாக்க வேண்டும் என்று கேரள அரசிற்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறோம். கேரள அரசும் ஆவன செய்வதாக எங்களுக்கு உறுதியளித்துள்ளது.

---

**நூற்பட்டியல்**


Chandra Sekhar, A., *Evolution of Malayalam*, Poona, 1953.

Fawcett, F., 'Notes on rock carvings in the Edakkal Cave, Wynaad', *Indian Antiquary*, Vol. XXX (1901), pp.409-21 (Reprint).

Gopinatha Rao, T.A., *Travancore Archaeological Series*, Vols. I-III, 1988-92 (Reprint), Govt. of Kerala, Thiruvananthapuram.

மகாதேவன், ஐ., 'கேரளத்தில் சங்ககாலச் சேரர் கல்வெட்டுகள்', *தினமணி*, சென்னை, 9.2.97.

Mahadevan, I., 'The Earliest Inscriptions of Kerala.', *Presidential Address, XXIV Annual Conference of the Epigraphical Society of India*, Trissur, May 1998.

Retnamma, K., *Early Inscriptional Malayalam*, Dravidian Lingustics Association, Thiruvananthapuram, 1994.

# 4. முதல் இராசேந்திர சோழனின் காப்பலூர் கல்வெட்டு

*ம. காந்தி, வேலூர்;*
*ப. வெங்கடேசன், பாணாவரம்.*

இடம் : *திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டம், காப்ப லூர் என்னும் ஊரில், திருக்காமீசுவரர் கோயிலில், 1.85 மீ. நீளமும், 1.38 மீ. அகலமும் கொண்ட கற்பலகையில் வெட்டப்பட்ட கல்வெட்டு.*

காலம் : *முதலாம் இராசேந்திர சோழன், கி.பி. 1028.*

செய்தி : *முதலாம் இராசேந்திர சோழனின் சேனாதிபதிகளில் ஒரு வனாகிய இராஜராஜ பிரம்மராயரின் கூலிச் சேவகன் சேந் தன்குமரன் என்பவன் காப்பலூரிலுள்ள திருக்காமை நக்கர் கோயிலில் அமைந்துள்ள தட்சிணாமூர்த்திக்கு விளக்கு ஒன்று வைத்து அதற்காக 90 ஆடுகளை விட்டுள் ளான். காரம்பிசெட்டு, திருவியலூர் தசப்பிரியபட்டன், பிராமணர் செம்பிராட்டிச் சாரணி, புள்ளளூர் தத்தயகிரம வித்தன் முதலானோர் இராசேந்திர சோழ நந்தவனம் அமைக்க 335 குழி நிலமும் தட்சிணாமூர்த்திக்கு தினமும் மூன்று வேளை பூசை செய்ய 1024 குழி நிலமும் தானமாக வழங்கியுள்ளார்.*

**முதல் பக்கம்**

[1-31. 'ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னிவளர' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி]

**இரண்டாவது பக்கம்**

32. ப்பொருதண்டாற்கொண்ட கோப்பரகேசரிபமராந உடையார் ஸ்ரீராஜேந் திர
33. சோழதேவற்கு யாண்டு 19-ஆவது ஜயங்கொண்ட சோழமண்டலத்து ப
34. ங்கள நாட்டு காமப்புல்லூரான ராஜசூளாமணி சதுர்வேதிமங்கல
35. த்து உடையார் ஸ்ரீ கயிலாயமுடைய திருகாமைநகர் கோயிலில் தக்ஷ
36. ணாமூர்த்திகளுக்கு சேநாபதி ராஜ ராஜராஜ பிரமராயர் கூலிச் சேவ
37. கன் சேந்தன் குமரன் வய்ப்பித்த திருநந்தா விளக்கு ஒன்றுக்கு வைத்த
38. ஆடு தொண்ணூறு இவ்வாடு தொண்ணூறுங் கைக்கொண்டு சந்திராதித்த
39. வர் திருநந்தாவிளக்கு ஒன்றும் எரிப்பதானோம் இவ்வூர் சிவபிராமணர்
40. பராங்குஜ நாராயணபட்டனும் இவன் தம்பிமாருமுள்ளிட்ட சிவபிராம ணரோ

41. ம் இராஜசூளாமணிச் சருபேதி மங்கலத்து சபையோம் எங்களூர்
42. ஸ்ரீகயிலாயமுடைய திருக்காமை நக்கர்க்கு திருநந்தவானமாக நிலமாவது நா
43. ங்கள் காரம்பிசெட்டு திருவியலூர் தசபிரியபட்டன் பிராமணிச் செம்பி ராட்ட
44. ச்சாரணி பக்கலும் புள்ளளூர்த் தத்தியகிரமவித்தனும் தம்பிமாரு பக்கலும்
45. விலைகொண்டுடைய குதிரைவட்டத்தில் நிலம் ஸ்ரீராஜேந்திர சோழன்
46. திருநந்தவான மென்று திருநாமஞ் சாத்திக் குடுத்த குழி முன்னூற்று முப்ப
47. த்தைந்து இக்குழி முன்னூற்று முப்பத்தஞ்சு குழியும் திருநந்தவானமாகக் குடு
48. த்தோம் சபையோம் தக்ஷிணாமூர்த்திகளுக்கு மூன்று சந்தியும் அர்ச்ச
49. னைக்கு உச்சியம்போது நானாழி அரிசியால் திருவமுர்துங் கறியமு தொன்று நெய்
50. அமுதிரு செவிடுந் தயிரமுதுரியு மடைக்காயமுதிரண்டு மிலையமுது நாலு
51. க்கு வைத்த நிலமாவது தொழக்குன்றத்து ஸ்ரீராஜராவதிக்கு மேற்கு கொற் றின வாயி
52. க்காலுக்கு வடக்கு மூன்றாங்கண்ணாற்றஞ் சதுரத்து சேவகர் நிலங்காலில் குடிப்போகி
53. ற இறைகிடந்த நிலம் கிழக்கடைய இரண்டுமா நீக்கி மேற்கடைய மூன்று மாவில் சுற்று
54. க்கேணி தேவர்க்கு வடக்கடைய ஒரு மா நீக்கி இதனோடுமடைய நிலமி ரண்டு மாவி
55. ல் குழி ஆயிரத்திருபத்திநாலும் பொன்னிருகழஞ்சும் வைத்தோம் சபை
56. யோம் இன்னிலமுமிப் பொன்னுங் கொண்டுமின்னிவந்தம் சந்திராதித்த
57. வல் சம்மாதப்படி செலுத்தக்கடவார் இவ்வூர் சிவபிராமணர் பராங்கு
58. ஜ நாராயண பட்டனுமிவன் தம்பி பெரியானு மிக்குடி நம்பிமுள்ளிட்டார் இது மகாகேச்வர ரக்ஷை.

---

# 5. இலங்கையில் ஐந்நூற்றுவர் கல்வெட்டுகள்

**எ. சுப்பராயலு, தஞ்சாவூர்;**
**ப. சண்முகம், சென்னை.**

தோக்கியோ (ஜப்பான்) தைஷோ பல்கலைக்கழகத்தின் சார்பாக பேராசிரியர் நொபொரு கராஷிமா அவர்கள் தலைமையில் மேற்கொள் ளப்பட்ட 'இடைக்காலத்தில் இந்துமாக்கடலில் வணிக நிகழ்ச்சிகள்' என்ற ஆய்வுத்திட்டத்திற்காக இலங்கையில் 1987 ஆகஸ்டு மாதம் செய்த கள ஆய்வில் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகளுள் நான்கு இங்கே தரப்படுகின்றன*. நான்கும் ஐந்நூற்றுவர் என்ற தென்னிந்திய வணிகக்குழு தொடர்பானவை. இவை ஏற்கனவே யாழ்ப்பாண பல்க லைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் அ. வேலுப்பிள்ளை அவர்களால் வெளியிடப்பட்டுள்ளன[1]. வேலுப்பிள்ளையின் பாடங்கள் மிகவும் குறைபாடுடையவை ஆதலால் புதிய பாடங்கள் இங்கு மீண்டும் வெளி யிடப்படுகின்றன. இக்கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ள கற்கள் பல நூறாண்டுகள் வெயிலிலும் மழையிலும் கிடந்தமையால் எழுத்து கள் ஆங்காங்கு தேய்ந்தும் உதிர்ந்தும் காணப்படுகின்றன. அதனால் பாடம் முழுமையாகக் கிடைக்கவில்லை. இருப்பினும் பொருள் பெரும்பாலும் விளங்குகிறது எனலாம்.

இக் கல்வெட்டு எதிலும் அரசன் பெயரோ, வேறு காலக் குறிப்போ இல்லை. எழுத்தமைதியைக் கொண்டு கி.பி.1100-1150க்குள் இவை களை அடக்கலாம். இவ்வைம்பது ஆண்டுகள் இலங்கையில் ஓர் உள் நாட்டுப் போர் நடந்து வந்தது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

நான்கு கல்வெட்டுகளும் வீரகொடியாரை முன்னிறுத்திப் பேசுகின் றன. வீரகொடியார் ஐந்நூற்றுவர் வணிகக்குழுவினர்க்கு காவற்பணி புரிந்த படையினர். இவர்கள் பதினெண்பூமிவீரர், எறிவீரர் என்றும் அழைக்கப்பட்டனர். இவர்களால் பெருமக்கள் என்று மரியாதையுடன் அழைக்கப்படும் ஐந்நூற்றுவர் சில நெருக்கடியான நேரங்களில் இவர்க

---

*இக்கல்வெட்டுகளை வெளியிட அனுமதியளித்த பேரா. கராஷிமா அவர்களுக்கு நன்றி. இத்திட்டக்குழுவில் ஓர் உறுப்பினராக இருந்த பேராதனைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் S. பத்மநாதன், கல்வெட்டுகளைப் படியெடுக்கவும் பெயர்த்தெழுதவும் உறுதுணையாக இருந்தார். கல்வெட்டுப் பாடங்களைச் சரிபார்ப்பதில் மிகவும் உதவிபு ரிந்த தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையைச் சேர்ந்த முனைவர். சு. இராச கோபால், முனைவர்.வெ. வேதாசலம் ஆகியோருக்கு மிக்க நன்றி.

ளுக்கு உதவிசெய்து காப்பாற்றியுள்ளனர். அத்துடன் வீரகொடியாரை ஊக்குவிக்கும் வகையில் தங்கள் நகரத்துக்கு எறிவீர பட்டினம் அல்லது எறிவீர தானம் என்று பெயரிடல், தங்கள் தெய்வமான லோகமாதா (அல்லது பரமேசுவரி) கோயிலுக்கு வீரமாகாளம் என்று பெயரிடல் போன்ற சிறப்புகளும் செய்தனர். அச்சிறப்பை மனங்கொண்டு அதற்கு நன்றிக்கடன் செய்யும் வகையில் வீரகொடியார் தாங்கள் பணிபுரியும் ஊர்களில் தாங்கள் அனுபவித்து வந்த சில உரிமைகளை விட்டுக்கொடுத்தனர் அல்லது அவ்வூர்களில் உள்ள பரமேசுவரி கோயிலுக்கும் புத்தப் பள்ளிக்கும் தங்களுடைய வழக்கமான ஊதியத்தை (எண்ணை, காசு) கொடையாகக் கொடுத்தனர்.

## 5:1

இடம் : வடமாதளே மாவட்டம், கந்தபள்ள கொரலெ, கொர கொல்ல என்ற ஊருக்கு அருகில் விஹாரெஹிந்ந என்ற இடத்தில் உள்ள புத்தர் கோயில்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸமஸ்த ப்$_4$வநாச்$_0$ரய பஞ்சஸத வீரஸாஸந லக்ஷ-
2. மிலங்க்ரித [வரப்ரஸாத]... ஸ்ரீவாசு$_0$தேவ கண்ட$_3$ளி மூலப$_4$த்ரோர்-
3. ப$_4$வ ஸ்ரீ அஷ்டாதச$_0$ பட்டந த்$_3$வாத்ரிந்ச$_0$த் வேளாபுர ச-
4. துஷஷ்டி கடிகைஸ்தாந தி$_3$சயாச்$_0$ரய தி$_3$வ்யசா$_0$ர ஸமய
5. த$_3$ர்ம்ம ஸம்பூர்ண்ண ஸகலபுர நிவாஸநியாகிய ஸ்ரீ
6. ஐயபொழிற் புர பரமேச்$_0$வரிக்கு மக்களாகிய வெய்ய சுடர் நெடு-
7. வேல் வீரவளஞ்செயர் [பதினெட்டு பட்டினமும்] முப்பத்திரண்டு வேழாபுரமு-
8. ம் அறுபத்து நான்கு கடிகைத்தாவளமும் தாவளத்துச் செட்டி-
9. யுஞ் செட்டி புத்திரனுங் கவறையுங் காத்ரிபனுங் காமுண்டச்$_0$வா
10, மியும் ஓட்டனும் [உள்பசும்பைக்]காறனும் அங்ககாறனு-
11. ம் ஆவணக்காறனு... வீரனும் பாவாடை வீரனும் ஆரியத்[தோ-
12. ட]ருந் தமிழ் வல்ல ச...லனும் பழுதிலாத் தொழில் வ-
13. ல்ல கழுதை மேவ... வனுமுள்ளிட்டு அறம் வளரக் கலி
14. மெலியப் புகள்[பெருகத்] திசையனைத்துஞ் செவிடு படாமற் செங் கோலே
15. முன்னாக ஸமய த$_4$ர்மம் இநிது நடாத்துகின்ற பதிநெண்பூமி நான்கு
16. திசை நானாதேசித் திசை விளங்கு திசையாயிரத்தஞ்ஞூற்றுவர் கண்டிய மு-
17. [த்தர்] உள்ளிட்ட பதிநெண்பூமி [வி]வீரரோம் மாசேனகாமமான தந்மசாகரப் பட்டன-
18. [த்துப்] பெருமக்கள் [எங்களை] நோக்கிச் செய்த சிறப்பாவது நம் உடப் பிறந்த
19. மு...வளன் முத்தநான நானாதேசி யாண்டானை வேணாடுடையார் பிடித்துச் சி-

20. றைசெய்து ஒண்பாதுகைத் தளை யிழுப்பின போது ஆடாங்காசு குடுத்து வீடு கொண்-
21. டமையாலும் வெள்ளித்தாலி செய்வித்துப் பதிநெண்பூமி எறிவீரந் தான மெ-
22. ன்று நாமஞ்சாத்திக் குலத்தின் பேரிட்டுப் பெருஞ் சிறப்பு செய்தமையில் நாங்
23. களும் நம் பெருமக்களுக்குச் சிறப்புச் செய்ய வேண்டுமென்று [நி. ழுட் டுகி].
24. விடும் விழக்கெண்ணையும் பணமுண்ணு நாட்டுச்செட்டிகளும் நம் உடப்-
25. பிறந்தாரும் இப்பட்டினத்தில் பணமுண்ணாதிதாகவும் வீருஞ் சீருமாட்டுத் தாவும் [ப]ற்றை
26. கட்டி ஏறாதிதாகவும் இவருக்கு பகற்சோறு பெறுவதாவும் பாவாடை மேநடை
27. நாலு காசு பெறுவதாகவும் இப்படிச் செய்ய வீரமுறைமை அழியச் செய்தா-
28. ல் பணியும் செடியும் ஒடுக்கி முட்டும் புறகும் அடிக்கப் பெறுவதாகவும் இப்-
29. படி செய்யுமடத்து உத்திரத்திலழிந்து படுவாநாகில் அவன் பிணம் நாயெ ழவு-
30. மாவதாகவும் இப்பரிசு சமைந்து கல்லும் பலகையும் நாட்டிநோம் திர ளன்....
31. [வற்காலதறகட்டியுள்ள] நாட்டுச்செட்டியும் திரளன் கம்பநான பிள்ளச்சக லந் நானாதேசி இட்ட
32. முனைவல்லப நானாதேசிக்கோனு நாதான நம்வீட்டு முறியானும் கூத்தன் காலநான
33. நூறாயிரந் தசமடி மும்மத வாரணப்பிள்ளையும் வீரகள் முற்பேர் ஆரயன் கூத்தநான வீரகள்
34. ஐந்நூற்றுவ மண்டில அயிரஷ்டானமும் பிரான் சாத்தநான வீரகள் சேநாப தியாண்டானும்
35. கம்பன் வில்லநான சேநாபதி வீரகாளயும் நாட்டரயன் கண்ணநான அறு வனம்பல பிள்-
36. ளையாண்டானும் திருவரங்கன் ஏறநான தேசியாபரணப் பிள்ளையும் [உ டி.தேச] ப-
37. திநெண்பூமி வீரரோம் அறமறவற்க.

## 5:2

இடம் : *குறுநெகல மாவட்டம், கிரதலந கொரலெ, தெதியமுல்ல புத்தர் கோயில் (பாண்டுவஸ் நுவரவிலிருந்து மூன்று கி.மீ.) (படம் 5.1.1).*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸமஸ்த பு$_4$வநாச்$_0$ரய ப



1



2

படம் 5.1. இலங்கையில் ஐநூற்றுவர் கல்வெட்டுகள்
1. தெதிய முல்ல புத்தர் கோயிலில் உள்ள கல்வெட்டு.
2. கல்தென்பிதியா புத்தர் கோயிலில் உள்ள கல்வெட்டு

2. ஞ்ச ஸ்த வீரசா$_0$ஸந … லங்க்ரித
3. … [பரமேச்$_0$வரிக்கு] மக்களாகி
4. … … … … வளஞ்சியர்
5. … … … … …
6. … … … நடாத்து …
7. … ஸ்ரீ பயங்கர புர நானாதேசிப் பட்டன
8. பதினெ … தெம் பெருமக்களை நோக்கிச்
9. செய்த பணியாவது அ … கொதாரிய …
10. த்தை … … த்$_3$ரோஹஞ் செய்தாரை …
11. கிற முதற் … வளஞ்சய[லூ]சனை செய்ய…
12. மக்க … … … பட்டானை…
13. நி பூரண … … … ச …
14. .[த்$_3$வய] … … லும் நானா
15. … ளச்செட்டியா … அறுத்து …
16. … கொண்டவர்க … … பெருமா …
17. … ஞ் செய்து கழுவேற்றுவித்தமையாலும்
18. … … குத்துவித்தமையாலும் லோ
19. கமாதா எழுந்தருளியிருக்கு … [வீ]
20. ரமாகாளமென்றெழுத்து வாங்கி … …
21. ரகொடியார்க்குச் சிறப்புச் செய்தமையாலும் …
22. … பூ … ஏற்று வீரர் முனை …
23. … டொரு … ற்றுட்டுப் பாவாடை
24. … கடவ பணமும் வேட்டாடுந் …
25. … னாக பணமாயில் ஓலோ …
26. லோக$_3$ பெருஞ் செட்டியார்க்குத் திருவிளக்கெண்ணைக்
27. கென்று வைத்துக் குடுத்தோம் … …
28. ரகொடியோமாய் அறமறவற்க.

## 5:3

இடம் : *குறுநெகல மாவட்டம், எகொத கொரலெ, மஹாநாமேரிய அருகில் உள்ள கல்தென்பிதிய என்ற ஊரில் உள்ள புத்தர் கோயில். (படம் 5.1.2).*

1. … ஸ்ரீ ஸ$_0$மஸ்த புவவநாச்$_0$ரய பஞ்ச
2. … ம் லக்ஷ்மி வக்ஷ … … ஸ்ரீ
3. … ஸ்ரீ வாஸுதே$_3$வ கண்
4. … … … …
5. … … …
6. … … … ம்மான. செட்..

7. … … … …
8. … … … கேச்$_0$ரவன்
9. … … யன … மி.. னார்க்கெ … க
10. … . யா … த்தமையாலும் … கநார்
11. … …ட்டு பெருமாள் பாண் … ஆடிய …
12. … … தவுத்து விடுவித்தமையாலும் பலமுறை
13. … வீரகொடியாரைக் காத்தமையில் பணமும் பாவா
14. டையும் … யுமுந் தவிர்ந்து மேநடை நாலுகாசும் மெக்க
15. ண்டு முந்நான்று பகற்சோறும் கொள்வதாகவும் அமைத்துக் குடுத்தோம் பதி
16. நெண்பூமி வீரக்கொடியோம் வீரும் சீருமாடப்பெ[று]த்தாக அறமறவ
17. ற்க வீரதளக்கல்லு ஸ்ரீ ஸுவஸ்தி.

## 5:4

*இடம் : புதுமுத்தாவ என்ற இடத்தில் உள்ள ராஜமஹா விஹார என்ற புத்தர் கோயிலில் சுவரில் பதித்துவைக்கப்பட்ட பலகைக் கல்லில். (படம் 5.2.3).*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸமஸ்த ப்$_4$வநாச்$_0$ரய பஞ்ச
2. ஸத வீரசா$_0$ஸந லக்ஷ்மிலங்க்ரித வக்ஷஸ்த
3. ல … ஸ்ரீ வாசு$_0$தே$_3$வ கண்ட$_3$ளி மூலபத்ரோ
4. ர்ப$_4$வ … … … ஸ்ரீ ஐய்யப்பொழிற்-
5. பரமேச்$_0$வரிக்கு மக்களாகிய மாகலான விக்கிரம சலா-
6. மேக புரத்துப் பெருமக்கள் பதிநெண்பூமி வீரகொடி
7. நோக்கிச் செய்த சிறப்பு இலங்கச் செண்டா … ரம …
8. … ம வீரகொடியாரில் வலங்கையாண்டாந் மூ …
9. … தன் ப்$_3$ரிந்தத்தோடும் வாராநின்ற [ஸமயத்]
10. … கொண்ட குறுவரைக் குத்துவித்துப்
11. ய ஆடி ப்$_3$ரிந்தமும் விடுவித்தமையாலும் தேசி-
12. ன்றையான கொங்க வாளாண்டான்னால் களமத்தில் மாஸ்த…
13. … க்கை வேள் ஆடினவரை [வீரகொடித்] தந்திரத்துக்கு காட்டிக் கு-
14. டுத்து அட்டி வைத்தமையாலு மற்றும் வீரகொடியாரை நோக்கி
15. பலவிதத்திநாலும் ரக்ஷித்தமையாலும் பதிநெண்பூமி வயிச்$_0$ரரவண.
16. …[வயுறு] வாய்த்த லோகமாதாவை வீரமாகாளமென்று பேர் சாத்திந-
17. மையாலும் பரமேச்$_0$வரிக்கு மஞ்ஞூற்றுவன் பள்ளியில் லோக பெருஞ் செட்-
18. டியார்க்கு நாங்கள் உண்ணக்கடவ பணமும் வேட்டாடுந் திருவிளக் கெண்ண-



3

படம் 5.2. இலங்கையில் ஐநூற்றுவர் கல்வெட்டுகள்.
3. புதுமுத்தாவ புத்தர் கோயிலில் உள்ள கல்வெட்டு

19. யும் விட்டோம் பணமுண்ணாமைக்கு வீரகொடியார்க்கு விடும் விளக் கெண்-
20. ... ... நாள் மெக்கண்டு சோறிட்டுப் பாவாடைக்கு மேநடை ஆறு
21. காசு இடக்கடவிசாக அமைத்துக் குடுத்தோம் பதிநெண்பூமி
22. வீரகொடியோம் வீருஞ் சீருமாடிப் பதிநெண் பூமி வீரரோம் பெரிமெழல
23. ... க அமைத்துக் கு
24. டுத்தோம் பதிநெண்பூமி
25. வீரகொடியோம் அற
26. மறவற்க வீரதளக்கல்.

---

## நூற்பட்டியல்

A. Velupillai, *Ceylon Tamil Inscriptions*, Vol.I (1971); Vol.II (1972); A. Velupillai, "A Note on a Fragmentary Tamil Inscription of the Virakoti from Budumuttava;' *Journal of Tamil Studies*, Vol.32, (1987), பக். 57- 66.

# 6. திங்களூர் கோநாட்டான் விக்கிரம சோழன் கல்வெட்டு - மறு ஆய்வு

*செ. இராசு, தஞ்சாவூர்.*

தமிழ்நாட்டில் பெரியார் மாவட்டம் பெருந்துறை வட்டம் திங்களூரில் சுங்கக்காரம்பாளையம் போகும் வழியில் கோயில் தோட்டத்தில் புஷ்பதந்த தீர்த்தங்கரரின் சமணப்பள்ளி உள்ளது.

அச் சமணப் பள்ளியில் மடைப்பள்ளி நிலையில் முதல் கொங்குச் சோழ மன்னன் கோநாட்டான் விக்கிரம சோழனின் நாற்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு உள்ளது. சக ஆண்டு 967 குறிக்கப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டை முதலில் மெக்கன்சியின் உதவியாளர்கள் படி எடுத்துள்ளனர்[1]. மைய அரசின் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினரால் படி எடுக்கப்பட்டுள்ளது[2]. இக்கல்வெட்டைப் பற்றி அறிஞர்களான கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும், தி.நா. சுப்பிரமணியம் அவர்களும் இந்தியக் கல்வெட்டிதழ் முப்பதாம் தொகுதியில் கூட்டாக விரிவானதொரு கட்டுரை எழுதியுள்ளனர்[3].

இக் கொங்குநாட்டுத் திங்களூரை முத்தரையர் தம் பகைவர்களோடு போரிட்ட இடங்களில் ஒன்றாகக் கூறப்பெறும் திங்களூர் என்று அவர்கள் கூறியுள்ளனர். முத்தரையர் போரிட்ட திங்களூர் சோழ நாட்டைச் சேர்ந்தது. முத்தரையர் தலைநகரான நியமத்தின் அருகே தஞ்சாவூரிலிருந்து 15 கி.மீ. வடமேற்கேயுள்ளது. இரண்டு திங்களூருக்கும் இடையில் தூரம் 225 கி.மீ. இருக்கும்.

முத்தரையர் கோநகரங்களான வல்லமும், தஞ்சையும் அவர்கள் போரிட்ட அண்ணல்வாயில், அழுந்தியூர், கண்ணனூர், காந்தளூர், காறை, கொடும்பாளூர், செம்பொன்மாரி, புகழி ஆகியவை சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டை நோக்கிய வழிகளிலுமே உள்ளன[4]. திங்களூர் மட்டும் கொங்கு நாட்டில் இருக்க முடியாது.

புஷ்பநாதர் என்று தீர்த்தங்கரர் பெயரை அவர்கள் எழுதியுள்ளனர். ஆனால் உள்ளூர் வழக்கு புஷ்பதந்தர் என்றும் கல்வெட்டில் பூமேந்திரர் என்றும் உள்ளது.

திங்களூரின் பெயர்க்காரணம் பற்றி அவர்கள் ஒன்றும் கூறவில்லை. திங்களூர் சமணப்பள்ளிக் கல்வெட்டில் அப் பள்ளி 'சந்திர வசதி' என்று அழைக்கப்படுகிறது. பஸ்தி அல்லது பஸதி என்ற சொல் சமணப்பள்ளியைக் குறிக்கும். அச்சொல் தமிழில் வசதி என்றாகும்.

இங்குள்ள சிவன்கோயில் கல்வெட்டில் இவ்வூர் சந்திரபுரி, சந்திரபுரம் என்று குறிக்கப்பட்டுள்ளது.[5]

மகத நாட்டிலிருந்து தம் குரு பத்திரபாகுவோடு சிரவணபெள கொளா வந்து அவருக்குச் சீடனாகப் பணியாற்றி அவர் மறைவிற்குப் பின் அங்கே உயிர் நீத்தவர் சந்திரகுப்த மெளரியர். அவர் நினைவாகச் சிரவண பெளகொளாவில் உள்ள சிக்கபெட்டா என்னும் சிறிய மலை சந்திரகிரி என்று அழைக்கப்படுகிறது.[6] அங்கு எடுக்கப்பட்டுள்ள சம ணப்பள்ளி சந்திரகுப்த பஸதி அல்லது சந்திரபஸதி என்று அழைக்கப்ப டுகிறது.[7] அங்குள்ள பழங்கன்னடக் கல்வெட்டுகளில் சந்திரகுப்தன் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.[8]

பத்திரபாகுவின் சீடர் விசாகாச்சாரியார் என்னும் விசாக முனிவர் புன்னாடநாடு, கொங்குநாடு உள்ளிட்ட நாடுகளில் சமண சமயத்தைப் பரப்பினார்.[9]

விஸாகி அல்லது விஸாகா என்று படிக்கக்கூடிய நிலையில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் கொடுமணல் அகழாய்வில் பானையோட்டில் எழுதப்பட்ட பெயர் கிடைத்துள்ளது.[10] இலங்கை பிராமிக் கல்வெட் டுக்களில் தமிழ் வணிகர்கள் விசாகன் என்று அழைக்கப்படுகின்றனர்.[11] விசாகர் என்ற பெயர் தமிழ்நாட்டில் பழக்கத்தில் இருந்தது இதன் மூலம் தெரிகிறது.

சந்திரன் என்பது தமிழ்ப் பெயர் அல்ல. எனவே, திங்களூர் சந்திர வசதி விசாகமுனிவர் சந்திர குப்தன் பெயரால் அவர் நினைவாக ஏற்ப டுத்திய கோயிலாக இருக்கலாம். விசாகமுனிவர், பத்திரபாகு போன்றவர்களைச் சந்திரகுப்தன் ஆதரித்துப்போற்றியதால் அவர் பெயர் சமணப் பள்ளிக்கு வைக்கப்பட்டிருக்கலாம். சந்திரவசதியின் பெயரால் இவ்வூர் திங்களூர் என்று பெயர் பெற்றிருக்கலாம்.[12]

இச் சமணப் பள்ளியில் முக மண்டபத்தை எடுப்பித்து அதற்குச் சிங் களாந்தகன் என்று பெயரிட்டவன் ஒரு வணிகன். அவன் பெயரை *அறத்துளான் தேவன் பேரன் நான் கணித மாணிக்கச்செட்டி* என்று படித் துள்ளனர்.[13] ஆனால் கல்வெட்டை நேரில் கூர்ந்து நோக்குகையில் அப் பெயரை *அறத்துளான் முத்தன் பொன்னநான கணித மாணிக்கச்செட்டி* என்று படிக்கலாம்.

மெக்கன்சி ஆவணங்களில் தேவன் என்ற பெயர் மீதன் என்றும், நான் என்பது நான என்றும் எழுதப்பட்டுள்ளது.[14] தி.நா. சுப்பிரமணி யம் அவர்கள் நான என்பதை (நாநாதேசி போல) நானா கணித மாணிக் கச்செட்டி என்றும் படிக்கலாம் என்று தன் கருத்தை மாற்றிக் கூறியுள்ளார்.[15] ஆனால் இத்தொடர் *அறத்துளான் முத்தன் பொன்ன நான கணித மாணிக்கச் செட்டி* என்றே உள்ளது.

இறுதிப் பகுதியை அவர்கள் சிங்களாந்தகன் ஏன் புதுமுக மண்டகம் என்று வாசித்துள்ளனர்.[16] ஆனால் கல்வெட்டில் சிங்களாந்தகன் என்பது முகமண்டகம் என்றே உள்ளது.

சிங்களாந்தகன் என்பது இலங்கையை வென்ற காரணத்தால் இராசராசன் பெற்ற பெயர். இராசராசன் விக்கிரம சோழன் என்றும் பெயர் பெற்றிருந்தான். விக்கிரம சோழன் என்ற இராசராசன் பெயரைப் பெற்ற முதல் கொங்குச் சோழன் இராசராசனின் இலங்கைப் படையெடுப்பிலும் கலந்து கொண்டதால் சிங்களாந்தகன் என்றும் பெயர் பெற்றிருக்க வேண்டும். கொங்கு நாட்டுத் தலைவர் ஈழத்துப் போரில் கலந்து கொண்டதையும், வீரமரணம் எய்தியதையும் திருச்செங்கோட்டு இராசராசன் செப்பேட்டில் காண்கிறோம். கொல்லிமழவன் பிரதிகண்டவர்மன் சுந்தரசோழனின் தந்தை ஈழப்போரில் வீரமரணம் எய்தியுள்ளார்.[17]

இக்கல்வெட்டின் திருந்தியபாடம் வருமாறு

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கோநாட்டான் வி
3. க்கிரம சோழ
4. தேவற்கு செ
5. ல்லாநின்ற
6. யாண்டு நா
7. ற்பதாவது
8. அறத்துளா
9. ன் முத்தன்
10. பொன்னநா
11. ன கணித மா
12. ணிக்கச் செட்
13. டி சந்திரவச
14. தியில் முக
15. மண்டகம்
16. எடுப்பித்தே
17. ன் சகரயா
18. ண்டு 967
19. சிங்களாந்தகன்
20. என்பது முக
21. மண்டகம்

திங்களூர்க் கல்வெட்டின் மூலம் கொங்குச் சோழ அரச மரபு கி.பி.1005-ஆம் ஆண்டில் ஏற்பட்டமை தெரிகிறது. மெக்கன்சியின் மிகச் சிறந்த வரலாற்று ஆவணம் ஆன கொங்க தேச ராசாக்கள் நூலில் முதலாம் இராசராசன் 1004 வரை கொங்கு நாட்டை ஆட்சிபுரிந்த விவரம் கூறப்பட்டுள்ளது.[18] திருக்கோவிலூர்ப் பாடல் கல்வெட்டில் இராசராசன் செயலாகக் 'கங்க நாடு கவ்விக் கொங்கம் வெளிப்படுத்தருளி' என்பது கூறப்படுகிறது.[19] ஆதித்தன் கொங்கு நாட்டை முதலில் அடிப்படுத்தினான்.[20] பராந்தகன் கல்வெட்டுக்கள் சில கொங்கு நாட்டில் கிடைக்கின்றன. தலைநகர் பராந்தகபுரம் எனப்பட்டது.[21] திருவிடைமருதூர்க் கல்வெட்டில் பராந்தகனின் உயர் அலுவலன் ஒருவன் 'கொங்கில் சோழனார்க்காய் ஸ்ரீகார்யம் ஆராய்கின்ற காரி நக்கன்' எனப்படுகின்றான்.[22]

கொடும்பாளூர் இருக்குவேள் மரபில் வந்த கோநாட்டுத் தலைவர்கள் சோழரின் நெருங்கிய உறவினர்கள். அவர்கள் தலைமையின் கீழ்

உள்ள கொங்கு நாடு சோழர் அதிகாரம் இன்றிச் சுயேச்சை பெற்ற தனி யரசாக-ஒரு தீவுபோல விளங்கியது. மூன்றாம் குலோத்துங்கன் காலம் வரை அங்குப் பேரரசுச் சோழர் கல்வெட்டுகள் மிக மிக அரிதாகவே காணப்படுகின்றன. கொங்குச் சோழர்கள் சுயேச்சையாகக் கல்வெட்டுக் கள் பொறித்தனர். அவர்கள் கல்வெட்டுகளில் திங்களூர்க் கல்வெட்டு மிக முக்கியமானதொன்றாகும்.

---

**குறிப்புக்கள்**

1. Ms. D.3302-IV-94: *தெஇகோக, 1, எண்.256.*
2. *இக.1905, எண்.614.*
3. *Epigraphia Indica*, XXX, No.41, pp.243- 49.
4. *Epigraphia Indica*, XIII, No.10, pp.137- 149 'Sendalai Pillar Inscriptions'.
5. *இக.1905, எண்.603, 605.*
6. S.K. Ramachandra Rao, *Jainism in South India*, p.9.
7. சி.எம். இராமச்சந்திரன் செட்டியார், *கொங்கு நாடும் சமணமும், ப.38.*
8. *Epigraphia Carnatica*, II, pp.1.24, 71, 254, 364.
9. செ. இராசு, *கொங்குநாட்டு வரலாற்றில் சமண சமயம் (முனைவர் பட்ட ஆய்வேடு), ப.119.*
10. MEG-3 என்னும் ஒரு பெருங்கற்படை குழியில் இப்பானை ஓடு கிடைத்துள் ளது. அதன் காலம் சுமார் கி.மு. முதல் நூற்றாண்டு.
11. Parnavithana, *Inscriptions of Ceylon*, Vol.I: *Early Brahmi Inscriptions*, No: 356, 357.
12. *கொங்கு நாட்டு வரலாற்றில் சமண சமயம், ப.119.*
13. *Epigraphia Indica*, Vol.XXX, No.41.
14. *தெஇகோக, எண்.256.*
15. கட்டுரையாளரிடம் நேரில் கூறிய கருத்து.
16. *Epigraphia Indica*, Vol.XXX, No.41.
17. *தெஇக.3, எண்.212* B.
18. *கொங்கதேச ராசாக்கள்,* சி.எம். இராமச்சந்திரன் செட்டியார் பதிப்பு, *ப:13.*
19. *தெஇக. 7, எண்.863.*
20. *கொங்கதேச ராசாக்கள், ப.10.*
21. செ. இராசு, *கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்.*
22. *தெஇக.23, எண்.258.*

---

# 7. கொங்கு வீரராசேந்திர சோழனின் கடத்தூர் கல்வெட்டு

சூ. சுவாமிநாதன், மைசூர்.

இடம் : கோவை மாவட்டம், உடுமலை வட்டம், கடத்தூர் கொங் கணீசுவரர் கோயிலின் கருவறையின் வடக்குப்பகுதியில்.

காலம் : இராசகேசரி வீரராசேந்திர சோழன் (கி.பி.1232).

செய்தி : கரைவழி நாட்டிலுள்ள ஏழூர் என்ற ஊரைச் சார்ந்த அதி காரியான ஆரியன் உலகுய்யவந்தாநாந வீரராசேந்திர அணுத்திரப் பல்லவரையன், ஐப்பசித் திங்களில் மன்னர் வீரராசேந்திரதேவற்கு கிரகணத்தினால் ஏற்படக்கூடிய இன்னல்கள் நீங்குவதற்காக கடற்றூரில் நாயநார் சித்திர மேழி ஈசுவரமுடையார் மற்றும் பெரிய நாச்சியார்க்கு உணவு அளிப்பதற்கு என்று கண்ணாடிப்புத்தூரில் தனக்கு உரிமையான கரிசல் மண் நிலம் ஒன்றைக் கொடுத்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கொவிராசகேசரிபற்மரான திரிபுவ-
2. நச் சக்கரவத்திகள் சிரிவீரராசேந்திரதேவற்க்கு திரு-
3. வெழுத்திட்டுசெல்லா னிந்ற திருநல்லி யாண்டு இருப-
4. த்தாறாவது கரைவழி நாட்டு ஏழூற் தெந்குமெரில் ஆரிய-
5. ன் உலகுய்ய வந்தாநாந வீரராசேந்திர அணுத்திரப் பல்லவ-
6. ரையன்நேந் கண்ணாடிப்புத்தூரில் எந் பற்றில் வடக்கெ-
7. ல்லை காரியன் நிலம் கலமும் இதுக்கு நாந்கெல்லை ஆவது அதியசொழ பல்ல-
8. வரையந் செக்கு மேற்க்கு வாணசிங்க தேவற்கு நாந் ஒற்றி வைச்ச செக்கு வ-
9. டக்கும் மேல் பாற் கெல்லை விரமாந் மாகாணிக்கு கிழக்கும் மேல்பாற் கெல்-
10. லை திருநாட்பல்லவரையந் செக்கு தெற்கும் இந்நான்கெல்லைக்குள் பட்-
11. ட நிலம் கலமும் கடற்றூரில் தெற்கில் வாசலில் நாயநார் சித்திரமேழி
12. ஈச்வரமுடையார் பெரியநாச்சியாற்கு அமுதுபடிப்புறமாக வி-
13. ட்ட நிலம் கலமும் அற்பிசை மாத(ம்)த்தில் நாயநார் வீரராசேந்திர தே-
14. வற்கு கிராதோஷம் நீஞ்க வேணும் எந்று செம்பிலும் சிலையிலும்
15. கல்வெட்டி குடுத்தேந் வீரராசேந்திர அணுத்திர பல்லவரையநேந் இ-
16. து பன்மாஹேச்வர ரக்ஷை உ அணுத்திர பல்லவரையந் எழுத்து

தமிழக மன்னர்கள் தங்களது ஆட்சி செவ்வனே நடைபெறவும், தங்களது நன்மையின் பொருட்டும் பல நற்செயல்கள் செய்தனர்.[1] கிர

கணத்தின் நாளன்று ஏற்படக்கூடிய தீமையைக் கருதி அதனை நீக்கும் வழி தேடினர்.[2] இக்கல்வெட்டு, ஐப்பசி மாதத்தில் மன்னர் கிரக தோஷம் நீங்க அளித்த கொடையைக் கூறுகின்றது. இம்மாதம் மூன்றாந் திகதி, ரேவதி நட்சத்திரத்தில் (செப்டம்பர் திங்கள் 3ம் தேதி) சந்திர கிரகணம் உண்டானது. அந்நாள் இம்மன்னரது பிறந்த நாளாக இருத்தல் கூடும். அல்லது அவரது இராசியில் கிரகணம் வந்திருக்கக்கூடும்.

வீரராசேந்திரருக்கு முன்னாண்ட வீரசோழரின் (1168-1196) கல்வெட்டொன்று இவரின் பிறந்த நட்சத்திரத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டதனால் இதற்குப் பரிகாரமாக அந்தணர்களின் அறிவுரைப்படி கடற்றூரிலும், கொழுமத்திலும் சிவலிங்கம் அமைத்து இதற்கு வழிபாடு செய்வதற்காக முக்கல நெல் வித்துப்பாடு நிலத்தை அளித்தார் என்கிறது.[3]

---

**அடிக்குறிப்புகள்**

1. முதலாம் இராசராசசோழரின் கல்வெட்டொன்று 'இராசாவுக்கெல்லாம் நன்றாக பூமிக்கெல்லாம் நன்றாக ஓர் விளக்கு வைய்' என்று காடன் மயிந்தன் என்பாரை மன்னர் பணிக்க இதற்கு இவர் 'எம்பெருமான் அருளுச் செய்ததாகில் இரண்டு விளக்காக வைக்கிறேன் என்று வைச்ச நுந்தா விளக்கிரண்டு' என்கிறது. *(கஆ.1923, எண்.121)*
2. சாளுக்கிய மன்னர் முதலாம் விக்ரமாதித்தர் ஆளுகையில் அவருடைய இஷபராசியில் சூரிய கிரகணம் (கி.பி.671) ஏற்பட்டது. அதற்காக அவர் இரவிசர்மன் என்ற அந்தணர்க்கு ஒரு கிராமத்தையளித்தார். *Indian Antiquary*, 7, p.218.
முதலாம் இராசராசசோழரின் 20-ம் ஆண்டு சோமூர் கல்வெட்டின்படி சூரிய கிரகணத்தின்போது கோயிலுக்குச் சென்ற அரசியை கோயிலுக்குள் வர கோயில் பூசாரிகள் அனுமதிக்கவில்லை. இதனால் வெகுண்ட மன்னர் தனது படை வீரர்களைக் கொண்டு அக்கோயிலுடையார்களைத் தண்டித்து மூன்று பொன் தண்டமாக வசூலித்து ஒரு பட்டம் செய்து அதனை திருநொம்பலூர் பரமேசுவரர்க்கு அளித்ததாக அறிகின்றோம். *தெஇக.4, எண்.391.*
3. *தெஇக.26, எண்.145.*

---

# 8. இடைக்காட்டூர் திருமணிகண்டேசுவரர் கோயில் கல்வெட்டுகள் - 2

வெ. வேதாசலம், மதுரை.

இடைக்காட்டூர் மதுரையிலிருந்து கிழக்கே 36 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர்க் கல்வெட்டுகளில் சில ஆவணம்-8, பக்கம் 50-70 ல் வெளியிடப்பட்டுள்ளன. முழுமை கருதி எஞ்சியுள்ளவை இங்கு கொடுக்கப்படுகின்றன.

## 8:1

இடம் : இடைக்காட்டூர் மணிகண்டேசுவரர் கோயில் மகாமண்டபம், தெற்குச்சுவர்.

காலம் : பாண்டியன் குலசேகர தேவர், யா.3

செய்தி : இடைக்காட்டூரான அழகியப்பாண்டியநல்லூர் ஊரவையினர் திருமணிகண்டிசுவரமுடையார் கோயிலுக்குரிய ஆச்சன் அழகியான் தெங்கு திருநந்தவனத்தில் தெங்கு, மா, இலுப்பை முதலிய மரங்கள் வைத்துக் கோயில் மண்டபத்தில் சந்தியாதீபம் எரித்துவர முடிவு செய்ததைத் தெரிவிக்கிறது.

1. ஸ்வ்ஸ்திஸ்ரீ திருபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீகுலசேகரதேவற்கு 3வது கீரனூர் நாட்டு இடைக்
2. காட்டூரான அழகிய பாண்டியநல்லூர் உடையார் திருமணிகண்டிசுவரமுடையநாயனார் தெங்கந்திருநந்தவனத்தி
3. ல் ஆச்... மழகியாந் திருநந்தவனத் தெங்கும் மாவும் இலுப்பையும் மற்றும் எப்பேர்பட்டனவுஞ் சிவனார் வைத்து இ
4. வ்வூ... கொண்டு இந்நாயனார்கோயில் திருமண்டபத்திலே ஸந்தியாதீஉபஞ் சந்ராதித்தவற் எரிப்பதாக கல்வெட்டி
5. க் கொடுப்பதாக பிடிபாடு பண்ணிக் குடுத்தோம் திருவிரமீச்0வரன் பிள்ளையான திருசிற்றம்பலபட்டன் எழுத்து தவப்
6. பெருமாள் பட்டன் தற்குறி மாட்டெறிந்தேன் கோயில்கணக்கு அழகிய பாண்டிய மூவேந்தவேளான் எழுத்து ஆடவல்லான்பட்டந் எழுத்து
7. இவை திருஞானசம்பந்தபட்டந் எழுத்து எறியத்தாண்டான் எழுத்து இப் பிடிபா... கோ
8. யில் கணக்கு ... எழுத்து.

## 8:2

இடம் : *கருவறை, தென்புறம், ஜகதிப்படை.*
காலம் : *பாண்டியன் சடையவர்மன் குலசேகர தேவர் (கி.பி. 1190-1218).*
செய்தி : *செயங்கொண்டான் சீவல்லபனான களவழிநாடாழ்வான் இடைக்காட்டூர் சிவன் கோயிலுக்கு திருப்புவணமுடையானான செம்பியதரையன் அளித்த நிலத்தினை இறையிலியாக்கி அதனைக் கோயிலில் இருந்த நாச்சியார்க்கு அளிக்கச் செய்ததைத் தெரிவிக்கிறது.*

1. பூவின்கிழத்தி மேவி விற்றிருப்ப மேதினிமாது நீதியிற்புணர வயப்போர் மடந்தையு ஜயப்புயத்...
2. நடப்பக் கொடுங்கலி நீங்கி நெடும்பிலத் தொளிப்ப வில்லவர் செம்பியர் விராடவர் பல்லவர் திறை...
3. தின் எதிராமாண்டு செயங்கொண்டான் சீவல்லவனான களவழிநா டாழ்வானேன் மிழலைக்கூற்றத்துப் பொன்பற்றியுடையான் ...
4. க்கும் மேற்கும் தென்பாற்கெல்லை வைகையாற்றுக்கு வடக்கும் மேப்பாற் கெல்லை இந்த ஆற்றுக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இக்காடு ...
5. லையோலை செய்து குடுத்தேன் ... பட்டாலகன் திருப்பூவணமுடையா னான செம்பியத் தரை ரையனுக்கு செயங்கொண்டான் சிவ ...
6. ம் அந்தராயம் வினியோகமும் மற்றும் இறுக்கக்கடவ [பொருள்கள்] எப் பேர்பட்டனவும் இந்நாச்சியார்க்கே இறுப்பதாகவும்
7. செம்பியதரையனுக்கு செயங்கொண்டான் சீவல்லவனான களவழிநாடாழ் வானேன் இப்படிக்கு வீரபஞ்சா... இப்படக்
8. கு இவை தேவதானம் செங்குளத்து பி₃ராமணரில் [சூரியதேவன்] சூரிய தேவனான குலசேகர பி₃ரம்பாதராயனெழுத்து
9. ... னெழுத்து [திருபுவனச்சக்கரவர்த்திகள்] ஸ்ரீகுலசேகர தேவற்கு ...
10. யும் இத்தேவர்க்கு இறையிலி...மையில் நிலம் இறையிலியாக்கி ஸ்ரீ ருத்ரஸ்ரீமாஹே...

## 8:3

இடம் : *மகாமண்டபம், தெற்குச்சுவர்*
காலம் : *பாண்டிய மன்னன் (?), யா.14, கி.பி. 13ஆம் நூற்றாண்டு*
செய்தி : *கோயிலில் அரசனின் பெயரால் செய்யப்படுகின்ற குறிவுடையபெருமாள் மண்டபம், சந்தி ஆகியவற்றிற்கும் திருமெய்ப்பூச்சுக்கும் இக்கோயிலுக்குரிய தேவதானமாக விளங்கிய சில நிலங்களிலிருந்தும் இவ்வூர் வரகுண ஈசுவரமுடையார் தேவதானமாக விளங்கிய சில நிலங்களிலிருந்தும் வந்த வரிகளைத் தானமாகத் தர ஊரார்க்கு ஆணை வழங்கப்பட்டதைத் தெரிவிக்கிறது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ அருளிச்செயல் கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகிய பாண்டியநல்லூர் ஊராற்கு தங்களூர் உடையா
2. ர் திருமணிகண்டிச்₀வரமுடைய நாயநார் கோயில் திருப்பணி உள்ளிட்டு வேண்டுவனவுக்கு தங்களூர் பற்றில் இன்னா
3. யனார் தேவதானம் கோல் குடிதாங்கியால் நிலம் முக்காலே இரண்டு மா முக்காணி அரைக்காணியின் கீழ் முக்காலே அரை
4. க்காலும் இவ்வூர் வரகுணஈசுவரமுடையார் தேவதானம் நிலம் அரையே இரண்டு மாவுக்கும் பொன்வரி வினியோக
5. ம் மற்றும் எப்பேற்பட்டனவும் ஊரீஞ்சபடி வந்த அச்சு நம்பேரால் செய் விக்கிற குறிவுடைய பெருமாள் மண்டபங்களு
6. க்கும் குறியுடைய பெருமாள் சந்திக்கும் திருமேற்பூச்சுக்கும் உடலாக தவிந்தோம் தாங்கள் நமக்குத் தரும் பொன்
7. வரி வினியோக அச்சிலே பதினொன்றாவதினெதிர் மூன்றாவது முதல் ஆண்டுகள் தோறும் செலவிட்டுக் கொண்டு இந்
8. நிலம் வேறு நீங்கலாக வரியிற் பிறித்து இப்படிச் [சந்திராதித்தவற்] செல்வ தாக கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்துக் குடுக்க
9. இவை தா... பாண்டிய விழுப்பரையன் னெழுத்து இவை விழுப்பாதராய னெழுத்து இவை சிவந்தராயனெழுத்து.

## 8:4

இடம் : *அர்த்தமண்டபம், தென்புறம். ஜகதிப்படை, உபானம்*

காலம் : *கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டு.*

செய்தி : *இரண்டு பகுதிகளாக உள்ள இக்கல்வெட்டுகளில் ஒன்று நிலம் விலைக்கு விற்றதைத் தெரிவிக்கிறது. மற்றொன்று மணிகண்டிசுவரமுடையார்கோயில் திருப்பள்ளியறை நாச்சியார்க்கு இறையிலியாக நிலம் அளிக்கப்பட்டதைத் தெரிவிக்கிறது.*

***(அ)***

1. காடுவெட்டினதறையில் இவனுக்கு விற்ற நிலத்துக்கு எல்லையாவது கீழ் பாற்கெல்லை காடுவெட்டின நிலத்தில் பல்லவராய ஜீவிதமாக அனு பவித்தி வருகிற நிலத்து
2. ... கிணறும் மேனொக்கிய மரமும் மற்றும் இல்வெல்லைக்குட் பட்ட எப் பேர்பட்டனவும் எம்மிலிசைந்த விலைப்பொருளுக்கு விலைக்குற விற்று எம்மிலிசைவு கொண்டு விற்று

***(ஆ)***

1. நல்லூர் உடையார் திருமணிகண்டீசுவரமுடையநாயனார் திருப்பள்ளி யறை நாச்சியார்க்கு கடமை
2. ... றுப்பதாகவும் ஐப்பசி குறுவை விளைந்த நிலத்துக்கு இவ்வரிசையில் அரையே மாகாணி யிறுப்பதாகவும் ஆடிக்குறுவை இ

3. ...களும் இப்படி சம்மதித்து விற்று விலைப்பிரமாணம் பண்ணிக் குடுத்தேன் பட்டாலகன் திருப்பூவணமுடையானான
4. ... முத்து... வானவன்மாதேவிநல்லூர் பள்ளமுடையா ஆதித்ததேவனான பூழியதரைய னெழுத்து இப்படிக்கு ...
5. ராயனெழுத்து இப்படிக்கு இவை கலிங்கத்தரைய னெழுத்து இப்படிக்கு இவை சீனத்தரைய னெழுத்து.

## 8:5

*இடம் : மகாமண்டபம், தென்புறம் ஜகதிப்படையிலுள்ளது.*

*காலம் : மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1238-1255).*

*செய்தி : திருக்கானப்பேரில் திருக்குளத்து மேல்கரையில் இருந்த சைவசிகாமணிமடத்துக் கொன்றைமுடியார்க்கும் தபசியர்க்கும் உணவிற்காக இடைக்காட்டூரில் மடப்புறமாக நிலம் அளித்ததைத் தெரிவிக்கிறது. இச்செய்தி மற்றொரு கல்வெட்டிலும் தெரிவிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டுகள் அரசன் திருமுகம், புரவரித்திணைக்களத்தாரின் உள்வரி (வரிநீக்க ஆணை) ஆகியவற்றை பற்றித் தெரிவிப்பவையாகும்.*

1. ஸ்வஸ்திஸ்ரீ மதுரோதைய வளநாட்டு மாடக்குளக்கீழ் மதுரைக்கோயில் பள்ளிஅறைக்கூடத்துப் பள்ளிபீடம் மழவராயனில் எழுந்தருளி இருந்து திருக்கானப்பேர்கூற்றத்து உடையார் திருக்கானப்பேருடையார் திருக்குளத்து
2. இக் கொன்றைமுடியற்கும் [இவர் ஸந்தானத்து] வத்திக்கும் தபஸிகளுக்கும் போ௩சனமுள்ளிட்டு வேண்டுவனவுக்கு கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான முடியாபல ...
3. க்கில்தடி ஒன்று நிலம் காணி ... தெற்கு நங்கைவயக்கல் தடிஒன்று நிலம் முந்திரிகைக்கீழ்முக்காலும் இதனிடைவிட்டு நங்கைவயக்கல் தடி இரண்டு நிலம் காணி முந்திரிகைக் கீழரையும் நெடுங்கண்தடி ஒன்றுநிலமெ் அரை ... க்கன்பற்று தட
4. காடனாதிருச்சன்தடி ஒன்று நில... ழிருமாவரையும் பஞ்சா..ற்று இரண்டு நிலம் முக்காணி அரைக்காணிக் கீழிருமா வரையும் பத்திகாறன்தடி ஒன்று நிலம் காணி அரைக்காணிக் கீழரையும் எல்லைவாச செய்தடி ஒன்று நிலம் காணி அரை... டைவிட்டுச் செய்த...
5. மேக்காணி கீழும்... வினியோகமும் தருவதான அச்சு காரியவாராட்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரப்பேறும் வாசல்பேறு மிலாஞ்சினைபேறும் பொன்வரியும் மற்றும் மெப்பேற்பட்டன அமு...புற இறையிலியா
6. ...வயக்கல்தடி ஒன்று நிலம்...வும் ஆக நிலம் அரைமா அரைக்காணி முந்திரிகைக் கீழரையே மூன்றுமாமுக்காணியும் கடமையும் மந்தராயமும்

வினியோகமும் தருவதான அச்சும் காரியவாராட்சியும் வெட்டிப்பாட்ட மும் பஞ்சுபீலி ... ஞ்சினைபேறும் பொன் ...

7. ந மழவராயன் நமக்குச் சொன்னமையில் சைவசிகாமணிமடத்து வத்திக் கும் கொன்றைமுடியற்கும் இவர் சன்ந்தானத்து வத்திக்கும் தபஸியற்கும் போசன முன்னிட்டு வேண்டுவனவாக கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகிய பாண்டியநல்லூ... டைப்போக்கி விக்கொன்றைய் முடியா பல ...

8. ம் இதன் காலிடை கிழக்கு பெற்றாழ் வயக்கின தடி ஒன்று நிலம் காணி அரைக்காணியு மிதன் தெற்கு வயக்கல் நிலம் முந்திரிகைக்கீழ் முக்காலும் இதனிடைவிட்டு நங்கை வயக்கல்தடி இரண்டு நிலங்காணி முந்திரிகை ... கண் தடி ஒன்று நிலம் த

9. டி மூன்று நிலம் ... மை இறுக்கும் கோலால் நிலம் அரையே ... கீழாறு மாக்காணியும் கடமையும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சு காரியவாராட்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப்பே றும் வாசல்பேறும் இலாஞ்சினைப்பேறும்

10. போக்கி ... ற்றுதடி ... நிலம் அரைக்காணி முந்திரிகைக் கீழரையே மூன் றுமா முக்காணியும் நங்கைவயக்கல் தடி ஒன்று நிலம் அரைமாவும் ஆக நிலம் அரைமாவரைக்காணி முந்திரிகை கீழரையே மூன்றுமா முக்காணி யும் கடமை...

11. ... ப்பேற்பட்டனவும் ... முதல் மடபுற இறையிலியா யிறுப்பதாகவும் வரி யிலார் எழுத்திட்ட உழ்வரியும் நம் ஒலையும் தரச் சொன்னோம் ... தரச் சொன்னோம் கைக்கொண்டு இப்படி சந்திராதித்தவற் செல்வதாக கல்லி லும் செம்பிலும் வெட்டிவித்துக் கொழ்க வென்று

12. ... னெழுத்து உ யாண்டு [பதினா ...] இந்நாள் அந்தராயமுட்பட்ட மடப் புற இறையிலி யிட்டபடிக்கு உள்வரித் திருக்கானப்பேர்கூற்றத்து உடை யார் திருக்கானப்பேருடையார் திருக்குளத்து மேல்கரையில் சைவசிகாமணிமடத்து வத்திக்கும் திருவாரூர் தக்ஷிணகோளகிமடத்து ஆகா....

13. ... காரிய ஆராய்ச்சியும் வெட்டிப்பாட்டம் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப் பேறும் திருவாசற்பேறும் திருவிலைச்சினைப்பேறும் பொன்வரியும் மற் றும் எப்பேர்பட்டனவு முட்பட மடபுற இறையிலியாக கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் குளத்து வடக்கில் மடைப் போக்கில் இக்கோ

14. ... காணியும் இதன்தெற்கு நங்கை வயக்கல்தடி ஒன்று நிலம் முந்திரிகை கீழ் முக்காலும் இதன் இடைவிட்டு நங்கைவயக்கல் தடி இரண்டு நிலங் காணி முந்திரிகை கீழரையும் நெடுங்கண் தடி ஒன்று நிலம் அரை முந்திரிகைகீழ் முக்காலும் சொக்கன்பற்றுதடி பலநிலம் ஒருமா முக்காணி அ

15. ...காணியும் இடைவிட்டு மேற்பட்டுதடி இரண்டு நிலம் முக்காணி கீழ ரைக்காலும் ... தடிமூன்று நிலம் ஒரு மாவும் ஆக இவ்வூர் கடமை இறுக் கும் கோலால் நிலம் அரையேகாணி கீழாறு மாக்காணியும் கடமையும் அந்தராயமும் வினியோகமும் கற்பூரவிலையும் காரியஆராய்ச்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப் பே

16. ... க்காணி முந்திரிகைக்கீழரை முந்... முக்காணியும் நங்கைவயக்கல் தடி ஒன்று நிலம் அரைமாவும் ஆகநிலம் அரைமா அரைக்காணி முந்திரிகை கீழரையே மூன்றுமா முக்காணியும் கடமை அந்தராயமும் வினியோகமும் கற்பூரவிலையும் காரியவாராச்சியும் வெட்டிபாட்டம் பஞ்சுபீலி சந்திவிக் கிரகப் பேறும் திருவாசற்பேறும்

17. ... எழுத்து இவை புரவரி வடவல்லத்திருக்கை இந்திராவதநல்லூர் திருப் பூவணமுடையானான வில்லவதிரைய னெழுத்து இவை புரவுவரி திணைக்களநாயகம் மிழலைக் கூற்றத்து திருவேற்கூற்றில் சி பராந்தகநல் லூர்...

## 8:6

இடம் : *மகாமண்டபம், வாயிலின் வடபுறச்சுவர்.*

காலம் : *கி.பி.13-ஆம் நூற்றாண்டு.*

செய்தி : *அமுதுபடி சாத்துப்படி முதலியவற்றிற்கு நிவந்தம் அளித் ததைத் தெரிவிக்கிறது. கல்வெட்டு பெரிதும் சிதைந்துள் ளது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபு$_3$வனச்சக்கரவத்திகள் கோனேரின்மைகொண்டான் இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர்
2. உடையார் திருமணிகண்டீசுவரமுடையநாயனார் கோயிற் தானத்தாற்கு நாயக
3. ...க்கு அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்ட... னத்துக்குக் கீரனூர் நாட்டு விடத்தலான மானாபரணசதுர்வேதி$_3$...
4. ங்கலத்து நம்பாட்டமான கூற்றில் அடியாற்குநல்லானான அரும்புகல ழித்த பாண்டியதேவற்கு...

## 8:7

இடம் : *மகாமண்டபம், தெற்குச்சுவர், வெளிப்புறம்.*

காலம் : *வீரபாண்டியதேவர், யா:7.*

செய்தி : *தென்னவதரையன் என்பவன் இந்நாயனார் கோயிலில் திருக்காமகோட்டமுடையநாச்சியார்கோயில் பகுதியில் எழுந்தருளிவித்த வினாயகப்பிள்ளையாருக்கு நிலக் கொடை அளித்ததைத் தெரிவிக்கிறது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபு$_4$ வனச்சக்கரவத்திகள் ஸ்ரீவீரபா பாண்டியதேவற்கு யாண்டு ஏழா
2. ... புத$_2$ன்கிழமையும் பெற்ற காத்திகைநாள் கீரனூர்நாட்டு
3. ...உடையார் திருமணிகண்டிசுவரமுடைய நாயனார்கோயில் ஆதி சண்ட$_3$சுவரதேவற்கும் ஸ்ரீருத்$_3$ரஸ்ரீமாஹே

4. ...ணிக்குடுத்த பரிசாவது இந்நாயனார் தேவதான இறையிலி ஆக நிலங்களில் மணலிடு

5. ... நாட்டாழ்வ பாலும் முன்பே புரவும் இறங்கட்டு வரியும் நீக்கி நீக்க நின்ற நிலம் க...

6. ...திரிகைகீழ் எட்... காணியும்... தடிஒன்று நிலம் அரை காணியும்

7. ...களும் தடிநிலம் காணி... ணியும் கீழ்எட்டு மா

8-9. ... ...

10. வடக்கில் இரண்டு மாவும் திருமஞ்சனப்புறம் நி... கீழ்முக்... காணியும் வட

11. ... பக்கல்நிலம் மாகாணி அரைக்காணி முந்திரிகையும் அரை... மேற்படி நிலம் அரைக்காணி

12. ... முக்காலும் வெட்டிபற்றுநிலம் ஒருமா அரைக்காணி ... அரைக்காணியும் மாகாணியும்

13. ... அரைமாவின்கீழ் மூன்றுமா முக்காணியும்... காணியும் வேளான் வயக்கல் நிலம்கா

14. ... ஆகநிலம் அரையே நாலுமாவின்கீழ் எட்டுமா முக்காணியும் ... கீழ் எட்டுமா முக்காணியும் பொ

15. ... த்துக்கும் மற்றும் எப்பேர்ப்பட்டனவும் உட்பட கொண் ... இடைக்காட்டூருடையா நா

16. ... தோளுடையானான தென்னவதரையன் இந்நாயனார் திருக்காமகோ...ருளிவித்த வினாயகபிள்ளையார் செல்லப்பிள்

17-18. ... ...

19. முக்காணி முந்திரிகைகீழ் மாகாணி இந்நிலம் முக்காணி முந்திரிகைக்கீழ் மாகாணிக்குப்... பையும் அந்தராயமும் வினியோகமும் பொன்வரியும் மற்றும் எப்பேர்பட்டன

20. வுக்கும் கொள்வதாக [நிறுவித்த] அச்சு அச்சு அஞ்சரை இவ்வச்சு அஞ்சரையும் ஏழாவது முதல் ஆண்டுதோறும் இப்படி கொள்வோமாகவும் பொன்வரித-

21. விருமாண்டு தவிர்வோமாகவும் இப்பிடிபாட்டின் படியால் வந்த நிலம் புரவும் இறங்கட்டு வரியில் நீக்கி நீக்கினபடிக்கு கல்லிலும் செம்பிலும் வெட்டிகொள்

22. வதாகவும் இப்படி சம்மதித்து பிடிபாடுகுடுத்தோம் உடையார் திருமணிகண்டீசுவரமுடைய நாயனார்கோயில் ஆதிசண்டேச்வரதேவற்கும் ஸ்ரீ ருத்3ர ஸ்ரீமாஹேச்வரருக்கு

23. ம் ஊராய் இசைந்த ஊரோம் இப்படிக்கு திருவிராமிசுவரந் திருபாலன் பாண்டியதரையன் எழுத்து இப்படிக்கு இவை காவாநிலைதேவப் பெருமாள் எழுத்து இவை திருவிரமிசுவரந் திருமாணிக்க

24. காழ்வானான விழுப்பாதராயன் எழுத்து இப்படிக்கு இவை அரையன் திருநாவுக்கரைசன் எழுத்து இப்படிக்கு இவை அரையன் இடர்கெட ஆடுவான் எழுத்து இப்படிக்கு இவை

25. திருவிரமிச்வரன் காவாநிலை எழுத்து இப்படிக்கு இவை அரையன் வரகு ணப் பெருமாள் எழுத்து இப்படிக்கு இவை அரையன் பூபாலராயன் எழுத்து இப்படிக்கு இவை திரு ...

## 8:8

இடம் : *மகாமண்டபம், தெற்குச்சுவர், வெளிப்புறம்.*

காலம் : *வீரபாண்டியன், யா:8 (கி.பி.1253 - 1283).*

செய்தி : *கீழைமடத்துக்கும், திருப்பூவணத்து அழகியபெருமாள் மடத்துக்கும் மடப்புறமாக நிலங்கள் அளித்த அரச ஆணை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சோமநாததேவர்க்குச் சொல்லும்படி இடைக்காட்டூர் ... மட புறம் சைவ
2. குலமாணிக்கநல்லூர் விச்வேசுவரதேவர் தாமிருக்கிற கீழைமடத்துக்குக் குடலாக வேணுமென்று சொல்லு
3. கையாலே தமக்குத் தந்தோம் இப்படிக்குக் கல்வெட்டி கொள்வது இப்படி சொல்வது அபி$_4$
4. மதம் உ ஸ்வஸ்திஸ்ரீ திருவீரமிச்வமுடையார்க்கு சொல்லும்படி திருப்புவ ணத்தில் உடையார் திருப்புவணமுடையநாயனார் சன்னதி
5. யில் அழகியபெருமாள் திருமடமும் இதுக்கு மடப்புறமான வடகரையில் இராசராசப்பாடியான அழகியபெருமாள்நல்லூரும் நம்பிஏம்பலும் மற்று
6. ம் தாமஸம் [வாதி$_3$த்த] மடங்களும் மடப்புறங்களும் முன்பு தாம் அனுப வித்த படியே வீரபாண்டியதேவற்கு எட்டாவது தைமாத முதல் தமக்குத்
7. ... அபி$_4$மதம் இப்படி திருவுள்ளமானபடிக்கு சற்வசோம நாத$_2$ தேவ$_3$னெழுத்து

## 8:9

இடம் : *அர்த்தமண்டபம், தென்புறம், குமுதப்படை.*

காலம் : *சடையவர்மன் வீரபாண்டியன், யா.10. (கி.பி.1263 - 64).*

செய்தி : *சிவன்கோயிலில் ஊரார்பெயரால் தட்சிணாமூர்த்தி உரு வத்தினை அரும்புகலழித்த பாண்டியதேவர் செய்வித் தார். இதற்கு இசைவு தெரிவித்து அரும்புகலழித்த பாண்டியதேவர்க்கு ஆவணம் எழுதிக்கொடுத்ததை இக் கல்வெட்டு தெரிவிக்கிறது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ மற்கீத்திக்கு மேல் ஸ்ரீ கோச்சடையபன்மரான திரிபுவனசக்க ரவத்திகள் ஸ்ரீவீரபாண்டியதேவற்கு யாண்டு 5 [சாவதின் எதிரஞ்சாவது] துலா ஞாயிற்று நாலாந்தியதியும் ... வெள்ளிக்கிழமையும் பெற்ற ரேவதி நாள் கீரனூர் நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் உடை யார் திருமணிகண்டீசுவரமுடைய நாயனார் கோயில் ஸ்ரீருத்ரஸ்ரீமாஹேசுவரரோம் நெற்சுறநாட்டு அடியார்க்கு நல்லானான

2. … பிரமாணம் பண்ணிக்குடுத்த பரிசாவது இவர் இவ்விடைக் காட்டூரான அழகியபாண்டியநல்லூர் … பேரால் எழுந்தருளுவித்த அழகியபாண்டிய த3ட்சிணாமூர்த்தி … நித்த நிமந்தங்களுக்கு இவ்வரும்புகலழித்த பாண்டியதேவர்க்கு காணியும் இந்நாயனார்க்குக் கடமையுமாக சந்திராதித்தவற் செய்வதாகக் இவர் இட்ட மனையும் நிலமுமாவது … கொண்ட … வருகின்ற மனைக்கு 148ம் இவ்வூர் பெருங்குளத்திலிருந்து அறுவமடை … கோல்குடிதாங்கியார்

3. … முட்பட மனைக்குழி நூற்றுநா … காணி … மாறுமாக்காணி இவ்வரும்புகலழித்த பாண்டியதேவற்கும் இவர் வற்கத்திலுள்ளாற்குமாக காணியும் இந்நாயனார்க்கு கடமையும் இறுப்பாராக இவர் இட்ட நிலமும் மனையும் இந்நா … இறையிலியாக இவ்வூராரைக் கொண்டு புரவிற் கழித்த நிலத்துக்கும் மனைக்கும் … யாக இறுப்ப … கோல்குடிதாங்கியால் மாத்தால் நெல் ஆக … இந்நெல் … நூற்றுநாற்பத்தெட்டுக்கும் வாடாகடமையாக

4. … ஆடியருள நா … கறியமுது இலையமுது எரிகரும்பும் ஸந்தி3யாதீ3பம் திருவிளக்கு …ஆக இவ்வகைப்படியே இந்நெல்லும் பணமும் கொண்டு பூஜைத்தாழ்வு படாமல் நடத்துவோமாகவும் இப்படிக்கு இந்நாள் முதல் இப்பிரமாணப்படியே சந்திராதி3த்தவற் செல்வதாகக் கல்லிலும் செம்பி … பிரமாணம் பண்ணிக்குடுத்தோம் அரும்புகலழித்த பாண்டியதேவற்கு ஸ்ரீருத்ரமாஹேசுவரரோம் இப்படிக்கு இவை கோயிலாழ்வான் ஆண்ட பிள்ளையான் … ப4ட்டன் னெழுத்து

5. … றுசேவகன் ஆண்டபிள்ளையான சுந்தரபாண்டிய பிரமாதிராஸன் னெழுத்து … லேறுவான் நம்பியாரூரனான அழகியபாண்டிய ப4ட்டன்னெழுத்து இவை நிரைமீட்டான் கலியுக மெய்யனான காங்கேயனான பிரம்மாதராய னெழுத்து கலியுகமெய்யன் வேழபிள்ளை எழுத்து … இவை மடாபத்தியம் பிள்ளை ர … வில்லியான எறிபத்தாண்டரெழுத்து இப்படிக்கு இவர்கள் சொல்ல இ பிரமாணம் எழுதினேன் இவ்வூர் கண

6. … னெழுத்து.

## 8:10

*இடம் : மகாமண்டபவாயிலின் இடப்புற வெளிச்சுவர்.*

*காலம் : [சடையவர்மன்] சுந்தரபாண்டியன் (கி.பி.1250 - 1253).*

*செய்தி : இடைக்காட்டூர் சிவன்கோயிலில் பணிசெய்த தேவரடியார்க்கும் கோயில் நிர்வாகத்தினர்க்கும் பிணக்கு ஏற்பட்டது. இதனால் அனைவரும் கூடி இது தொடர்பாக விசாரித்ததன் இறுதியில் தேவரடியார் பணிசெய்வதில் உடன்பாடு ஏற்பட்டது.*

1. ஏதத் விச்வஜக3த் ஸ்வஸ்திஸ்ரீ த்ருஷ்டி திதி சம்ஹாரகாரணம் ஸ்ரீமாஹேச்வர … ம சாஸ்வதம் பர … ச்வரமுடையநாய

2. னார் ஸ்ரீமாஹேச்வருங் கார ... நிறைந்து கூடிய பெருந்திருக்கூட்டத்து பதினெண் விசையத்து ஸ்ரீருத்₃ர ஸ்ரீமாஹேசுவரரோம் கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் திருமணிகண்டீசுவரமுடைய நாயனார் தேவரடியாரில் கூத்துக்காத்

3. தாள் அழகியாளான ... அழகிய பாண்டியமாணிக்கத்துக்கும் இவள் வற கத்தாற்கும் பிடிபாடுச் சத்திமுகம் குடுத்த பரிசாவது இந்நாயனாற்கு தாங் கள் ...களிலே எல்லாரும் பிணங்கி ... ந்தடிந்து இக்கோயிற்தானத்தா

4. ரும் இவ்வூற்குடி செய்வார் தங்களில் புறபனை மாணிக்கமும் தானும் வடி வுடைமங்கை மாணிக்கமும் கூட உலகுடைய நாயனார் ஸ்ரீசுந்தரபாண் டிய தேவற்கு ... ரைப்பவே எங்கள் பக்கலே வந்து ... தாங்களும் தானத்தாரும் தங்

5. களில் இசைந்து இப்பிடிபாட்டின்படியே இரண்டாம்முறை தானும் தானத் தாரும் சந்திராதித்தவற் செய்ய பெறுவதாக கல்லிலே வெட்டி ... சத்திமு கம் குடுத்த ... பதினெண் விஷையத்து ஸ்ரீருத்ர ஸ்ரீ

6. மாஹேசுவரரோம் இவை அணுக்கதொண்டந் எழுத்து இவை பெரியதே வன் எழுத்து இவை சிவவாக்கியதேவன் எழுத்து இவை ... பத்தெண்ணா யிர ஸ்ரீ ... கண் எழுத்து

## 8:11

இடம் : *கருவறை ஜகதிப்படை, மேல்புறம்.*

காலம் : *சடையவர்மன் சுந்தரபாண்டியன், யா.20, கி.பி.1271.*

செய்தி : *அரசன் பிறந்தநாளான சித்திரைத் திங்கள் மூலநட்சத்தி ரத்தன்று இடைக்காட்டூர் கோயில் இறைவன் தீர்த்தம் எழுந்தருளவும் இந்நாளில் அமுதுபடி, சாத்துப்படி முத லியன செய்யவும் இறையிலியாக நிலம் அளிக்கப்பட் டமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபு₄வனசக்கரவத்திகள் கோனேரின்மைகொண்டான் இடைக்காட்டூரான அழகிய பாண்டிய நல்லூருடையார் திருமணிகண்டீசு வர முடையநா... இந்நாயனாற்கு நம் ஐய்யன் திருநாள் மூலத்துநாள் தீர்த் தம்... பிரஸாதி₃த்து எழுந்தருளக் கடவதான சித்திரைத் திருநாளுக்கு அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்ட நிமந்தங்களுக்கும் இந்நாயனார் தேவ தானமாய் முன்னா

2. ள் புரவிறங்கட்டு இறைநீக்கின மணலிமுகரை தூர்வை படுகை தெங்கடி திருநந்தவனம் ஊருணி ஊர் அரைக்காலா...டாள் வயக்கால் நீக்கி ஊரு டன் தடியிறுத்து... கோல்குடிதாங்கியில் நிலமரை யொருமாநிலம் மொன்றே யொரு மாவும் திருமடைவிளாகமு தேவதான இறையிலியாகத் தந்து இத்தால் வருங்கடமை யந்தராயங் கற்பூரவிலை பொன்வரி வினி யோகம் காரியஆ

3. ராட்சி வெட்டிப்பாட்டம் பஞ்சுபீலி யோலையெழுத்து வினியோகம் வாசல்வினியோகம் இலாஞ்சினைப்பேறு தறியிறை செக்கிறை தட்டொலி தட்டார்பாட்டம் ஏரிவரி இனவரி இடைவரி ஆனவரி மனைவரி குறைவரி காணிகை சம்மாதம் ஆடிபூரம் காத்திகைப்பச்சை மற்றும் எப்பேற்பட்ட இறைகளும் பதினைஞ்சாவதி னெதிர் ஐந்தாவது வைகாசி மாதமுதல் வரி யிலார் கணக்கிலுங் கழித்து இந்நா முதல்

4. தேவதான இறையிலியாக தந்தோம் இப்படிக்கு இவ்வூர்ப்புரவிலும் வரி யிலுங் கழித்து இவ்வோலை சாதனமாகக் கொண்டு சந்தி₃ராத்தியவத் செல்வதாக கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிவித்துக் கொள்க இவை காலிங் கராயன் எழுத்து யாண்டு 15 வதின் எதிர் யாண்டு 5 ள் ... இவை ஆனாந்தூருடையான் எழுத்து உ துல்லியம்.

## 8:12

இடம் : *அர்த்தமண்டபத்திற்கும் மகாமண்டபத்திற்கும் இடைப்ப குதியில்*

காலம் : *சடையவர்மன், யா.15 + 5 (கி.பி.13- ஆம் நூற்றாண்டு).*

செய்தி : *இடைக்காட்டூர் [மண்ட]லிகெம்பீரன் பெருந்தெருவில் இருந்த வணிகர் மாணிக்ககூத்தனான சியாழிவேந்தர் இடைக்காட்டூர் சிவன்கோயில் இறைவனுக்கும் அவரது தந்தை இக்கோயிலில் எழுந்தருளுவித்த பூமேலிருந்த நாச்சியார்க்கும் சிறுகாலையில் அமுதுபடைப்பதற்கும் மாலையில் சந்தியாதீபம் எரிப்பதற்கும் நிவந்தம் அளித் தார். கோயில் நிர்வாகத்தினர் உடன்பட்டு ஆவணம் ஒன்றை வணிகருக்கு எழுதிக்கொடுத்தனர்.*

1. ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடைய பன்மரான ...
2. தேவற்கு யாண்டு [15] வதினெதிர் ரு வல ...
3. மு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் ...
4. முடைய நாயனார்கோயில் ஸ்ரீருத்₃ரஸ்ரீமாஹே ...
5. லிகெம்பிரன் பெருந்தெருவில் வியாபாரிகளில்
6. மாணிக்ககூத்தனான சியாழிவேந்தற்கு பிரமாணம் பண்ணிக்குடுத்த
7. இந்நாயனாற்கும் இவர் பிதாக்கள் மாணிக்ககூத்தர் சியாழியான் பண் ணிண
8. ... டையாள் நாச்சியார் பூமேலிருந்த நாச்சியாற்கும் சந்திராதவற்
9. செலுத்துவோமாக இவர் பக்கல் வாங்கிக்கொண்ட ... ப்ப முப்பதும்
10. கைக்கொண்டு ஆனி உ முதற்தியதி முதல் அமுதுபடிக்கு நாளொன்றுக்கு விளையிற் காலால்
11. அரிசிநாழியுங் கறியமுது வியஞ்சமும் சிறுகாலை ... செய்வித்து இந
12. ... மாலை சந்தியாதீ₃பமாக ஒரு திருவிளக்கிட்டுப் பொ ... முதல்
13. [செல்வது] செல்வதாக கல்லிலும் செம்பிலும்...

## 8:13

இடம் : *அர்த்தமண்டபம் மகாமண்டபம் தென்புறச்சுவர்.*
காலம் : *மாறவர்மன் குலசேகரன் (கி.பி.1268 - 1318).*
செய்தி : *இடைக்காட்டூர் மண்டலிகெம்பீரன் பெருந்தெருவில் வாழ்ந்த வணிகர் பாவூர்குடையான் மாணிக்ககூத்தனான சியாழிவேந்தர் இடைக்காட்டூர் சிவன்கோயிலில் வினா யகப்பிள்ளையாரை எழுந்தருளிவித்து திருவமுது படைப்பதற்காக நல்லாணை திறமை அச்சு என்ற காசுக ளைத் தானமாகத் தந்ததைத் தெரிவிக்கிறது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்பரான திரிபு$_4$வனசக்கரவத்திகள் குலசேகரபாண் டிய தேவற்கு யா ...
2. கீரனூர்நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் உடையார் திருமணிகண்டீச்வரமுடை
3. ய நாயனார்கோயில் முப்பதுவட்டத்து சிவபி$_3$ராமணரும் இவ்வூர் மண்ட லிகெம்பீரன் பெருந்
4. தெருவில் வியாபாரிகளில் பாவூர்குடையான் மாணிக்ககூத்தனான சியாழி வேந்தற்கும் பிடிபாடு பண்ணிக்
5. குடுத்தபரிசாவது இன்னாயனார் கோயிலில் இவர் எழுந்தருளிவித்த வின ாயகப்பிள்ளையாற்கு அமு
6. துப்படி சந்திராதி$_3$த்தியவற் செலுத்துவோமாக இவர்பக்கல் இவ்வாட்டை வைகாசிமாதத்து
7. பதின் எட்டாந்தியதி வாங்கிக்கொண்ட நல்லாணைத் திறமை அச்சு [1, 1/8] இவ்வச்சு ...
8. ரைக்காலும் கைக்கொண்டு இம்மாதத்து பதிநஎட்டாந் தியதி முதல் நாள் ஒன் ...
9. ... திக்கு [விளையிற்] காலால் நாழிஉரி அரிசி அமுதுபடி செலுத்துவோ மாக
10. இப்படி செலுத்துமிடத்து ... முதல் சந்திராதி$_3$தவற் செல்வதாக
11. கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்துக் கொள்வாராக பிடிபாடு பண்ணிக் குடுத்த ...
12. இப்படி செலுத்துமிடத்து ... முதல் சந்திராதி$_3$தவற் செல்வதாக
13. கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்து கொள்வாராக பிடிபாடு பண்ணிக் குடுத்த ...
14. ... சிவபிராமணரோம் பாவூருடையான் மாணிக்க கூத்தனான சியாழி வேந்தற்கு இப்படிக்கு திரு ...
15. ... திருச்சிற்றம்பல பட்டன் எழுத்து இப்படிக்கு ஆடவல்லான் பட்டன் எழுத்து இப்படிக்கு பிள்ளையாந் விநாயக
16. பட்டன் எழுத்து இப்படிக்கு நம்பிகுறிஉடைய பாண்டியபட்டன் எழுத்து இப்படிக்கு திருஞானசம்பந்தபட்டன் எழுத்து.

## 8:14

இடம் : *மகாமண்டபம், மேற்புற வெளிச்சுவர்.*
காலம் : *மாறவர்மன் குலசேகரன் (கி.பி.1268-1318).*
செய்தி : *அரசன் பிறந்த நட்சத்திரமான மூலத்தன்று இடைக்காட்டூர் சிவன்கோயிலில் இரண்டாம் திருச்சுற்றிலும் சந்தனத் தெருவிலும் திருநாள் நடைபெறுவதற்காக தானம் வழங்கியமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மரான திரிபு$_4$வனசக்கரவத்திகள் ஸ்ரீகுலசேகர தேவற்கு.
2. மணிகண்டீசுவரமுடைய நாயனாற்கு திருநாள் எழுந்தருள பிரஸாதஞ் செய்தருளிய திருமுகப்படி அருளிச்செயல் கீரனூர்
3. நாட்டு இடைக்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் உடையார் திரு மணிகண்டீசுவரமுடையார்கோயில் தானத்
4. தார் ... முதல் ஆடி ... இக்கோயிலில் இரண்டாம் பிரகாரத்திலும் சந்தனத் தெருவிலும் திருநாள் எழுந்தருள
5. ... ஐந்ம நக்ஷத்திரமான மூலத்து நாளிலே தீர்த$_2$ம் பிரஸாதி$_3$க்க இட ... க்கு திருப்படிமாற்று உள்ளிட்டு வேண்டுவனவுக்கு உட
6. லாக இன்னாட்டு ... கோட்டை [அவனி] உலகமுழுதுடை சதுவேதி மங் கலத்துப் ... சேனாவரையன் கோட ...
7. ...ன உலகமுழுதுடைய ஈசுவரமுடையார் எழுத்து ... ந்தராயம் நீங்கலாக ஊருடன் இறு ...
8. ... வரி வினியோகம் உட்பட சபையார் ...
9. ...கைக்கொண்டு இந்நாள்முதல்க் ... தருளப்பண்ணவும் ... கல்லிலும்
11. செம்பிலும் வெட்டிக் கொள்க இவை தொண்டை ...முத்து.

## 8:15

இடம் : *மகாமண்டபம், வடபுறம், வெளிச்சுவர்.*
காலம் : *கி.பி. 13-ஆம் நூற்றாண்டு.*
செய்தி : *இடைக்காட்டூர் சிவன்கோயிலில் பணிசெய்த கைக்கோளர் ஒருவர் திருப்பள்ளியறைநாச்சியார் செப்புத் திருமேனி ஒன்றைச் செய்வித்தார். அதற்குரிய அணிகலன்களான பரிச்சந்தம், திருப்பரிசட்டம் இரண்டும் ஒலியல் இரண்டும் அளித்து வழிபாட்டுச் செலவிற்காக எட்டு அச்சுகளை அளித்துள்ளதை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ ... யாண்டு 5வது மது ... மையும் பெற்ற உத்திராட்டாதி நாள் ...
2. க்காட்டூரான அழகியபாண்டியநல்லூர் உடையார் திருப்பணி நாயனார் கோயில் ஸ்ரீருத்$_3$ர ஸ்ரீமாஹேசுவரரோம் இக்கோயிலில் கைக்கோளரில் அடிகள் பெற்ற நாயனான சோழியத்தரையற்குப் பிடிபாடு பண்ணிக் குடுத்த பரிசாவது இவர் இன்னாநா ...

3. ருளுவித்த திருப்பள்ளியறை நாச்சியாற்கு அமுதுபடி உள்ளிட்டு வேண்டும்... த்துக்கும் திருப்பரிச்சட்டம் இரண்டு... இரண்டுக்கும் இ ... ஆனிமாதத்து 18 தியதி இவர் ஒடுக்கின அச்சு 8 இவ்வச்சு எட்டும் நாங்கள் கோயில் முதலாகக் கைக்
4. ண்டு திருப்பள்ளியறை நாச்சியாற்கு நாள் 1கு கோயில் முதலிகள் விட்டு வரும் ... நீங்கலாக வளையிற்காலால் இருநாழி அரிசியும் ப₃ரிசந்தமும் திருப்பரிசட்டம் இரண்டும் ஒலியல் இரண்டுமாக சந்தி₃ராதித்தவற் செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்துக்கொ ...
5. ராக பிடிபாடு பண்ணிக்குடுத்தோம் ஸ்ரீருத்₃ர ஸ்ரீமாஹேசுவரரோம் அடிகள் பெற்ற நாயனான சோழியத்தரையற்கு இப்படிக்கு இவை [உய்ய கொண்ட] பிள்ளை எழுத்து இவை குறிஉடைய பாண்டிய பிம்மாத்ராயர் எழுத்து இவை ...
6. ... பட்டன் எழுத்து இவை திருவிராமிசுவரபிள்ளையாண்டர்எழுத்து இவை இக்கோயில் ஆண்டபிள்ளை எழுத்து இவை ஆண்... எழுத்து திருஞானபட்டன் எழுத்து மாடாபத்தயம்
7. எறிபத்தர் பிள்ளையா னெழுத்து இக்கோயில் கணக்கு பெரியான் திருவிராமீசுவரமுடையான் எழுத்து.

## 8 : 16

இடம் : *மகாமண்டபம், வடபுற வெளிச்சுவர்*
காலம் : *கி.பி. 13ஆம் நூற்றாண்டு.*
செய்தி : *அழகப்பெருமாள்மடம் என்ற திருவாரூர் கீழைமடத்து துறவியருக்கு உணவிற்காக அரை வேலி நிலம் அம்பலத்தாடிநல்லூரில் மடப்புற இறையிலியாக விலைக்கு வாங்கி அளித்தமை.*

1. ... ருளிச்செயல் திருமமு ...
2. க்ச்கா ... த₃ம் கூத்தாடுவான் திருநாடு ாடைய ... அண்ண ... செய்வித்த அழகப்பெருமாள்மட ...
3. த்தில் வத்திக்கும் ... திருவாரூர் கீழைமடத்து ஆசாரியர் ஸன்தானத்து தபஸியர்களுக்கு ... போ₃ஜனம் உள்ளிட்டு வேண்டுவனவுக்கு
4. ரனூர் நாட்டு ... யான் அம்பலத்தாடிநல்லூரில் தாங்கண் விலை கோடு ாடைய நிலத்திலே அரைவேலி நிலம் கடமையும் அந்தராயமும்
5. தருவதான அச்சுங் காரியவாட்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப்பேறும் ... பொன்வரியும் மற்றும் எப்பேர்பட்டனவும் உ
6. ட்பட 2வதின் எதிராமாடு முதல் மடப்புற இறையிலியாக தந்தோம் நான்கெல்லை ... கொண்டு ...
7. ... கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்துக் கொள்வதாக
... திருவாலவாயுடையானான சுந்தரபாண்டிய வி
8. ... எழுத்து.

# 9. மேல்மங்கலம் கல்வெட்டுகள்

சொ. சாந்தலிங்கம், மதுரை.

மதுரை மாவட்டம் பெரியகுளம் வட்டத்தில் அடங்கியுள்ள சிற்றூர் மேல்மங்கலம். பெரிய குளத்திலிருந்து ஆண்டிப்பட்டிக்கு வரும் பேருந்துத்தடத்தில் 5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரின் வடக்கில் வராக நதி என்ற பெயரில் ஓடும் சிற்றாற்றின் கரையில் அமைந்துள்ள வரதராஜப்பெருமாள்கோயில், மாயாபாண்டீசுவரர் கோயில் ஆகியவற்றில் உள்ள கல்வெட்டுகள் சில இங்கு கொடுக்கப் பட்டுள்ளன.

வரதராஜப்பெருமாள் கோயிலில் இரண்டு கல்வெட்டுகளே உள் ளன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் 'மேனெடுங்களநாட்டில் அமைந்த பிரமதேயம் முடிவழங்கு பாண்டியச்சதுர்வேதிமங்கலம்' என்று கூறப் பட்டுள்ளது. இப்பெயர் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத் தில் அவன் பெயரால் வழங்கப்பட்டிருக்கலாம்.

பெருமாள்கோயிலில் தென்புற அதிட்டானத்தில் உள்ள கல் வெட்டு முதலாம் மாறவர்மன் குலசேகரன் (1268-1318) காலத்ததாகும். இக்காலத்தில் மன்னனின் பரிவாரத்தாரில் ஒருவனான தாமோதரத் தொண்டைமான் என்பவன் இவ்வூரில் ஒரு மடத்தை ஏற்படுத்தி அதன் பராமரிப்புக்காக நிலம் கொடையளித்த செய்தியைக் கூறுகிறது.

இரண்டாம் கல்வெட்டு முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (1253-83) காலத்தது. இதிலும் தொண்டைமான் ஒருவன் மடம் ஏற்படுத் திப் பராமரிப்புக்காக நிலக்கொடை கொடுத்த செய்தியே கூறப்பட்டுள் ளது. கல்வெட்டுகளில் இக்கோயில் மாயமான்மறிஈசுவரம் எனப் பெயர் பெற்றுள்ளது. இப்பெயர் இவ்வூர் தலபுராணத்தில் பிற்காலத் தில் கூறப்படும் இராமாயணக் கதைத் தொடர்புகளுக்கு முன்னோட்ட மாக அமைந்துள்ளது. இச்சிவன்கோயிலில் பல கல்வெட்டுகள் உள்ளன. காலத்தால் முற்பட்டது முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டி யன் கல்வெட்டாகும். இக்கோயிற் கல்வெட்டுகள் நிலக்கொடை, பொன் கொடை ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றன. முன்மண்டபத்தில் உள்ள தூண்களில் அவற்றைக் கொடுத்த கொடையாளிகளின் பெயர்கள் வெட்டப்பட்டுள்ளன.

## 9:1

*இடம் : மதுரை மாவட்டம், பெரியகுளம் வட்டம், மேல்மங்க லம் கிராமம், வரதராசப் பெருமாள் கோயில் அர்த்தமண் டபத் தென்புறச்சுவர் அதிட்டானத்தில் உள்ளது.*

*காலம் : மாறவர்மன் குலசேகரபாண்டியன் யா:13 (கி.பி. 1281)*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான் கீழிரணிய முட்டத்து திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமசுவாமிகள் திருமாலிருஞ்சோலை திருப்பதியில் ... ஸன் மடத்து வருத்திக்கும் அஷ்டாதஸ வித்வயுத்வ பிரஹ்மவித்வத்களில் ஆ
2. தி மூர்த்திகள் சிஸ்யரின் ஸத்யான ... கேசவ மஹாமுனிகளுக்கும் ஸிஸ்ய பிரஸிஸ்யர்களுக்கும் தாங்கள் சத்திப்பதாக பரிவாரத்தாரில் தாமோதர னான தொண்டைமான் மேனெடுங்கள நாட்டு பிரமதேயம் முடிவழங்கு பாண்டியச் சதுர்வேதி மங்கலத்து சபையார் பக்கல்
3. விலைகொண்டு இவ்வூரில் கற்பித்த தாமோதரன் மடத்துக்கும் தங்களுக்கு போஜன முள்ளிட்டு வேண்டுவனவுக்கும் இவ்வூர் சபையார் பக்கல் இந்த தொண்டைமான் இவ்வூரளவின்படி ... நிலம் இரண்டு மாவும் காராண் மையும் கடமையும்
4. அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரியவாராச்சியும் வெட்டிப்பாட்டமும் பஞ்சுபீலியும் சந்துவிக்ரஹப்பேறும் வாசப்பேறும் இலாஞ்சனைப் பேறும் பொன்வரியும் மற்றும் எப்பேற்பட்டனவும் உட் பட.... மாச முதல் மடப்புற இறையிலியாக இடப்பெற வேணுமென்று காலிங்
5. கராயர் நமக்குச் சொன்னமையில் தங்களுக்குப் போஜன முள்ளிட்டு வேண்டுவன்வுக்கு இவ்வூர் சபையார் பக்கல் இவன் விலைகொண்ட இவ் வூரளவின்படி நிலம் இரண்டுமாவும் காராண்மை... அந்தராயம் வினி யோகமும் தருவதான அச்சும் காரிய வாராய்ச்சியும்
6. வெட்டிப்பாட்டமும் பஞ்சுப்பீலியும் சந்துவிக்ரகப் பேறும் வாசல்பேறும் இலாஞ்சினைப் பேறும் பொன்வரியும் மற்றும் எப்பேற்பட்டனவும் முட் பட இவ்வாண்டு இந்நாள் முதல் மடப்புற இறையிலியாகத் தந்தோம் இப் படி சந்திராதித்தவற் செல்வதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டுவித்துக் கொ
7. ள்க இவை மிழலைக் கூற்றத்துக் கீழ்கூற்று ஸ்ரீ பிராந்தக நல்லூர் இரும் பாழி உடையான் குடந்தைக் கிடந்தானான சேனாவரையன் எழுத்து இவை கருங்குடி நாட்டு விசையன் குடி இருணீக்கினான் காளைப் பெரு மானான பழந்தீபராயன் எழுத்து யாண்டு 13 ள் 74 இது எம்மண்ட
8. லமுங் கொண்டருளின ஸ்ரீ குலசேகர தேவர் திருமுகம் உ அருளிச் செய்ய கல்வெட்டினேன் குப்பை அய்யனான கொதுகுல ஆசாரியன் எழுத்து.

## 9:2

*இடம் : வரதராசப் பெருமாள் கோயில் வடபுற அதிட்டானம்*
*காலம் : முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1278).*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மெய்கீர்த்திக்கு மேல் ஸ்ரீ கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ வீரபாண்டிய தேவர்க்கு யாண்டு 25 வது எதிரா மாண்டு கற்கடக நாயற்று அமரபட்சத்து ஸப்தமியும் செவ்வாய்க் கிழமையும் பெற்ற அஸ்வதி நாள் ஸ்ரீமற் பரமஹம்ஸ ஸந்த்யாதிகளில் மகேந்திரகிரி சிச்யர் தங்கள் சிஸ்யன் ஸ்ரீ புருசோத்தம ஸக்கர ஸ்ரீ பாதங் களும் இவர் சிஸ்யர் பிரசிஸ்ய ஸார்நமும்ந்தப்பக அளநாட்டு திருப்புது ஊரில்
2. தொண்டைமான்களில் பூர்ண கிரீஸ்வரமுடையான் திருநீலகண்டன் ராஜாக்கள்னாயன் தொண்டைமானேன் மேல் நெடுங்கள நாட்டு பிரம தேசம் ஸ்ரீ முடிவழங்கு பாண்டியச் சதுர்வேதி மங்கலத்தில் நாம் கற்பித்த மடத்துக்கு நாலுவரிசையில் ஸந்தயாதிகளுக்கு பிக்சார்த்தமாக இரண்டா ... ணாற்று மடப்புற இறையிலியாக இவ்வூர் பிராமணர் பக்கல் நாம் கொண்டு இட்ட இவ்வூர் குளப்புரவில் முடிவழங்கு
3. பாண்டிய பிலாற்றுக்கு கிழக்கு ஸ்ரீ கரணவதிக்கு வடக்கு இரண்டாங்கண் ணாறிலும் மூன்றாங்கண்ணாறிலும் நிலம் மூன்று மாகாணியும் இவ்வ திக்கு தெற்கு இரண்டாங்கண்ணாறில் வதியை அடுத்த நிலம் இரண்டு மா முந்திரிகைக் கீழ் முக்காலே அரைக்காலும் ஆக நிலம் ... யும் காலப்பு ரவில் காணவினிய பாண்டிய பிலாற்றுக்கு ... கு பெருங்காலுக்கு தெற்கு ஆறாங்கண்ணாறிலும் ஏழாங்கண்ணாறிலும் ஆக நிலம் நாலுமா அரையே அரைக்காணி முந்திரிகை
4. யும் ஆக ... நிலம் பத்துமா இந்நிலம் பத்துமாவும் மடப்புற இறையிலி யாக ... பத்துமாவுக்கும் குளத்திடலுக்கும் இன்னாள் முதல் கடமை குடிமை அந்தராயம் பொன்வரி வினியோகம் மற்றும் எப்பேற்ப்பட்டன வும் ... தவுந்தோம் இப்படிக்கு நாயனார் ...
5. கோன் ... வெட்டினேன் குப்பை அய்யனான கொதுகுல ஆசாரியன் எழுத்து
[இறுதிவரி மண்ணுக்குள் உள்ளது]

## 9:3

*இடம் : மாயாபாண்டீசுவரர் (சிவன்கோயில்) கருவறை மேற்குச் சுவர் வடமேற்கு மூலையில் உள்ளது.*
*காலம் : முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (1216 - 1244).*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ துவராபதி வேளான் ஓலை மேனெடுங்கள நாட்டு பிரமதே யம் ஸ்ரீமுடி வழங்குபாண்டிய சதுர்வேதி மங்கலத்துப் பண்ணை செய் வார்களும் வேலி செய்வார்களும் மஹா சபையுங்கண்டு விடுதந்ததாவுது முன்பு தங்களுக்கு னாயனார் பிரசாதஞ் செய்தருளிய திருமுகப்படியே

பிடிநடந்த எல்லையும் காலும் ... கடமை அந்தராயமு மற்றும் எப்பேறபட்டனவும் பதினேழாவதின் எதிராமாண்டு சித்திரை மாஸமுதல் நாயனார் தங்களுக்கு பிரசாதஞ் செய்தருளின திருமுகப்படியே நாமும் தந்தோம் இதுவே பிடிபாடாகக் கொண்டு சந்திராதித்தவற் செல்வதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க இப்படிக்கு துவராபதி வேளான் எழுத்து இவை துவராபதி பிரமாதிராஜன் எழுத்து இப்படிக்கு அருளிச் செய்ய இவ்வெழுத்து கல்லில் வெட்டினேன் இவ்வூர் தச்சாசாரியன் குப்பை அய்யனான கொதுகுல ஆசாரியன் எழுத்து.

## 9:4

இடம் : *மாயாபாண்டீசுவரர் கோயில் தென்சுவர் (கருவறை) தென்மேற்கு மூலையில் உள்ளது.*

காலம் : *முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (1216 - 38).*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு பத்தாவது உடையார் மாய மாந்மறி ஈசுவரமுடைய நாயனார் பெரிய நாச்சியார் திருமார்கழித் திருவாதிரை திருநோன்பு நோற்றருள கீழ்வெண்பை நாட்டுத் திருநெல்வேலியில் கப்பகவார் கைக்கோளன் சேம்பன் விரதமுடித்தான் தந்த பழங்காசு ஐஞ்சும் பரிமேலழகியான் ... சந்தானமான மாணிக்க வாசகன் தந்த பழங்காசு பத்தும் ஆக பழங்காசு பதினைஞ்சும் கைக்கொண்டு ... கைக்கொண்டு இத்திருவாதிரை நோன்பு எழுந்தருள... இக்கோயில் முப்பது வட்டத்து திருவ ... கையாரோம் இத்தன்மம் சந்திராதித்தவர் உள்ளவரை ... அருளிச் செய கல்வெட்டினேன் இக்கோயில் தச்சாசாரியன் குப்பை அய்யனான கொது குல ஆசாரியன் எழுத்து.

## 9:5

இடம் : *மாயாபாண்டீசுவரர் கோயில் கருவறை தென்சுவர் (நடுப்பகுதி)*

காலம் : *முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1216-38).*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாற பன்மரான திரிபுவனச் சக்கர வத்திகள் சோழம... வீராபிசேகமும் விசையா பிசேகமும் பண்ணியருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவற்கு பதினேழாவதின்... அருளிச் செய்ய... ஆண்டார் சீசநாய ... தேவற்கு மேனெடுங்கள நாட்டு மேல்மங்கலமான முடிவழங்கு பாண்டிய சதுர்வேதி மங்கலத்து உடையார் மாயமான் மறை ஈசுவரமுடைய னாயனார் கீழைத் திருவாசல் ஆண்ம அழகியான் திருமடத்துக்கு இவ்வூர் கீழ்பிடாகை கீழ்மங்கலத்து மடப்புறமாக நாம் குடுத்த நிலம் செல்கால் நிலம் முக்காணியும் கிடந்த தரிசும் பதினேழாவதின் எதிராமாண்டின் எதிராமாண்டுகளில் உகவை இருக்கும் ஆண்டுகள் ஒன்றுபாதி இறுப்பதாகவும் இந்நிலத்தால் இறைகடமை வரி அந்தராயம் புள்ளி ஒன்றுபாதி இறுப்பன

வும் யிறுத்து இறையிலியாக நீர்வார்த்து தந்தோம் இப்படி கைக்கொண்டு சந்திராதித்தவற் செல்வதாக இவர்க்கும் இவர் சந்தானத்தார்க்கும் செல்லக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க இவை அழகிய பெருமாள் சொக் கனான ஆண்மை அழகியான துவராபதி வேளான் எழுத்து இவை வினா யக பட்டன் எழுத்து... துவராபதி வேளான் எழுத்து... கல்லில் வெட்டினேன் இக்கோயில் தச்சாசாரியன் ஸ்ரீ மூலஸ்தான ஆசாரியன் எழுத்து

## 9:6

*இடம் : மாயாபாண்டீசுவரர் கோயில் தென்சுவர் (முன்மண்டபம்).*

*காலம் : முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (1216 - 38).*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் சோழ மண்டல ... வீராபிசேகமும் விசையாபிசேகமும் பண்ணியருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு பதினேழாவதின் எதிராமாண்டின் எதிராமாண்டு ... மேனெடுங் கள நாட்டு பிரமதேயம் முடிவழங்கு பாண்டிய சதுர்வேதி மங்கலத்து மாயமான்மறி ஈசுவரமுடைய நாயனார் தானத்தார்க்கும் தேவகன்மிக்கும் இன்னாயனார் தேவதானமான நிலம் கீழ்மங்கலத்திலும் மேல் மங்கலத்தி லும் கூன் குன்றக் குளக்கீழும் வடநிலைப் பற்றிலும் இராஜ சூடாமணிச் சதுர்வேதி மங்கலத்திலும் பரிமேலழகியான் ஏறுசேவக உடையார் நிலம் கீழ்மங்கலத்திலும் ஆக இப்படி ஆண்மை அழகியான் ... முட்பட்டநிலம் இருபத்தொரு மா ... எதிராமாண்டின் எதிராமாண்டு ... மாண்டுகள் ஒன் றுபாதி இறு ... அந்தராயம் புள்ளிச்சோறு பஞ்சுபீலி ஊரிஞ்ச பெருவரி மற் றுமெ ... யிறுத்து இறையிலியாக நீர்வார்த்து ... கைக்கொண்டு நித்த நிமிந்த ... வெஞ்சனங் களுக்கு வேண்டுவன... ணிக் குடலாகவும் இப்படி சந்திராதித்த ... துவராபதி வேளான் எழுத்து ... ள முடையனான ... யிப் படி கல்லில் வெட்டினேன் ... தச்சாசாரியன் குப்பையன் ... எழுத்து

## 9:7

*இடம் : மாயாபாண்டீசுவரர் முன்மண்டபம், தூண்களில் உள்ள கல்வெட்டுகள்*

*காலம் : கி.பி.13-ஆம் நூற்றாண்டு.*

கொடும்பாளூர் மணிக்கிராமத்து ஆடவல்லான் சொக்கனான அழக சொக் கன் தர்மம்.

கொடும்பாளூர் மணிக்கிராமத்து ஆடவல்லான் சொக்கனான அழக சொக் கன்.

கைக்கோளரில் உடையான் கல்ப்பகப் பெருமாள் தருமம்.

# 10. உத்தமபாளையம் பகுதியில் பாண்டியர்கால எல்லைக்கற்கள்

ஜி. சேதுராமன், மதுரை.

இடைக்காலத் தமிழ்நாட்டில் ஏராளமான நிலமானியங்கள் வழங்கப்பட்டுள்ளன. பல்வேறு சமயக்கோயில்களுக்கும் தனி நபருக்கும் வழங்கப்பட்ட நிலங்களின் எல்லைகள் வரையறுக்கப்பட்டு அவற்றின் நான்கெல்லைகளிலும் உரிய குறியீடு பொறிக்கப்பட்ட எல்லைக்கற்கள் நடப்பட்டுள்ளதை கல்வெட்டுகள், செப்பேடுகள் தெரிவிக்கின்றன. இதனை 'இந்நிலத்தில் நாற்பாலெல்லையிலும் திரிசூலக்கல்லுநாட்டி', 'நாற்பாற்கெல்லையிலும் திரிசூலதாபரம் பண்ணி', 'திருவாழியாழ்வாரை எழுந்தருளுவித்து', 'நாலுமூலையிலும் திருவாழிகல்நாட்டி திருவாழியும் சித்திரமேழியும் இட்ட கல்', 'கல்லும் கள்ளியும் நாட்டி', என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[1] நிலஎல்லைக்கற்களில் பெருமாள்கோயிலுக்குரியவற்றில் திருமாலின் சக்கரத்தினையும், சிவன்கோயிலுக்குரியவற்றில் சிவனின் திரிசூலத்தினையும், சமணர் கோயிலுக்குரியவற்றில் முக்குடையினையும் பொறிப்பது வழக்கமாக இருந்திருக்கிறது. இவற்றில் கல்வெட்டு பொறிப்பது அருகிய வழக்காக உள்ளது.

தேனி மாவட்டம், உத்தமபாளையம் பகுதியிலுள்ள மாணிக்காபுரம், குசவம்பட்டி என்ற இரு ஊர்களில் இரண்டு தமிழ் கல்வெட்டு பொறித்த நிலவெல்லைக் கற்கள் களவாய்வில் கண்டறியப்பட்டன. இவை இரண்டும் முறையே கி.பி.13-15 ஆம் நுற்றாண்டுகளில் தானமாக வழங்கப்பட்ட நிலங்களில் இன்றும் உள்ளன. இவற்றில் மன்னர்களின் பெயர்கள் பொறிக்கப்படவில்லை. ஆனால் இவற்றின் எழுத்தமைதி கொண்டு இவற்றின் காலத்தினை உணரமுடிகிறது.

## 10:1 மாணிக்காபுரம்

வீரபாண்டிக்கு அருகில் சுருளியாற்றின் மேல்கரையில் மாணிக்காபுரம் உள்ளது. ஊரின் தென்மேற்கே உள்ள வயலில் இவ்வெல்லைக் கல் நடப்பட்டுள்ளது. இதனை இவ்வூர் மக்கள் பாண்டிக்கோயில் என்ற பெயரில் அழைத்து வழிபட்டு வருகின்றனர். கல்யாணம் செய்து கொண்டவர்கள் இதற்குத் தேங்காய் உடைத்து வழிபாடு செய்கின்றனர்.

இக்கல்லில் உள்ள கல்வெட்டு ஐந்து வரிகளில் ஸ்வஸ்தி ஸ்ரீ ஸவன்னர் நிலத்துக்கு தென்னெல்லை என்று உள்ளது. பொருள் வெளிப்படையாக உள்ளது. மற்ற எல்லைகளிலும் இதுபோன்று எல்லை குறித்து கற்கள் நடப்பட்டிருக்க வேண்டும். அவை காலப் போக்கில் அழிந்துபட்டிருக்க வேண்டும். தனி ஆளுக்கு வழங்கப்பட்ட இக்கல்லில் குறியீடுகள் எதுவும் பொறிக்கப்படவில்லை.

சவனம் என்றால் வேள்வி என்று பொருளாகும்.[2] இதனால் வேள்விசெய்த பிராமணரைச் சவன்னர் என்று அழைத்தனர். இவர்களைச் சத்திரியப்பெண்ணிடம் பிராமணர்க்குப் பிறந்த கலப்புச் சாதியினராகவும் (அனுலோமர்) கருதுவது உண்டு.[3] சவன்னர் என்றழைக்கப்பட்ட இப்பிராமணர்கள் மாணிக்காபுரத்திற்கு அருகிலுள்ள சுருளியாற்றின் கீழ்கரையில் அமைக்கப்பட்ட ஆழ்வான்நங்கைச் சதுர்வேதிமங்கலத்தில் வாழ்ந்திருக்கின்றனர். இதனை அங்குள்ள முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியனின் சிவன்கோயில் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. பிராமணர் குடியிருப்பாக இருந்த இவ்வூரே தற்போது உப்பார்பட்டி என்று வழங்கி வரப்படுகின்றது.[4] முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் சவன்னர் பன்னிருவருக்கும் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் சவன்னர் ஒருவருக்கும் பல வேலி நிலங்கள் தானமாகத் தரப்பட்டுள்ளன. ஆத்திரேய கோத்திரம், பாரத்துவாஜகோத்திரம், ஆரிதகோத்திரம், காசிபகோத்திரம் போன்ற பல்வேறு கோத்திரங்களைச் சார்ந்தவர்களாகக் கல்வெட்டுகளில் இவர்கள் குறிப்பிடப்படுகின்றனர்.

## 10:2 குசவம்பட்டி எல்லைக்கல்

உத்தமபாளையத்திலிருந்து கோம்பை என்ற ஊருக்குச் செல்லும் வழியில் கோம்பைக்கும் முன்பாகக் குசவம்பட்டி உள்ளது. இவ்வூருக்குக் கிழக்கேயுள்ள முத்தாலம்மன் குளத்திற்குத் தென்மேற்கே அமைந்திருக்கும் தோட்டத்தில் உள்ள சிறிய பாறையே எல்லைக்கல்லாக மாற்றப்பட்டு அதில் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இதில் சூரியன், சந்திரனோடு பெரிய திரிசூலத்தின் உருவமும் காணப்படுகிறது. இதில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டின் எழுத்தமைதியைக் கொண்டு கி.பி.14-ஆம் நுற்றாண்டைச் சார்ந்ததாக இதனைக் கருதலாம். பூலாந்துறை இசரன் திருவிடையாட்டமான சிமலப்பட்டி என்று கல்வெட்டுக் காணப்படுகிறது. மலைப்பட்டி என்ற ஊர் கல்வெட்டில் மலப்பட்டி என்று சுட்டப்படுகிறது. இப்பகுதியில் அமைந்த மலப்பட்டி என்ற கிராமம் முழுமையும் பூலாந்துறை சிவன்கோயில் ஈசுவரர்க்குத் தானமாகத் தரப்பட்டிருக்கிறது. ஊர் அழிந்துபட்ட நிலையில்

அதன் எல்லைக்கல்லை மட்டும் இன்று குசவம்பட்டியில் காணமுடிகிறது.

பூலாந்துறை ஈசுவரர் கோயில் என்று கல்வெட்டில் குறிப்பிடும் கோயில் இப்பகுதியில் உள்ள சின்னமனூர் சிவன்கோயிலுக்குரிய பெயராக அங்குள்ள கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது.[5] இதுவே இராசிம்மேசுவரம் என்றும் வழங்கப்பட்டிருக்கிறது.[6] சுருளியாற்றின் கீழ்க்கரையில் அமைந்த பூலாந்துறைக்குச் செல்லும் வழியில், அதனருகில் அமைந்த கோயிலாக இது விளங்கியதால் இது திருப்பூலாந்துறை ஈசுவரர்கோயில் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். சின்னமனூர் பெரிய செப்பேட்டை வெளியிட்ட இராசசிம்மன் என்ற பாண்டியமன்னனால் கட்டப்பட்டமையால் இது இராசசிம்மேசுவரம் என்று பெயர் பெற்றிருக்க வேண்டும்.

---

***அடிக்குறிப்புகள்***

1. *தெஇக.12, எண்.142, 170; தெஇக.4, எண்.319; தெஇக.5, எண்.496; தெஇக.7, 780.*
2. *தமிழ்ப்பேரகராதி, பக்.1336.*
3. *மேலது.*
4. *வெ. வேதாசலம், 'ஆழ்வான்நங்கைச்சதுர்வேதிமங்கலம் (உப்பார்பட்டி),' உத்தமபாளையம் தமிழகத்தொல்லியல் கழகக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரை.*
5. *தெஇக.23, எண்.434.*
6. *மேலது எண்.428.*

# 11. அரியலூர் பகுதியில் போசளர் காலக் கல்வெட்டுகள்

**இல. தியாகராஜன், அரியலூர்.**

சோழர் ஆட்சியின் இறுதிக் காலத்தில் தமிழ்நாட்டில் போசளர் ஆதிக்கம் ஏற்பட்டது. மூன்றாம் இராசராசன் (1216-1257), மூன்றாம் இரா சேந்திரன் (1246-1279) ஆகியோரின் காலத்தில் வீரநரசிம்மன், வீர சோமேசுவரன், வீர இராமநாதன் ஆகிய போசள மன்னர்கள் சோழநாட்டில் இணையரசர்களாக ஆதிக்கம் செலுத்தியதுடன் தங்கள் பெயரில் தனியாகவும், சோழ மன்னர் பெயரிலும் கல்வெட்டுகள் வெளியிட்டனர்.

இவ்வகையில் வெளியிடப்பட்ட பல கல்வெட்டுகள் இக்கட்டுரை ஆசிரியரால் கண்டறியப்பட்டுள்ளன. இவற்றில் 11 புதிய கல்வெட்டுகள் மட்டும் இங்கு தரப்படுகின்றன.

**சித்தளி**

பெரம்பலூர் அருகே அமைந்துள்ள இவ்வூர்ப்பெயர் கல்வெட்டில் சிற்றகழி என குறிக்கப்பெறுகின்றது. இவ்வூர் வீரபுரிசுவரர் கோயிலில் மூன்றாம் இராசராசன் காலத்திய மூன்று கல்வெட்டுகள் (கி.பி.1222) உள்ளன. இதே ஊரில் உள்ள வரதராஜ பெருமாள் கோயிலில் போசள மன்னர் வீரசோமேசுவரன் காலத்து மூன்று கல்வெட்டுகள் (கி.பி.1237) உள்ளன. பெருமாள் கோயில் கல்வெட்டுகளில் இருந்து சிற்றகழியின் ஒரு பகுதியைப் பிரித்து தேவண்ணசதுர்வேதிமங்கலம் என்று பெயரிட்டு 22 பிராமணர்களுக்கும், தேவண்ணப் பெருமாள் என்ற விஷ்ணு கோயிலுக்கும் இம்மன்னரால் இறையிலியாக வழங்கப்பட்டது. மேலும் பதுமாத்தி அக்கன் என்பவர் மன்னருக்கு காப்பாக கோயிலுக்கு 14 வேலி நிலமும் பிராமணர்களுக்கு 32 வேலி நிலமும் என 46 வேலி நிலத்தை மன்னரிடமிருந்து அனுமதி பெற்று வழங்கியுள்ளார். இதை மன்னரின் தளபதி அரிஹர தண்ட நாயக்கர் ஆணையாக ஓலை மூலம் கோயில் தானத்தார்க்கும் பிராமணர்க்கும் அனுப்பி தெரிவித்துள்ளார்.

## 11:1

இடம் : வரதராஜபெருமாள் கோயில் தெற்கு சுவர்.
காலம் : வீரசோமேசுவரன், கி.பி.1237.
குறிப்பு : கல்வெட்டு பல இடங்களில் சிதைந்துள்ளது.

1. ஸ்வஸ்திஶ்ரீ ஸமஸ்த புவநாச்ரய ஶ்ரீப்ருதிவி வல்லப மஹாராஜ ராஜபர மேச்வர துவராபதிபுரவராதீச்வர யாதவ
2. குலாம் பர்த்யமணி ஸர்வஜ்ஞ சூடாமணி மலராஜராஜ மலபருளுகண்ட கண்டப்ரஸண்ட கண்டபேருண்ட நேகாங்க வீ
3. ரந் ஸஹாய சூரந் ஸநிவார ஸித்தி கிரிதுர்க்க மல்ல ஸலகந்தராம வைரிய கண்டீரவ மகதராஜ்ய நிர்மூலந பாண்டிய திஸாபத்த சோளராஜ்ய
4. ப்ரதிஷ்டாசார்ய நிச்சங்க ப்ரதாப சக்ரவத்தி போசள ஶ்ரீவீரசோமேச்வர தேவரஸர் வேம்பார் ப
5. ற்றில் குன்றக் கூற்றத்து சிற்றகழி தேவண்ணச் சதுர்வேதிமங்கல மென்
6. னும் தேவதான அகர சதுர்பட்டர்கள் இருபத்திருவர்க்கும் சிற்றகழியில் புன்செய் நி
7. லம் இருபத்தொன்ப ... இறையிலியாக இட்டோம் ...
8. லாலே அளந்து கொண்டு இந்நிலத்துக்கு கல்வெட்டிக் கொண்டு ...
9. கண்ட ஸ்வஸ்தி ஶ்ரீமன்மஹாப்ரஸாயித்த தாயி பதுமாத்தி அக்கன் ஓலை குன்றக்கூற்ற
10. த்து சிற்றகழியில் பிரிந்த தேவண்ணச் சருப்பேதிமங்கலத்துப் பட்டர்க ளுள் இரு ...
11. செய்நிலத்திலே இவ்வூர்க்கும் மேலை ஏரிக்கும் ஓடைக்கும் மேற்கும் தென்பாற்கெ ...
12. மேல்பாற்கெல்லை பீல்பாடி எல்லைக்குக் கிழக்கு வடபாற்கெல்லை பீல் பாடி வழிக்கு
13. ...

## 11:2

*இடம் : வரதராஜப் பெருமாள் கோயில், மகாமண்டப மேற்குச் சுவர்.*

*காலம் : வீரசோமேசுவரன், கி.பி.1237.*

1. ஸ்வஸ்தி ஶ்ரீமந் மஹாப்ரதாநி ஹரிஹர தண்டநாயக்கனோலை
2. சிற்றகழி தேவண்ண விண்ணகர எம்பெருமாள் கோயில் தாநத்தாரு
3. ம் தேவண்ணச் சதுர்வேதிமங்கலத்து பட்டர்களும் கண்டு பதுமா
4. த்த அக்கன் தேவனுக்கு ரக்ஷாத்யமாக தேவன் ஶ்ரீஹஸ்தத்தாலே
5. தாரை இறைப்பித்து இறையிலியாக இடுவித்த திருவிடையாட்
6. டம் நிலம் பதினாலு வேலியும் பட்டர்கள் நிலம் முப்பத்திருவேலி
7. யுமாக நிலம் நால்பத்துஆறு வேலியும் தேவன் இராயஸப்படி வா
8. லிகண்டபுரத்து தொட்டிய கோலாலே நாலாவது தேவன் கூ
9. சுவர்க்கும் அக்கன் சிறு பிள்ளைகளுக்கும் தானத்தார்க்கும்
10. பட்டர்களுக்கும் ஏற என் அதிகாரி சோமண்ணனும் யாதவ
11. ராயனும் அளந்த திருவிடையாட்டம் நிலம் பதினாறு வேலியும்
12. பட்டர்கள் நிலம் முப்பத்திருவேலியுமாக நிலம் நால்பத்தறு வேலியும்
13. தேவன் இராசதப்படியே நாமும் இறையிலியாக விட்டோம் அனுபவிப் பதே.

## 11:3

இடம் : *வரதராஜப் பெருமாள் கோயில், மகாமண்டப வட சுவர்.*
காலம் : *வீரசோமேசுவரன், கி.பி.1237.*

1. ஸ்வஸ்திஸ்ரீ திண்டீசுரன் ஓலை சாகரஞ் சூழ் வையகத்துப் பண்
2. டேயறஞ் செய்தான் செய்தான் அறங்காத்தான் பாதம் திறம்பாமல் சென்னிமேல் வைத்
3. து சிற்றகழி தேவண்ண விண்ணகர எம்பெருமான் திருமுற்றம் நாற்பத்தெண்
4. ணாயிர ஸ்ரீமாஹேச்வர ரக்ஷை.

**வாலிகண்டபுரம்**

*வீரசோமேசுவரனின் நன்மைக்காக இவருடைய தாதி பதுமவ்வை என்பவர் வாலீசுவரர் கோயில் இறைவிக்கு திருவமுது படைக்க சிறுகுடல் ஊர் ஏரியின் கீழ் அரை வேலி நிலம் விட்டார். இதனை ஓலை மூலம் கோயில் அலுவலருக்கு மன்னர் தெரிவித்தார். கல்வெட்டில் மூன்றாம் இராசராசன் குறிப்பிடப்பெறுகிறார்.*

## 11:4

இடம் : *வாலீஸ்வரர் கோயில், மகாமண்டபத் தென் சுவர், மேற்கு பத்தி (சகஸ்ரலிங்கம் உள்ள அறை).*
காலம் : *வீரசோமேசுவரன், கி.பி. 1233-62.*
குறிப்பு : *கல்வெட்டு போசளமன்னரின் ஆணை பற்றிக் கூறுகிறது. நடுவில் மூன்றாம் இராசராச சோழரின் ஆட்சியாண்டும் குறிப்பிடப்பெறுகிறது. ஆட்சியாண்டு உள்ள பகுதி மீது சுவர் வைத்து மறைத்து கட்டடப்பட்டுள்ளது. அடைப்புக் குறிக்குள் உள்ள பகுதி ஊகித்துப் படிக்கப்பட்டுள்ளது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ போசளவீர சோமீஸ்வர தேவரைசர் ஓலை வன்னாட்டு வா
2. லிகண்டபுரத்து உடையார் திருவாலீஸ்வரமுடைய நாயனார் கோயில் தா
3. னத்தார் கண்டு திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீஇராசராச தேவற்கு யாண்டு...
4. வதில் நம் தாதி பதுமவ்வை நமக்கு நன்றாக ஒரு சந்தி அமு...
5. நாச்சியார் ஸ்ரீஹஸ்தத்தில் நீர் வார்த்து இந்நாட்டு சிறுகுடல் ஏரிகீழ்...
6. த்து தேவதான இறையிலியாக இட்ட நிலம் அரை [வேலி]
7. க்கும் திருச்சூலதாபனம் பண்ணித் திருக்கற்றளியிலே...
8. ட்டி கல்வெட்டி கொள்வதே இது மாறுவான் தந் மிணாட்டியை பு
9. லையற்கு குடுப்பாந் இது ஸ்ரீமாஹேச்வர ரக்ஷை.

*காமரசவல்லி*

*இவ்வூர் சிவன் கோயில் மகாமண்டபம், திருமதில் ஆகியவற்றை 1260இல் வீரராமநாதனின் தளபதி ஸ்ரீரங்க தண்டநாயக்கர் என்பவர் கட்டியுள்ளார். இக்கோயிலில் முருகன் சன்னதி (இளையபிள்ளையார்) திருமுன் மண்டபம் மற்றும் நிருத்த மண்டபத்தில் தட்டோலை இடும் பணிகளை புதுக்குடையான் அரையன் திருவரங்கமுடையாரான அம்மையிலும் நல்ல செம்பியதரயன் என்பவர் செய்துள்ளார். அலங்கார மண்டபத்தில் நிற்கும் தூண் ஒன்றை நுணாங்குறிச்சியைச் சேர்ந்த சுருதிமான் இனத்து மலைப்பெருமாள் அமரகோனார் என்பவர் வழங்கியுள்ளார்.*

## 11:5

*இடம் : காமரசவல்லி (அரியலூர் வட்டம்) சௌந்தேசுவரர் கோயில், மகாமண்டப வாயில் நிலைக்கால்.*
*காலம் : வீரஇராமநாதன், யா:6 (கி.பி.1260).*

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸர்வபூம சக்கர
2. வத்திகள் ஸ்ரீபோசள
3. வீரஇராமநாத தேவர்
4. க்கு யாண்டு ஆறா
5. வது ஸ்வஸ்திஸ்ரீமந்
6. மஹாப்ரதானி ரவி
7. தேவ தண்டநாய
8. க்கர் மகனார் ஸ்ரீரங்க
9. தெண்ட நாயக்கர்
10. உடையார் திருக்கா
11. ற்கோடீச்வரமுடை
12. யார் கோயில் திருமண்
13. டபம் மதிளும் இத்திரு
14. ப்பணி செய்வித்தார்.

## 11:6

*இடம் : மகாமண்டபத் தென்சுவர்.*
*காலம் : வீரஇராமநாதன் (கி.பி.1254-1294).*
*குறிப்பு : இம்மண்டபம் கட்டியது பற்றி வீரஇராமநாதனின் கல்வெட்டு (எண்.11:5) கூறுகிறது. எனவே, இதில் உள்ள கல்வெட்டும் வீரஇராமநாதன் காலத்தியது எனக் கருதலாம்.*

1. ஸ்வஸ்திஸ்ரீ இளைய பிள்ளையார் திருமுன்
2. பு திருமண்டபம் செய்தாரும் இந்த நிருத்த

3. மண்டபம் தட்டோலை இடுவித்தாரும்
4. புதுக்குடையான் அரையன் திருவர
5. ங்கமுடையாரான அம்மையிலு நல்ல
6. செம்பியதரயர் இவர் தந்மம்.

## 11:7

*இடம் : அலங்கார மண்டபத்தூண்.*
*காலம் : வீரஇராமநாதன் (கி.பி.1254-1294).*

1. இத்தூணாட்டு
2. வித்தார் நுணா
3. ங்குறிச்சியிற்
4. சுருதிமாந்களி
5. ல் மலைப்பெரு
6. மாள் அமரகோ
7. னார் தந்மம் உ

**வசிஷ்டபுரம்**

*மூன்றாம் இராசராசன் பெயரில் எழுதப்பெற்று போசளர் பற்றிக் கூறும் கல்வெட்டுகள் வசிஷ்டபுரம், வரகூர், அயன்பேரையூர் ஆகிய ஊர்களில் கிடைத்துள்ளன. போசளமன்னரின் சேனைபோகரில் (கணக்கர்) கேசவதேவன் என்பவர் வசிஷ்டபுரம் பெருமாள் கோயிலுக்கு மாதந்தோறும் அமாவாசை நாளில் இறைவன் எழுந்தருள நிலம் வழங்கியுள்ளார்.*

## 11:8

*இடம் : வசிஷ்டபுரம் (திட்டக்குடி வட்டம்) அரங்கநாதர் கோயில், அர்த்த மண்டபத் தென்சுவர்.*
*காலம் : மூன்றாம் இராசராசன், யா:19 (கி.பி.1235).*

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜராஜதேவ
2. ற்கு யாண்டு 19 ஆவது திருமகிழம் பந்தல் எம்பெரு
3. மானுக்கு மாஸந்தோறும் அமாவாஸி எழுந்தருள அமு
4. துபடி சாத்துபடி திருவிளக்கு உள்ளிட்ட வெஞ்சனங்களுக்கு
5. தேவந் சேனை போகரில் கேசவ தேவன் திருநாமத்துக்காணியா
6. க கொண்டு விட்ட ஏரிகீழ் எசளூர் ஐஞ்சாங் கண்ணாற்றில்
7. நிலங்கள் இருநூற்றுச் சின்னம் உ

**வரகூர்**

*வரகூரில் கிடைத்துள்ள கல்வெட்டு சிதைந்துள்ளது. இருப்பினும் வல்லாளராஜன் (வீரசோமீஸ்வரன்) கண்ணனூரில் இராஜ்யம் செய்வதாகக் கூறுகிறது.*

## 11:9

*இடம் : வரகூர் (பெரம்பலூர் வட்டம்), சிவலோக முடையார் கோயில் மகாமண்டபத் தென்சுவர்.*

*காலம் : மூன்றாம் இராசராசன், (யா:20, கி.பி.1236).*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு 20
2. ஆவது கண்ணனூரில் வல்லாள தேவன் ராஜ்யம் செய்கையி
3. ல் [கண்மகன் யோ]... றைய நாச்சறசர் பசி[யை]டாதண்ணா சிவலோகமுடையார் சீபண்டாரத்து கூசுரரி
4. ...

**அயன்பேரையூர்**

இவ்வூர்க்கல்வெட்டுக்களில் போசளத் தளபதிகள் குமர தேவண்ண தண்ட நாயக்கர், பதுமாத்திஅக்கன் ஆகியோர் பேரவூர் திருமுக்கூடலுடைய நாயனார் கோயிலுக்கு இறையிலியாக நிலம் மற்றும் கீரனூர் ஆகியவற்றை விட்டது பற்றிக் கூறுகிறது. இராஜராஜ தேவனான வாண கோவரையர் எனும் ஆறகளூர் சிற்றரசரும் போசளருடன் தொடர்பு கொண்டிருந்ததை ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது.

## 11:10

*இடம் : அயன்பேரையூர் (பெரம்பலூர் வட்டம்), முக்குட்டீஸ்வரர் கோயில் கருவறைத் தென்சுவர்.*

*காலம் : மூன்றாம் இராசராசன், யா:25 (கி.பி.1241).*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ
2. இராஜராஜதேவற்கு யாண்டு 25-வது ள் நா-
3. று அபரபக்ஷத்து புதன்கிழமையும் பெற்ற திருவோ-
4. ணத்து நாள் ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாப்ரதானி
5. குமரதேவண்ண தண்டநாயக்கநேன் வ-
6. ன்னாட்டு பேரவூருடையார் திருமுக் கூடலு-
7. டைய நாயனார் தேவதாநம் நன்சை புன்-
8. சை செம்பை ராஜராஜதேவனான வாண-
9. கோவரையன் விட்ட ப-
10. டியே 25-ஆவது ஆனி மாதம் முதல் சந்-
11. திராதித்தவரையும் செல்லக் கடவிதாக
12. இறைஇலியாக விட்டோம் இந்தச் சிவகா-
13. ரிய்த்துக்கு விக்நம் நிநைத்தாருண்டாகி-
14. ல் சிவத்துரோகியும் நாட்டுத் துரோகியு-
15. மாய் என் குதிரைக்குப் புல்லிடும் பறைய-
16. னுக்குத் தன் மிணாட்டியை குடுப்பான்
17. இப்படிக்கு...

18. தேவதானம் கல்வெட்டிக் குடுத்தே-
19. ன் குமார தேவண்ண தெண்ட நாயக்-
20. கநேன் உ இது ஸ்ரீமாஹேச்வர ரக்ஷை உ
21. சிவமஸ்து உ அறஞ் செய்தான் செய்தா-
22. ன் அறங்காத்தான் பாதடி திறம்பாம-
23. ல் சென்னிமேல் வைத்து உ சிவமஸ்து உ.

## 11:11

*இடம் : அயன்பேரையூர் (பெரம்பலூர் வட்டம்), முக்குட்டீஸ்வ ரர் கோயில் மகாமண்டபத் தென்சுவர்.*

*காலம் : மூன்றாம் இராசராசன், யா:30 (கி.பி.1236).*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ இராச
2. ராசதேவற்கு யாண்டு 30-தாவது கரிகால கன்ன
3. வளநாட்டு வன்னாட்டுப் பேரவூருடையார் திருமுக்கூ
4. டலுடைய நாயநாற்கு துலா நாயற்று அபரபக்ஷத்
5. துத் திங்கள் கிழமையும் பஞ்சமியும் பெற்ற மிருகசீரி
6. ஷத்து நாள் ஸ்வஸ்தி ஸ்ரீமத் மஹாப்ரதாநி இரதீப பது
7. மாத்தி அக்கநேந் உகளூர் கூற்றத்துக் கீரைநூர் இன்னாய
8. னாற்க்குத் தேவதாந இறையிலியாகக் கீழ்வாரக் காசுள்பட்ட
9. ஸர்வ்வ சிற்றாயங்களும் இழந்து உதகம் பண்ணிக் குடுத்தோ-
10. ம் இந்தக் கீரைநூர் தேவதாந இறைஇலியாக ஊர[ட]ங்கலும் விட்ட
11. படிக்குத் திருமுக்கூடலுடைய நாயனார் தேவாலயத்தே சந்திராதித்த
12. வரையும் செல்லக் கடவதாக கல்வெட்டிக் குடுத்தேன் தாதிப்
13. பதுமாத்தி அக்கநேன் இந்தத் தேவதாநத்துக்கு யாதாமொருவர் அகிதம் நினை-
14. த்தாருண்டாகில் இராசத்துரோகி நாட்டுத் துரோகி சிவத்துரோகிகளு
15. மாய்த் தன்னுடைய தாய்க்கு தாநே அகமுடையாநுமாய்க் கெங்கை
16. கரையில்க் கோடி குரால்பசுவைக் கொன்றான் பாவமுங் கொ
17. ண்டு இருபத்தெட்டுக் கோடி னரகத்திலே சந்திராதித்தருள்ளவரை
18. யும் புழுவாய் செனித்து ஆதியோரமென்கிற னரகத்திலே கீழ்பட்டா
19. ன் உ பண்டே அறஞ் செய்தான் செய்தான் அறங்காத்தான் பாதந் திற
20. ம்பாமல்ச் சென்றிமேல் வைத்து உ சிவமஸ்து உ இது பன்மாஹேச்வர ரக்ஷை உ

---

*(மேற்கண்ட ஊர்களில் கள ஆய்வு நடத்தியபோது உதவிய பேராசிரியர் பி. முருகாநந் தம், பேராசிரியர் சே. பாண்டியன், திரு.பி. கோதண்டராமன், செயல் அலுவலர், திட் டக்குடி, திரு.வை. சுந்தரேசன், திரு. டி. தனசேகரன், திரு. ராஜகோபால், செயல் அலுவலர், ஆடுதுறை ஆகியோருக்கு நன்றி).*

# 12. செவலூர்-மலையடிப்பட்டி கல்வெட்டுகள்

கரு. இராசேந்திரன், பனையூர்.

## 12:1

இடம் : புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், செவலூர் சேகரம் மலையடிப்பட்டி ஊருக்கு தெற்கில் உள்ள நரிப்புலி ஆண்டவர் கோவிலின் மேற்கு பாறையின் கிழக்குப் பக்கத்தில் உள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி. 1440.

குறிப்பு : செவ்வல்லூர் ஊரவற்கு அவ்வூர் வலையர் செய்யும் காரியத்திற்காக வெட்டப்பட்ட கல்வெட்டு.

1. சகாத்தம் 1362-ன்மேல் செல்லா
2. நின்ற சுக்குல வருஷம் அற்பசி மாதம்
3. பொன்னமராபதி நாட்டு வடபற்று செவ்வ
4. ல்லூர் ஊராக வமந்த ஊரவரோம் எங்
5. கள்ளூர் வலையர் எங்களுக்கு செய்யும் காரி
6. யம் காவணமுமிட்டு கடமையுமிட்டு
7. போகக் கடவார்களாகவும் இப்படிக்கு
8. ஊரவர் சொல்படிக்கு

## 12:2

இடம் : மலையடிப்பட்டி ஊருக்கு தெற்கில் உள்ள நரிப்புலி ஆண்டவர் கோவில், பாறையின் கிழக்கு பக்கத்தில் உள்ள 2-வது கல்வெட்டு.

காலம் : 14-ஆம் நூற்றாண்டு.

குறிப்பு : செவ்வல்லூர் ஊரவற்கு அவ்வூர் வலையர் செய்யும் கடமைக்காக வெட்டப்பட்ட கல்வெட்டு.

1. செவ்வல்லூர் பணை
2. யான் சேதிபராயன் உ
3. ள்ளிட்டாற்கு இவ்வூர் வ
4. லையர் வீட்டால் குறுணி
5. தாநியமும் ஆடிக் காத்திகை
6. க்கு ஒரு முசலும் குடு
7. க்க கடவோமாகவும்

## 12:3

இடம் : செவலூர் சேகரம் மலையடிப்பட்டி மூங்கில்தாள் ஊரணி வடகரையில் கிடக்கும் உடைந்த கல்லில் உள்ள கல்வெட்டு.

காலம் : மதுரை சுல்தான், இஜ்ரி 758 (கி.பி.1357).

1. ஸ்ரீவஸ்திஸ்ரீ
2. ஆதிசுரத்தானு
3. க்கு 7 5 8 வது மு
4. பாதம் உதிஎ நியம
5. நாட்டு நாட்டவற்கும்
6. [சல்] நாட்டில் உள்ள [வா
7. சல்] நாட்டவர்க்கும் பொ
8. ன்னமராபதி நாட்டு
9. வடபற்றுச் செவ்வலூ
10. ற்பெருமாள் வீராண்
11. டானான வலங்
12. கை நாராயணதே
13. வனான வலைவா
14. ணதேவனும் ஆச்ர-
15. யம் உ

## 12:4

இடம் : மலையடிப்பட்டி திருமணங்கண்மாயின் மேற்கு தலவின் கரையில் உள்ள சிறிய பாறை மீதுள்ள கல்வெட்டு

காலம் : விஜயநகர அரசன் வீரதேவராயர், கி.பி.15-ஆம் நூற்றாண்டு.

1. ஸ்ரீமது மகா மண்
2. டலீசுரன் வீரதேவரா
3. யமகாராயர்கு செல்லா
4. நின்ற செவ்வல்லூரில் சுந்
5. தர சோழபுரத்து கண்ண
6. னூருடையாந் திருமேனி
7. யார் சிவந்தெழுந்தார்
8. உள்ளிட்டார் தந்ம இந்த ஊ-
9. றணி மூன்று இல[க்க]வும்.

---

# 13. பெருமாநல்லூர்க் கல்வெட்டு

*மா. கணேசன், அவிநாசி.*

இடம் : *கோவை மாவட்டம், பல்லடம் வட்டம், பெருமாநல்லூரில் உத்தமசோழீசுவரர் கோயில் மகா மண்டப வடக்குச் சுவரில் இக்கல்வெட்டு உள்ளது.*

காலம் : *வீரபாண்டியன். யா:23, கி.பி.13-ஆம் நூற்றாண்டு.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ வீரபாண்டிய தேவற்கு யாண்டு 22 வதிற்கெதிரா
2. வது சித்தியார்த்தி சம்வத்சரத்து சிங்கநாயிற்று பூர்வ பட்சத்து
3. பஞ்சமியும் திங்கட்கிழமையும் பெற்ற இரேபதி நாள் வட
4. பரிசாரநாட்டு ஒத்துனூரான பெரும்பழனத்து ஊரும் ஊராளி
5. களோம் ஆதம்பாக்கத்து வரதராஜ பட்டர்மகன் ஸ்ரீராம பட்
6. டற்கும் சூரசாரம்பி திருவெண்காடு பட்டர் மகன் நாராயண
7. பட்டரும் உப்பம்பிரால கோவிந்த பட்டர் மகன் சோலைப் பிரா
8. ன் பட்டற்கும் இவர்தம்பி மகாதேவபட்டற்கும் சூரசாரம்பி திரு நட்ட மா
9. டி பட்டர் மகன் கெங்காதர பட்டற்கும் சூரசாரம்பி வினாயகா பட்டர் மகன்
10. சோதிமாணிக்க பட்டர்க்கும் பெச்சங்கிமசிவதனவாசி பட்டர் மகன் நாராயண
11. பட்டர்க்கும் சிற்றிங்கூர் மலைப் பெருமாள் நாராயண பட்டற் காங்கய நாட்டு மு
12. த்தூரில் வியாபாரி மன்றுளாடுவான் சம்பந்தப் பெருமாளுக்கும் நாங்கள் திருமலையில் கல்வெ
13. ட்டிக் குடுத்த பரிசாவது எங்களூரில் கிழ்தாட்டில் பரை பள்ளத்துக்கு உடை
14. குளம் நெடுங்காலம் சாயாக் கரைப்பட்டுக் கிடந்த இந்த உடை பள்ளத் துக்கு
15. கரைக்கும் தூம்புக்கு வேண்டும் முதல் தாங்களே இட்டு அடைத்துக்
16. கொள்ளக் கடவார்களாகவும் இப்படிக் கொண்டு உடைப்புக்கும்
17. கரைக்கும் தூம்புக்கும் வேண்டும் முதல் தாங்கள் இடுகைபி
18. ல் இக்குளக் கீழ் தூம்புகளாலும் அணையாலும் நீர்பாயும் நிலம் எ
19. ங்கும் திருத்திப் பயிர் செய்யக் கடவார்களாகவும் பயிர் செய்து பெ
20. று மிடத்து திருத்தின திருத்தின ஆண்டு முதல் விளைச்சலோடே நாலா
21. ட்டை நாள் முற்றூட்டும் உண்ணக் கடவார்களாகவும் பின்பு மேல்பா
22. கத்துக்கு மூவாட்டை நாள் நாலில் ஒன்று கொள்வோமாகவும் பின்பு இராட்டை
23. நாள் மூன்றில் ஒன்று கொள்வோமாகவும் பின்பு ஒன்று கொள்வோமாக

24. வும் இவ்வரதராஜ பட்டர் மகன் ஸ்ரீராமபட்டர் குடங்கொண்டு இதில் இவர் தம்பி உடையா
25. ற்கு பங்கு கால் நீக்கி பங்கு ஒன்றேமுக்கால் இத் திருவெண்காடு பட்டர் மகன் நாராயண
26. பட்டர்க்குப் பங்கு ஒன்றரை இதில் திருக்கோடியாவுடையார் மகன் எச் சற்கு பங்கு அரை நீக்கி
27. பங்கு ஒன்று இக் கோவிந்த பட்டர் மகன் சோலைப் பிரான் பட்டர்க்கு பங்கு ஒன்று இவர் தம்பி ம
28. கா தேவ பட்டற்குப் பங்கு இரண்டு இதில் இவர் மச்சுனன் இணையாற்கு பங்குகால் மகா மா சேரி சிரா
29. மு தேவர் மகன் மண்டல புருஷர்க்குப் பங்கு காலும் பெரும் பெருமான் ஆடக் கொண்டாற்கு
30. பங்கு அரையும் ஆக பங்கு ஒன்று நீக்கி பங்கு ஒன்று இத்திருநட்டமாடி பட்டர் மகன் கெங்காத
31. ர பட்டற்குப் பங்கு இரண்டு இதில் இவர் மருமகன் உலகுடையாற்கு பங்கு அரை
32. யும் இவர் மச்சினன் திருமழபாடி உடையாற்கு பங்கு அரை ஆக பங்கு ஒன்று நீக்கி பங்கு ஒ
33. ன்று நீக்கிப் பங்கு ஒன்று இவ்வினாயகப்பட்டர் மகன் சோதி மாணிக்க ப
34. ட்டற்கு பங்கு ஒன்றேகால் இதில் இவர் தமையன் நாயகற்குப் பங்கு காலும்
35. இவர் மச்சுனன் தேவற்கும் இதேவர் மருமகன் இராமற்கு அரையும் ஆக பங்
36. கு முக்கால் நிக்கி பங்கு அரை இசிவதனவாசி பட்டர் மகன் நாராயண
37. பட்டற்கு முக்கால் இம்மலைப் பெருமாள் நாராயண பட்டற்கு பங்கு கால்
38. இவர் தம்பி திருச்சிற்றம்பல முடையாற்கு பங்கு கால் இச் சம்பந்தப் பெரு மாளுக்கு ப
39. ங்கு முக்கால் காங்கய நாட்டில் வெள்ளக்கலில் வியாபாரி பிள்ளன் சொக் கனுக்கு ப
40. ங்கு அரை ஆக பங்கு $12\frac{1}{4}$ க்கும் பங்குக்கு காணி நிலமாக பன்னிரண்டு காணி முந்திரிகை
41. நிலம் கமுகு தெங்கு மரங்கள் வைத்து முற்றூட்டாக அனுபவிக்கக் கட வார்களாகவும் விதை இ
42. ரட்டி காவற்கூலி அறைக்கூலி அடிகூலி பொதுவிலெ இடக் கடவதாகவும் வெற்றிலை பயிர்
43. செய்யுமதுக்கு கமுகு வைப்பு நில முட்பட பறிக்கப் புக்க நாள் முதல் ஆண்டொன்றுக்கு ஆயிரங்
44. காலுக்கு மூன்று பண விழுக்காடு கொள்வொமாகவும் இஞ்சி மஞ்சள் பயிர் செய்ததுக்கு
45. மேல் வாரத்துக்கு மூன்றில் ஒன்று ...
46. தெங்கு வைத்துப் போகங் கொள்ளும் ...
47. மூன்றில் ஒன்று கொள்வோமாகவும் இ

48. து தாங்களே கொள்ளக் கடவாக ...
49. டம் உள்ளமுதல் குளத்துக்கு ...
50. டைத் தலையுருவ திருத்தினால் கு ...
51. டு முதல் பொதுவிலே இடக ...
52. கு பன்னிரண்டே காலும் விடுபற் ...
53. ங்கள் கொண்டுங் கொடுத்துங் ...
54. ாகளாகவும் இப்படி கொண்[டுமக்] ...
55. கள் சந்திராதித்த வரையனுப்பித் ...
56. ாகவு இப்படி சம்மதித்து திருமலை ...
57. டுத்தொம் ஊரும் ஊராளிகளொம்.

*வடபரிசார நாட்டு ஒத்தனூரான பெரும்பழனத்து (பெருமாநல்லூர்) ஊருக்கும் ஊராளிகட்கும் பொதுவான உடைமையான ஒரு குளம் நெடுங்காலமாகப் பாழ்பட்டுக் கரை தூர்ந்து கிடந்தது. இக்குளத்தை எட்டு பிராமணர்கட்கும் ஒரு வணிகனுக்கும் ஊரும் ஊராளி களும் தானமாக வழங்கி இக்குளக்கரையை அவர்களே முதலிட்டு அடைத்துத் தூம்புகளும் கட்டி அணை உண்டாக்கி நீர்தேக்கி அந் நீர் பாயும் நிலமெல்லாம் திருத்திப் பயிர் செய்து கொள்ள ஆணையிட்டனர். மேலும் நான்கு ஆண்டுகள் வரை விளைச்சலை முழுவதுமாக அனுபவிக்கவும் அடுத்த மூன்று ஆண்டுகட்கு நாலில் ஒன்று ஊருக்கும் ஊராளிகளுக்கும் பங்கிட்டு மேல்வாரம் வழங்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டனர். அடுத்த இரண்டு ஆண்டுகளில் மூன்றில் ஒரு பங்கு விளைச்சலையும் அதன் பின்பு மேல்வாரம் முழுதும் பங்கிட்டுக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டுள்ளனர்.*

*அணையிலிருந்து நீர் பாய்ந்து கிடைக்கும் விளைச்சலை இப்பட்டர்கள் பன்னிரண்டேகால் பங்கிட்டு இவர்களுக்கும் இவர்களுடைய உறவினர் சிலருக்கும் வழங்க ஏற்பாடாயிற்று. இப்பங்குகள் பன்னிரண்டேகால்க்கும் நிலம் பன்னிரண்டு காணி முந்திரிகை நிலம் பிரிக்கப் பட்டது.*

*பங்குதாரர் அனைவரும் பயிரிடவும், காக்கவும் நெல் அடிக்கவும் ஆகும் செலவுகளை ஏற்றுக் கொள்ளும்படி முறை செய்யப்பட்டது.*

*கமுகு, தெங்குமரங்கள் வைத்து அதன் பயனை முற்றூட்டாக அனுபவிக்கவும், வெற்றிலை, கமுகு பயிர் செய்து பறிக்கும் நாள்முதலாக ஆண்டொன்றுக்கு ஆயிரம் காலுக்கு மூன்று பண விழுக்காடாக கொள்வதாகவும், இஞ்சி மஞ்சள் பயிர் செய்வதற்கு மேல் வாரத்தில் மூன்றில் ஒரு பங்கு கொள்வதாகவும், தெங்குவைத்துப் போகம் கொள்ளும் காலத்தில் மூன்றில் ஒரு போகம் கொள்வதாகவும் ஊரும் ஊராளிகளும் தக்க வகையில் முறைப்படுத்தியுள்ளனர்.*

---

# 14. மங்கலம் கல்வெட்டுகள்

ம. காந்தி, வேலூர்;
ப. வெங்கடேசன், பாணாவரம்.

## 14:1

இடம் : திருவண்ணாமலை மாவட்டம், திருவண்ணாமலை வட்டம், மங்கலம் என்னும் ஊரில் பெருமாள்கோயிலுக்கு பக்கத்தில் 135 செ.மீ. நீளமும், 64 செ.மீ. அகலமுள்ள கற்பலகையிலுள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி.16-ஆம் நூற்றாண்டு(?).

1. ஆயம் கிருஷணய தே
2. வ மஹாராயருக்கு
3. ம் கொண்டமா அ
4. ய்யனுக்கும் வட ம
5. லை அண்ணகளுக்கு
6. ம் புண்யமாக வீரப்பையரு
7. ம் தளவாய் அண்ணாம-
8. லைநாத முதலியாரும்
9. சந்திராதித்திய வரை ...
10. ... மா ... ண்ணனாள் இ
11. ந்த தர்மத்துக்கு யாதொருத்தர் அ
12. கிதம் பண்ணிநால் கெங்
13. கை கரையிலே காராம் பசு
14. வை கொன்ற பாபத்திலெ போக
15. கக் கடவராக வு
16. ம் சு$_4$ப$_4$ மஸ்த்து.

## 14:2

இடம் : திருவண்ணாமலை மாவட்டம், திருவண்ணாமலை வட்டம், மங்கலம் என்னும் ஊரிலுள்ள பெருமாள்கோயில் கற்பலகை கல்வெட்டு.

காலம் : 16-ஆம் நூற்றாண்டு(?).

செய்தி : பாக்கப்பற்றில் செக்குவாணிய குடிகள் செக்கு வைத்துக் கொள்ள, மங்கலம் காத்துபெருமாள் சத்திய நாராயணப் பெருமாளுக்கு திருவாலி பணம் அளித்தனர்.

1. *சுபமஸ்து விஷுவ வருஷம்*
2. மார்கழி உ 12 க்கு மங்
3. கலம் காத்து பெரும
4. ாள் சத்திய நாராயணப்
5. பெருமாளுக்கு திருவா
6. லி பணம் தர செக்கு
7. இடுகையில் இந்த
8. செக்கும் செக்கு வாணிய
9. குடிக்கும் பாக்கப் பற்று

## 14:3

இடம் : *திருவண்ணாமலை மாவட்டம், திருவண்ணாமலை வட்டம், மங்கலம் என்னும் ஊரில், பெருமாள் கோயில் முன்பாக உள்ள கற்பலகைக் கல்வெட்டு.*

காலம் : *அச்சுத தேவமகாராயர், கி.பி.1533.*

**முன் பக்கம்**

1. ஸ்வஸ்தி ஸ்ரீமந் மகாராசா
2. திராச ராச பரமேஸ்வரர் ஸ்ரீ
3. வீரபிரதாப ஸ்ரீவீர அச்சு
4. தராய மகாராய பிருதிவிராச்சி
5. யம் பண்ணி அருளா நின்ற சகாப்த
6. ம் 1455ன் மேல் செல்-
7. லாநின்ற விஜய சம்வத்ஸரத்-
8. து துலா நாயற்று பூர்வ பக்ஷத்
9. து ... யும் சோமவாரமும்
10. பெற்ற அனுராத நக்ஷத்ரத்து
11. நாள் பாக்கப் பற்று ஸ்ரீ
12. சோமநாத சதுர்வேதி மங்
13. கலமான அகரத்துப் பாக்
14. கப்பற்று ஆயமுள்ளது ரா
15. யர் பாதத்திலே ...
16. ... விண்ணப்பஞ் செய்து
17. சர்வ மான்யமாக விடுவிச்சி
18. கொள்ளுகையில் ராயர் அ
19. ப்பிணை படிக்கு திருமலை

**பின் பக்கம்**

20. ராச பாக்கத்துச் சீர்மை
21. க்குக் கத்தராயருக்கு பொ
22. சயராசர்க்கு நிருபம் [வ்ருதி
23. யில்] போயராசர் பாக்க சதி-

24. ல ஆயம் பூறுவமாலயம்
25. மாக கல்லுவெட்டி நாமமா
26. க குடுத்தமைக்கு ஆயம் சம்
27. மாதமும் சர்வமாந்ய
28. ம்மாக நடக்க கடைவதாக
29. வும் யிந்த தர்மத்துக்கு
30. அகிதம் பண்ணின பே-
31. ர் உண்டானால் கெங்
32. கைக் கரையிலே காராம்
33. பசுவைக் கொன்ற தோஷ
34. த்திலே போககடவராகவும்
35. யிது ஆசந்திரார் ...
36. வர்கள் சொல்ல ஊர்க
37. ணக்கு திருக்கடம் எழுத்து

# 15. மருங்காபுரி பாளையக்காரர்கள் கல்வெட்டுகள் - ஒரு பார்வை

**கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்**

*திருச்சி மாவட்டம் மணப்பாறைக்கு அண்மையிலுள்ள ஒரு சிற்றூர் மருங்காபுரி. மருங்காபுரியை தலைநகராகக் கொண்டு ஆண்டவர்கள் மருங்காபுரி பாளையக்காரர்கள் ஆவார்கள். இவர்கள் நாயக்க வம்சத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் தங்கள் இயற்பெயரோடு பூச்சையா நாயக்கர் என்ற பட்டத்தை சூட்டிக் கொண்டவராவர் என்பதை இவர்களது கல்வெட்டுகள் மூலம் அறிகிறோம்.*

*புதுக்கோட்டை மாவட்டம் பேரையூர் நாகநாதசுவாமி கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் ஒன்று (புதுக. எண்.629) திரிபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீ விக்கரம பாண்டியனின் 5வது ஆட்சியாண்டைச் சேர்ந்தது. மேற்படி கல்வெட்டில்*

15:1

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனச்சக்கர வத்திகள் ஸ்ரீவி-
2. க்கிரம பாண்டிய தேவற்கு யாண்டு 5வது ம
3. லை மண்டலத்து குதிரைச் செட்டிகளில் ...
4. த்த ... நாயக்கர் மனிச்சரில் பூச்சை நா[யக்க]
5. ன் திருவிடைமருதுடையானே ... [இந்நா].
6. ட்டு தேவதான பிரமதேயம்

*என்ற வாசகம் காணப்படுகின்றது. இக்கல்வெட்டு மூலம் விக்கிரம பாண்டியன் காலத்திலேயே பூச்சைய நாயக்கர் செல்வாக்கு பெற்றிருந்ததை அறிய முடிகின்றது.*

*புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டம் அம்மன்குறிச்சி கிராமத்தில் நடப்பட்டுள்ள கல்வெட்டு சகாப்தம் 1542ல் மருங்காபுரி பாளையக்காரரான வீரப்ப பூச்சைய நாயக்கர் காலத்தியது. மேற்படி பாளையக்காரர் அம்மன்குறிச்சியில் குளம் வெட்டியும் மண்டபம் கட்டியும் மேற்படி மண்டபத்திலே பிள்ளையாரை பிறதிட்டை செய்து திருவிளக்கு நெய்வேத்தியத்துக்கு வகை செய்தமைக்கு ஏற்பட்டது (புதுக. எண்.760). அதில் விஜயநகர மன்னர்களின் மெய்க்கீர்த்தி போல மகா மண்டலேசுரன், ராஜாதிராசன் ராச பரமேசுவரன் போன்ற மெய்க்கீர்த்தி சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அதே அம்மன்குறிச்சியில் சகாப்தம் 1613ஆம் ஆண்டு மருங்காபுரியைச் சேர்ந்த மற்றொரு வீரப்பூச்செய நாயக்கர் கல்வெட்டு (புதுக. எண்.875) ஒன்று விஜய நகர மன்னர்களின்*

சில மெய்க்கீர்த்தியோடு "ராசசிரோன்மணி மருங்கையம்பதியான் மரு வலர் கேசரி வேளமலையினான் பாலாறுடையான் ராசவேசியர் புஜங் கன், ஒரு சொல் வாசகனான ஸ்ரீ திருமலை பூச்செய நாயக்கர் சகோதரர் ஓவளப் பூச்செய நாயக்கர் குமாரர் வீரப் பூச்செய நாயக்கர் நமன் குறிச்சி சொக்கர் திருவிளையாட்டாமான நமன் குறிச்சிக்கு" என்ற தொடரோடு "முத்தழகிரி நாயக்கர் விசாரிப்பிலும் குழந்தைவேல்பிள்ளை மணியத் தில் அவர் சொற்படிக்கு சிலாலிகிதமாகக் கட்டளையிட்டோம்" எனக் கண்டுள்ளது. மேற்படி கல்வெட்டின் மூலம் மருங்காபுரி பூச்சைய நாயக்கர்கள் மருங்காபுரிக்கு அதிபர்கள் என்பதும் வேளமலை, பாலா றுக்கு உரியவர்கள் எனவும் தெரிகிறது. வேளமலை என்பது மணப்பா றைக்கு அருகிலுள்ள மலை. இம்மலையிலிருந்தே வெள்ளாறு உற்பத்தியாகிறது.

புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் கிளிக்குடி கிராமத் தின் தென்மேற்கில் உள்ள இடத்திலுள்ள ஒரு தூண் கல்வெட்டு (புதுக. எண்.883) கி.பி. 1804ல் ராசா விஜய ரகுநாதராசா பாதற் தொண்டை மான் அவர்களுக்கும் மருங்காபுரி பூச்சைய நாயக்கருக்கும் எல்லை விவகாரம் நடந்ததையும் அதை கும்பினியார் தீர்த்து எல்லைக்கல் நாட் டியதையும் தெரிவிக்கின்றது. திருச்சி மாவட்டம் வேம்பனூர் கண்மாய் கலிங்கில் வைத்து கட்டபட்டுள்ள, கட்டுரை ஆசிரியரால் கண்டறி யப்பட்ட கல்வெட்டு ஒன்று,

## 15:2

1. சாலிவாகன சகாப்தம் 1797 யிங்
2. கிலீஷ் வருஷம் 1875 தமிள் யுவ ஞு சி
3. த்திரை மீ 14 உ மருங்காபுரி சீமைக்கி ஆதின
4. க்கற்தறாகிய மகாராஜா மணியராஜ ராஜ ஸ்ரீ முத்து
5. வீர பூச்செய நாயக்கறவர்கள் குமாரர் ரெங்க
6. கிஷ்ண முத்து வீர பூச்செய நாயக்கறவற்கள் து
7. ரைதனத்தில் திருகேசாற முதலியாற் காரு
8. பாரிலும் ஊரணி சம்பிரதி சுப்பராம அய்
9. யராலும் மாம்பூண்டி மணியத்தி(லும்) வேலை நடத்தி
10. யது

என்ற செய்தியை தருகின்றது. இக்கல்வெட்டில் மூலம் மருங்காபுரி பாளையக்காரர் வீரப்பூச்செய நாயக்கர் குமாரர் ரெங்ககிஷ்ண முத்துவீர பூச்செய நாயக்கர் அவர்களைப் பற்றியும் அவரது பாளையத்தில் இருந்த காரூபார், சம்பிரிதி, மணியம் முதலிய அலுவலர்களையும் தெரிந்து கொள்வதோடு இப்பாளையக்காரர் தன்னை ராசா என அழைத்துக் கொண்டதையும் அறியலாம்.

---

# 16. சேதுபதி ராணி கல்வெட்டுகள்

எஸ்.எம். கமால், இராமநாதபுரம்.

வரலாற்று நாயகர்களான சேதுபதிகள், மறவர் சீமையின் மகுடபதி களாக விளங்கியவர்கள். இந்த மன்னர்களது மாண்பான தமிழ்ப் பணி யையும், தெய்வீகத் தொண்டுகளையும் தெரிவிக்கும் அரிய ஏடுகளாக பதினைந்தாம் நூற்றாண்டு முதல் கி.பி.1903 வரையான இவர்களது கல் வெட்டுகளும் செப்பேடுகளும் அமைந்து விளங்குகின்றன. சென்ற நூற் றாண்டில் ஆங்கில கும்பினியாரது ஆதிக்கத்தினால் இவர்களது ஆட்சி நிலை குலைந்து போனாலும், கிளைகள் தறிக்கப்பட்ட பூங்கா மரம் போல இந்த மறக்குடி வழியினரது சமயப்பணிகளும் தொண்டுகளும் தடைபடாமல் தொடர்ந்துள்ளன என்பதை கி.பி.1830-1847 வரை இராம நாதபுரம் சீமை அதிபதியாக விளங்கிய சேதுபதி முத்துவீராயி நாச்சியா ரது கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

மறவர் சீமையின் மூத்த குடிவழி வந்த முத்துராமலிங்க விஜய ரெகுநாத சேதுபதியை கிழக்கு இந்தியக் கும்பினியார் சூழ்ச்சியினால் கி.பி.1795ல் கைது செய்து சிறையிலிட்டு சேது நாட்டு தன்னரசு நிலைக்கு முற்றுப் புள்ளி வைத்தனர். சேதுபதி சீமை நிர்வாகத்தையும் நேரடியாக எட்டு ஆண்டுகள் மேற்கொண்ட பிறகு, பதவி நீக்கம் செய் யப்பட்ட முத்துராமலிங்க சேதுபதியின் தமக்கை ராணி மங்களேஸ்வரி நாச்சியாரிடம் கி.பி.1803 முதல் 12 வரை நிர்வாகத்தை ஒப்படைத்தனர். இவரது வழியினரான முத்து விசய ரகுநாத ராமசாமி சேதுபதி, கி.பி.1850ல் இறந்த பிறகு ராணி முத்து வீராயி நாச்சியார் ராமநாதபுரம் சமஸ்த்தானாதிபதி ஆனார்.

பேராண்மையும் பெருமதி நுட்பமும் மிக்க இந்த மாதரசி உள் நாட்டு பூசலைச் சந்தித்து சமாளித்ததுடன் தமது முந்தையோர் வழியில் பல அறப்பணிகளையும் சிறப்பாகச் செய்துள்ளார். இராமநாதபுரம் நகரில் கி.பி.1833ல், இவர் அமைத்த அன்னச் சத்திரம் அண்மைக்காலம் வரை நிலைத்து இருந்து வந்தது. இந்தச் சத்திரத்தின் சாதனைப் பற்றி சேதுபதி விறலி விடுதூது என்ற இலக்கியத்தில் மிகவும் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் இராமநாதபுரம் முகவை ஊரணி கிழக் குக் கரையில் நிர்மாணித்த திரௌபதி அம்மன் திருக்கோயில் இன்றும் மக்களது வழிபாட்டுத் தலமாக விளங்கிக் கொண்டு இருக்கிறது. இந் தக் திருக்கோயிலிலும் இவரது சொந்த ஊரான இதம்பாடலில் ராணி யார் அமைத்த சத்திரம், திருக்கோயிலில் உள்ள 'கல்வெட்டுக்களில்

இருந்து அண்மையில் பிரதி செய்யப்பட்டவைகள் இங்கு கொடுக்கப் பட்டுள்ளன.

இதம்பாடல் இராமேசுவரம் கன்னியாகுமரி நெடுஞ்சாலையில் உள்ள சிற்றூர். இராமேசுவரம் பயணிகளின் பயன்பாட்டுக்கு அன்னச் சத்திரமும், உள்ளூர் மக்களது வழிபாட்டிற்கு ஆண்டவள் அம்மன் திருக்கோயிலையும், ராணியார் அமைத்திருக்கிறார். அன்னசத்திரம் இன்று அழிந்த நிலையில் உள்ளது. ராணியார் அவரது கணவர் விஜய ரெகுநாத சேதுபதியுடனான சிறிய கற்சிலை அங்கிருந்து அகற்றப்பட்டு இராமநாதபுரம் இராமலிங்க விலாச அரண்மனையில் காட்சிக்காக வைக்கப்பட்டுள்ளது. (படம் 16.1).

கல்வெட்டுகளில் காணப்படும் முத்துச்செல்ல மகாராஜா என்பவர் ராணியாரது உடன்பிறந்த சகோதரர். அவரது பேரக்குழந்தைகளுக்கு காப்பாளராக இருந்து வந்தவர்.



படம் 16.1: இதம்பாடலிலிருந்து இராமலிங்க விலாசம் அரண்மனைக்கு கொண்டுவரப்பட்ட முத்து வீராயி நாச்சியார் மற்றும் அவரது கணவர் சிலைகள்.

## 16:1

*இடம் : இராமநாதபுரம் மாவட்டம், இதம்பாடல் கிராமம், ஆண் டவன் அம்மன் கோயில்.*

*காலம் : (கி.பி.1835) மே-சூன்.*

1. உ ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1754 கலியுகாதி ௵ *49*
2. 33 ற் மேல்ச செல்லாநின்ற யேவிளம்பி ௵ *பங்குனி மீ மஹ*
3. ாராஜ பூஜித மஹாராஜ ராஜஸ்ரீ யிரணிய கெற்பயாஜி ரவிகுல முத்
4. து விஜயரகுநாத சேதுபதி ராசா அவர்கள் பட்ட மகிசி
5. யும் மஹாராஜ ராஜஸ்ரீ விஜய ரகுநாத ராமசுவாமி சேது
6. பதி ராசா அவர்கள் தாயாருமாகிய மஹாராஜ ராஜஸ்ரீ
7. ராணி முத்துவீராகி நாச்சியாரவர்களும், சேஷ்ட பிதாவாகி
8. ய மஹாராஜ ராஜஸ்ரீ முத்துச் செல்லத் தேவராசா அவர்களு
9. ம் யிந்த ஆண்டவளம்மன் கோயில்த் திருப்பணித் தற்மம் கட்டி வைத்தா
10. ர்களென்றறிவது உ

*இரண்டாவது வரியில் குறிப்பிடப்பட்டுள்ள ஏவிளம்பி ஆண்டு, ஏனைய சகாப்தம் முதலியவற்றிற்கு பொருந்தி வரவில்லை. ஆதலால் இந்தக் கல்வெட்டில் சரியான ஆண்டு "நந்தன" என இருத்தல் வேண்டும்.*

## 16:2

*இடம் : இராமநாதபுரம் வட்டம், இராமநாதபுரம் நகர், திரௌப தியம்மன் கோயில் அர்த்த மண்டபம் கிழக்குச் சுவர்.*

*காலம் : 18.1.1837*

1. ஸ்வஸ்திஸ்ரீ விசையாப்புதைய சாலிவாகன சகாப்தம் 1758 கலியப்தம்
2. 4937 க்கு மேல்ச் செல்லா நின்ற துன்முகி தை மீ
3. 7 உ சுக்கில பட்சத்து புதன்கிழமையும் மிருகசீறிச நட்சத்திரமும்
4. துவாதெசியும் பாலவாகறணமும் கெந்திர நாமயோக
5. மும் கூடிய சுபயோக சுபதினத்தில் மகாராசா ஸ்ரீமுத்து
6. விசய ரெகுனாத ராமஸாமி சேதுபதிக்கு ராணி சேதுபதி
7. மங்களேசுவரி நாச்சியார் அவர்களுக்கு குமாரராகி
8. ய முத்து விசய ரெகுநாத சேதுபதி மகாராசா அவர்களுக்கு
9. குமாராகிய ராமசுவாமி சேதுபதி மகாராசா
10. அவர்களுக்கு மாதாவாகிய ராணி சேதுபதி மு
11. த்து வீராயி நாச்சியார் அவர்களுக்கு சேஷ்ட புத்ரநாகி
12. ய மகாராசரா ஸ்ரீஹிரண்ய கெர்ப்பயாசி ரவி குல முத்து விச
13. ய ரெகுநாத முத்துச் செல்ல சேதுபதி மகாராசா அவர்
14. கள் முகவையூரணி ஈசானிய பாகத்தில் கிருஷ்ண சகாயம் பெ
15. ... திருப்பணி செய்த சதா சேருவை.

## 16:3

இடம் : இராமநாதபுரம் வட்டம், இதம்பாடல், கிராம சத்திரம்
காலம் : *9-2-1837*

1. ஸ்ரீ ராமஜயம்
2. கலியுகாதி வருஷம் 4937 மேல்ச்செல்லாநின்ற துற்முகி ஷு
3. தை மாதம் 29 உயில் எதம்பாடல் ராஜராஜ ஸ்ரீ முனியாண்டித் தே
4. வரவர்களுடைய பத்தினி சிவனாயி ஆத்தா அவர்கள் பேருக்கா
5. க அவர்கள் குமாறர் குமாரத்தி மஹாராஜ ராஜஸ்ரீ விஜய ரெகுநாத
6. முத்துச் செல்லத்தேவராஜா அவர்களும் ராணி முத்துவீராயி
7. நாச்சியாரவர்களும் யிந்த தற்ம சத்திரத்தை கட்டி வைத்தார்க
8. ளென்றறிவது.

---

# 17. கூனம்பட்டி ஆவணங்கள்

செ. இராசு, தஞ்சாவூர்.

கொங்கு நாட்டில் மாணிக்கவாசகர் பெயரால் அமைந்துள்ள திருமடம் கூனம்பட்டி ஆதினம். பெருந்துறை கோயமுத்தூர் நெடுஞ்சாலையில் பல்லகவுண்டம்பாளையத்தின் நேர் வடக்கே 1 கி.மீ. தொலைவில் கூனம்பட்டி மாணிக்கவாசகர் திருமடம் உள்ளது.

திருவாசகம் தந்த மாணிக்கவாசகரின் சீடர் வாட்போக்கி மாணிக்கப் பண்டிதரால் தோற்றுவிக்கப்பட்ட இத் திருமடத்தில் இன்று 56 ஆவது பட்டத்தில் எழுந்தருளியிருப்பவர்கள் தவத்திரு ச. இராமலிங்க மாணிக்கவாசகசுவாமிகள் ஆவார்கள்.

திருமடம் பற்றிய பல கல்வெட்டுக்கள் உள்ளன. அரசர்கட்கு அளிக்கப்பெறும் சிறப்பைவிட "கூனம்பட்டி மாணிக்கவாசக சுவாமிகள் நாளில் இந்தக் கொடை அளிக்கப்பட்டது" என்று இவ் வட்டாரக் கல்வெட்டில் பொறிப்பது வழக்கம்.

திருமடத்தில் இரண்டு செப்பேடுகளும், பல ஓலை ஆவணங்களும் உள்ளன. ஏராளமான ஓலைச் சுவடிகளும் உள்ளன. தமிழிலும், கிரந்தத்திலும் எழுதப்பட்டுள்ளன. இரண்டு செப்பேடுகளும், ஒரு ஓலை ஆவணமும் இங்கு அளிக்கப்படுகின்றன.

## 17:1 *கோயமுத்தூர் கிருஷ்ணராயபேட்டை வணிகக்குழு செப்பேடு*

இச்செப்பேடு 35.5 சென்டிமீட்டர் நீளமும் 24 சென்டிமீட்டர் அகலமும் உடையது. 1.5 கிலோ எடையுடையது. இரு பக்கங்களிலும் 72 வரிகளாக எழுதப்பட்டுள்ளது.

மைசூர் மன்னர் கிருஷ்ணராச உடையார் ஆட்சிக் காலத்தில் 5.8.1747 அன்று தளவாய் தேவராசய்யன் நாளில் கோயமுத்தூர்ச் சீமை சகலாதிகாரம் செய்தவர் புட்டராசையன். சீனிவாசய்யன் சுபேதாராக இருந்தார். கோயமுத்தூர் கிருஷ்ணராசப் பேட்டையில் ஐம்பத்தாறு தேசத்து எட்டுவகைப் பலரும் பட்டக்காரரும் கூடி இக் கொடையை மகமையாக அளித்த விபரத்தை இச் செப்பேடு கூறுகிறது. பாலைக் காட்டுச்சேரிப்பேட்டை, கொடுவாய், கொல்லங்கோடு துப்பநாடு, வண்ணார்க்காடு, மேனாடு ஆகிய இடங்களில் வணிகம் செய்வோர் ஏற்றுமதி-இறக்குமதிப் பொருள்கட்குப் பொதிக்கு வீரராயன் காசு அரைக்காப்பணமும், மூலைப்பொதிக்கு மாகாணியும், தலைச்சிமிடு முடிச்சுக்கு வீரராயன் மாகாணியும் அளிக்க ஒப்புக் கொண்டதை இச் செப்பேடு கூறுகிறது.

**முதல் பக்கம்**

1. சொஷ்த்திஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரியதள
2. விபாடன் ஆரிய மோகந் தவிள்த்தான் ஒட்டியர் தளவிபாடன்
3. ஒட்டியர் மோகந் தவிள்த்தான் ஆறிலொன்று கடமை கொ
4. ண்டு அருள் பெருக அன்பு கூர்ந்து ஆதுலர் சாலையு
5. ம் அந்தணர் வேள்வியும் வேதவொலியும் விளைவ
6. றா வீதியும் தபோதன மடங்களும் தன்மசாலையும்
7. இச்சையில் முப்பத்திரண்டறம் விளங்கி யெம்மண்
8. டலமுந் திறைகொண்டருளிய ராசாதிராசன் ராசப
9. ரமேசுரன் ராசமாற்தாண்டன் ராசகுல திலகன் ராசம
10. னோபயங்கரன் கடற் கலங்கினும் காவேரி வற்றினும்
11. மலை குலுங்கிலும் மனங்கலங்காத கண்டன் சேரம
12. ண்டலப் பிறதிஷ்டாசாரியன் சோளமண்டலத் தாப
13. நாசாரியன் பாண்டிமண்டல தெட்சணாச்சாரியன்
14. தொண்டமண்டல சண்டப்பிரசண்டன் பாசைக்குத்
15. தப்புவராதகண்டன் மூவராய கண்டன் கண்டனாடு கொ
16. ண்டு கொண்டனாடு குடாதான் பொறுமைக்குத் தற்மன் ப
17. ரிக்கு நகுலன் வில்லுக்கு விசையன் மல்லுக்கு வீமன்
18. அழகுக்கனங்கன் அறிவுக்குச் சகாதேவன் சொல்லுக்
19. கரிச்சந்திரன் கல்விக்ககஷ்த்தியன் அசுபதி கெசபதி நரப
20. தி தனபதியாகிய மல்லிகாற்சுனராயர் கோவிந்தராயர்
21. நாமராயர் கிறிஷ்மணராயர் பிறவுடதேவ ராயர் மைசூர்
22. சிங்காசனத்துக்கதிபதிய கிறிஷ்டணராசுடையரையனவர்
23. கள் பிரதிவி ராச்சிய பரிபாலனச் செய்யாநின்ற கலியுக சகா
24. த்தம் 4848 க்கு மேற் சொல்லாநின்ற பிறபவ வருடம் ஆவணி
25. *மீ 4* உ புதவாரமுந் துவாதசியு மூல நட்செத்திரமும் பிறிதிநா
26. மயோகமும் வரிசை வாகரணமும் பெற்ற சுபதினத்தில் மக
27. ரசஸ்ரீ தளவாய் தேவராசைய்யனவர்கள்பால் கோயமு
28. த்தூற்ச் சீர்மை சகலாதிகாரம் புட்டராசய்யநவர்கள் கா
29. ரியத்துக்குக் கற்தரான சீனிவாசைய்யனவர்கள் சுபை
30. தினத்தில் சிவதை மாணிக்கவாள்மலையாருக்கு படித்த
31. ரந் தீபாராதினை குருபூசை மயேசுரபூசை நடக்கும்படிக்
32. குக் கோயில்முத்தூர் கிறிஷ்ணராயபேட்டையிற் கூடியநா
33. ன்கு திசை அன்பத்தாறு தேசத்து எட்டுவகைப் பலரும் ப
34. ட்டக்காறரு மெழுதிக் குடுத்த தருமசாதன விபரம் பாலைக்கா
35. ட்டுச்சேரிப்பேட்டை கொடுவாய் கொல்லங்கோடு
36. துப்பனாடு வண்ணார்க்காடு மேனாடு ஏறுசாத்து இறங்குசா
37. த்து சவளினூல் புகயிலை பாக்கு மஞ்சல் அரக்குச் சந்தனம்

**இரண்டாம் பக்கம்**

*சிவமயம்*

38. வெல்லம் வெற்றிலை முதலான பலசரக்கு உப்புமுதற் கப்பூ
39. ர வரைக்கும் பொதியொன்றுக்கு வீரராயன் அரைக்காற்ப

40. ணம் மூலைப்பொதிக்கு மாகாணி தலைச்சிமிடு முடிச்சுக்கு
41. வீரராயன் மாகாணி இந்த மேரைக்கு உண்டான மகமை
42. யெடுத்துக் கொண்டு மாணிக்கவாள்மலையர் மடத்து
43. க்கு படித்தரம் தீபராதினை குருபூசை மயேசுர பூசை நட
44. த்திக்கொண்டு வருவதாக நான்கு திசை அன்பத்தாறு தே
45. சத்து எட்டுவகைப் பலரும் கோயமுத்தூரு கிஷ்ணராயப்
46. பேட்டையிற் கூடி னாங்களெழுதி குடுத்தோம் தருமசாத
47. ணப் பட்டையம் இந்த தற்மத்தை விகாதஞ் செய்யாமல் ந
48. டத்தி வந்தவர்கள் அஷ்ட அயிசுரிய சம்பன்னராய் சகல
49. பாக்கியமு மென்மேலும் அபிவிற்தியாய் புத்திரமித்திர
50. களத்திராதிகள் கூட்டத்துடநே சுகத்திலே யிருப்பாராகவும்
51. யிந்த தருமத்துக்கு யாதாமொருத்தர் விகாதஞ் செய்தபேர் ம
52. னவாக்கு காயங்களாலே விகாதஞ்செய்ய வேணுமெ
53. ன்று யோசித்த பேர் கெங்கைக்கரைஇலே கோவத்தி
54. விறுமத்தி அசுவத்தி சிசுவத்தி ஸ்ரீயத்தி செய்த பாவங்களி
55. ல் போவாராகவும் என்று மாணிக்கவாள்மலையாருக்கு
56. நான்கு திசை அன்பத்தாறு தேசத்து எட்டுவகைப்பலரும்
57. பட்டக்காரரும் கோயமுத்தூரு கிருஷ்ணராயப்பேட்டை
58. யிற் கூடி எழுதிக் குடுத்த தர்ம சாதனம்
59. இந்த சாதனம் எளிதினவன் கோயமுத்தூர் ஆனந்தாசாரி
60. கைஎளுத்து விவரம் உ அன்னூறு குடிப்பாட்டம் வெள்ளா
61. ஞ் செட்டியள் நடைகண்ட பட்டம் சின்னமுத்தி செட்டி
62. யார், வைராவணபட்டம் ஆறுமுகம் செட்டியார், பச்சை
63. னாயகியம்மன் சத்திரம் அண்ணாமலை செட்டியார், வெள்ளா
64. தி சிவக்கொளுந்து செட்டியார், சிலம்பா செட்டியார், புது
65. க்காளி செட்டியார், திருவி செட்டியார், முத்துக்குமார செட்டியா
66. ர், பனைப்பாளையம் குமாரவேல் செட்டியார், வடமலை செட்டியா
67. ர், யெம்மாம்பூண்டி சின்னா செட்டியார், பெரியதம்பி செ
68. ட்டியார், ஆவுடையா செட்டியார், அவினாசிலிங்க செட்டியார், வட
69. வெள்ளி சின்னா செட்டி, சேனாத்திரி செட்டி, கரிய செட்டி, தொ
70. ட்டி செட்டியார், சின்னா செட்டி, சந்தி செட்டியார், சின்னா செட்டி,
71. அக்கம் சினகு செட்டி, முனியம் செட்டி, சின்னக்குப்பி செட்டி, பொ
72. ம்மி செட்டியார் உ உ உ.

## 17:2 ***விசயமங்கலம் ஐந்துபங்கு கவுண்டர்கள் செப்பேடு*** (படம் 17.1)

*600 கிராம் எடையும் 23.5 செ.மீ நீளமும் 15.5 செ.மீ அகலமும் உடையது இச்செப்பேடு. செப்பேட்டின் இருபுறமும் 95 வரிகளில் எழுதப்பட்டுள்ளது. மைசூர் மன்னர் கிருஷ்ணராச உடையார் காலத்தில் 23.9.1763 அன்று விசயமங்கலம் அஞ்சு பங்கு கவுண்டர்கள் ஊத்துக்குழி கதித்தமலை தேர்ப்பணி முடிவுற்றுத் தேரோட்டம் நடந்ததன் நினை*

*வாக கூனம்பட்டித் திருமடத்திற்கு அளித்த நிலக்கொடையை இச்செப்பேடு கூறுகிறது. 1. நடுப்பட்டி பொருள்தந்த குலம், 2. ஊத்துக்குழி, கவுண்டம்பாளையம் மேட்டுப்புதூர் பொருள்தந்த குலம், 3. பாலக்கரை, சுள்ளிப்பாளையம், சீனாபுரம் பொருள்தந்த குலம் 4. கம்புளியம் பட்டிச் சாத்தந்தை குலம், 5. சாவடிப்பாளையம், கோடிகவுண்டம் பாளையம், சின்னமல்லாம் பாளையம், மணியன் குலம் ஆகியோர் அஞ்சு பங்காளிகள் எனப்படுவர்.*

**முதல் பக்கம்**

*திருச்சிற்றம்பலம் சிவமயம்*

1. சுபமஷ்த்து வைய்ய நீடுக மாமளை மன்னுக மெய்விரு
2. ம்பிய அன்பர் விளங்குக சைவ நன்னெரி தான்தளை
3. த்தோங்குக தெய்வ விண்டிரு நீரு சிறக்கவே சொஷ
4. த்தி ஸ்ரீறி மகாமண்டலேசுரன் அரிவிய தளவிபா
5. டன் பாஷைக்கூத்தன் தப்புவராய கண்டன் மூவரா
6. ய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொ
7. டாதவன் என்ம்மண்டலந் திரைகொண்டருளிய ரா
8. ஜாதிராஜன் ராஜபரமேசுவரன் ராஜமாற்த்தாண்
9. டன் ராஜஉத்தண்ட தெண்டன் ராஜகெம்பீரன் தண்
10. ட மண்டவிகர் கண்ட வீரன் வசந்தராயன் ராஜசந்த
11. ரன் ராஜதுரந்தரிகன் ராஜசுகந்தரன் ராஜஉலாச்சகன்
12. நரலோக கண்டன் நகலோக சக்கிரவிர்த்தி
13. நரலோக சூரியன் துலுக்கர்தல விபாடன் துலு
14. க்கர் மோகர்ந் தவிள்த்தான் ஒட்டியர் தலவிபா
15. டன் ஒட்டியர் மோகர்ந் தவிழ்த்தான் மொகர் கொ
16. ண்டு முத்துக்கிடுவராய கண்டன் மதியாத மன்ன
17. ரைம் மகுடந் துணித்து நகரிபதீசுரரைக் கொல்
18. லும் பரசுராமன் அஷ்ட்டத்துக்குந் மனோபயங்கரன்
19. பதினெட்டு கோட்டத்து மன்னியர் கண்டன் சப்பிதச
20. முத்திரம் புடைசூள்ந்த தனபாலரின் அங்கம் வங்கம்
21. கவுசலம் கங்கய கௌடலம் கொங்கம் குடகம்
22. துளுகாட்டியம் கொல்லம் கல்லியாண கோகற்
23. ணம் ஈளம் மாளவம் கேகயம் பப்பரம் அரியம்
24. ஒட்டியம் கற்னாடகம் மாறாஷ்டகம் சிந்து சோழ
25. மண்டலந் சேரமண்டலம் பாண்டிமண்டலம் தொ
26. ண்டமண்டலம் கொங்குமண்டலம் ஆதியாய்ச்
27. சொல்லப்படாநின்ற அன்பத்தாறு தேசத்துக்கும்
28. அதிபதியான வாரயாற்பன்ன தோரதிபரும் வண
29. ங்கும் மகாராயன்பர் சர்ப கெருடன் பரராசற்ப ப
30. யங்கரன் கெஜதளவிபாடன் கெஜபேட்டை கண்ட
31. ருளிய ஆணக்குந்திராயன் அரசாளு மன்னவன் அறி

அ  ஆ

படம் 17.1. விசையமங்கலம் ஐந்துபங்கு கவுண்டர்கள் செப்பேடு (அ) முன்புறம் (ஆ) பின்புறம்

32. வுக்கு அகஷ்த்தியன் பொறுமைக்குத் தற்மர் வில்லுக்கு வி
33. சையன் போருக்கு வீமன் பரிக்கு நகுலன்-சொல்லுக்
34. கு அரிச்சந்திரன் இப்படி ஆறிலொன்று கடமை கொண்
35. டு அன்பு கூர்ந்து முப்பத்திரெண்டு தற்மம் விளங்கிய ரா
36. ஜன் கடல் கலங்கினு மட்டல் கலங்காதவன் மலைகுலிங்
37. கினும் மனங்கலங்காதவன் அசுபதி கெசபதி நரபதி
38. தனபதியாகிய ஸ்ரீறி ரங்கராயராகிய மைசூர் உபைய
39. காவேரி மத்திபம் ஆதிரெங்கமாகி சீரங்கபட்டணம் ந
40. வரெற்றின சிங்காஜன அதிபதியாகிய ராஜமான்னிய
41. ராஜஸ்ரீறி கிஷ்ணராசுடையவர்கள் பிறிதிவி ராச்சி மானு
42. நீதி பரிபாலனஞ் செய்து செங்கோல் செலுத்தி வருகுற நா
43. ளையிலவர்கள் காரியத்துப் பிரதானிக்காரின சீரெங்கரா
44. யர் அசுபதிராயர் கெஜபதிராயர் நரசிங்கராயர் ஸ்ரீறி விருபா
45. ச்சிராயர் மல்லிகாச்சினராயர் நரபதிராயர் பிரவுடதேவரா
46. யர் அச்சுதராயர் வெங்கிடபதிராயர் றாமதேவராயர் வல்லா
47. ளறாயர் யிம்முடிராயர் சதாசிவராயர் கலியுக வீரராயர் அ

**இரண்டாம் பக்கம்**

48. ஷ்ட்டபோக துரந்தரன் புரந்தரன் அதிபலபிராக்கிரமன் துஷ்
49. டிய நிக்கிரன் சிஷ்டர் பரிபாலனம் பண்ணிவருகிற தளக
50. ர்த்தறாகிய தளவாய் தேவராயனவர்கள் மகாவீர வந்தரா
51. யனவர்கள் கணுவாயுக்கம் கீள்ச்சீமை சத்திமங்க
52. ல கெடி அட்டவணை முகாசி தேவஸ்தானம் சுங்கம் பேரம்
53. மு உள்பட பெருந்துரைல் ஸ்ரீறிரங்கயர் சறுவாதிகால
54. த்தில் ஸ்ரீறி எல்லையரவர்கள் சுபையிலே ஸ்ரீறி அப்பாச்
55. சியவர்கள் பாரபத்தியத்தில் வெங்கிட்டசுப்பய்ய னாட்டி
56. மையில் முத்துவேலப்ப கவுண்டன் கரணிக்கத்தில் விசைய
57. ர்புதம் சாலிவாகன சகார்த்தம் 1685 க்கு மேல் க
58. லியுக சகார்த்தம் 4865 க்கு மேல்ச்சொல்லாநி
59. ன்ற சுபானு வருசம் புரட்டாசி மீ 11 தீ சுக்கிறவாரமும்
60. துதயம் திருவோண நட்சத்திரமும் சபுபாக்கிய நா
61. மம் யோகமும் பெற்ற சுபதினத்தில் குறுப்புநாடு வி
62. சயமங்கலம் ஊற்றுக்குளி கதித்தகிரி வேலாயுத நூ
63. தனப் பிறதிஷ்டை ரத உல்ச்சக பிறதிஷ்டையில் மா
64. ணிக்க வாசக சுவாமியார் மடத்துக்குப் பூமி தானமாக்க வி
65. சையமங்கலம் கவுண்டர்கள் அனுமந்த கவுண்டன்
66. குமாரசாமிக் கவுண்டன் குமாரவேலப்ப கவுண்டன்
67. பட்டக்காறக் கவுண்டன் ராமய கவுண்டன் நாங்கள்
68. அஞ்சு பங்குக் கவுண்டர்களும் பூமி சாதன பட்டையம்

69. அரமனை அறிய எழுதிக் குடுத்த விபரம் என்னவென்றால்
70. விரோதி வருசத்தில் பங்குக்கு நாலு வள்ளம் மேரை
71. யில் இருபது வள்ளக்காடு மடத்துக்கு யின்னோவ
72. ரைக்கும் நடந்து வந்தது செரியே இப்ப அஞ்சு ப
73. ங்கு கவுண்டர்கள் கூடி பங்குக்கு நாலு வள்ள மேரை
74. யில் மணியன்பங்கு காடு இவடத்தில் சேராதப
75. டியினாலே நாலு பங்குக்கும் பதினாறு வள்ளக்கா
76. டு அரமனை அப்பனைப்படிக்கி சின்னப்பட்டிக் கல்வெ
77. ட்டுக்குச் சேற்றிக் குடுத்து இதற்குவாதீனக் கூ
78. னம்பட்டிக் காட்டில் ஒம்முகப்படுத்திவிட்ட காட்டு வி
79. பறம் கீழிப்பாறைக்காடு தாறு ரண்டுக்கு வள்ளம் 4ம்
80. கொரண்மூலைக்காடு தாறு ரண்டுக்கு $4\frac{3}{4}$ இதின் கிழக்
81. குச் சாமோசி பண்டிதன் பழமம் $\frac{3}{4}$ இதின் கி
82. ழக்கு வாகைக்காடு $1\frac{1}{2}$ சுள்ளித்துண்டு $\frac{1}{2}$ இதின்
83. கிழக்கு கொழிஞ்சிக்காடு $2\frac{1}{2}$ இதின் தெற்கு எருக்காடு
84. 2 ஆக 16 வள்ளக்காடும் மாணிக்கவாசக சுவாமியா
85. ர் மடத்துக்குச் சந்திறாதித்தர் வரைக்கும் புத்திரா புத்திரா
86. பவுத்தர பரிக்கையாய் ஆண்டனுபவிச்சுக் கொழ்ழ உள்ளவர்க
87. ள் இந்தப்படிக்கி னாங்களஞ்சுபேருங் கூடிச் சம்மதி
88. ச்சு எழுதிக் குடுத்த பூமி சாசன பட்டையம்த்துக்கு
89. யாதாமொருவர் விகாதம் பண்ணினபேர்கள் கெங்
90. கைக் கரையில்க் காராம் பசுவைய் வதைத்த தோஷத்தி
91. லே போவார்கள் இந்தத் தற்மத்தைப் பரிபாலனம் பண்
92. ணின பேறக்கு வளம்பரிக்கையாய் அஷ்ட அயிசுவரியமும் பெற்று
93. ச் சிவத்தியானத்தை யுண்டாயிருப்பார்கள். அனுமந்தன்
94. குமாரசுவாமி குமாரவேலன் பட்டக்காரன் க(வு)ண்டன்
95. ராமய கவுண்டன் றுசுவு உ

## 17:3 *ஐந்நூற்றாஞ் செட்டியார் மகமைப் பட்டயம்*

*இப்பட்டயம் ஓலையில் எழுதப்பட்டுள்ளது. 15.1.1747 அன்று பாலக்காடு, கொடுவாய், கொல்லங்கோடு, துப்பநாடு ஆகிய இடங்களில் வணிகம் செய்யும் ஐநூத்தாஞ் செட்டியார்கள் கூடி ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்கட்கு மகமை நிர்ணயம் செய்து கூனம்பட்டி திருமடத்துக்கு உட்பட்ட பச்சைநாயகியம்மன் சத்திரத்துக்கு மாணிக்க வாசக சுவாமிகள் முன்னிலையில் எழுதிக் கொடுத்த ஓலைப்பட்டயம். பல வணிகப் பொருட்கள் கூறப்படுகின்றன.*

வைய னீடுக மாமழை மன்னுக மெய்விரும்பிய அன்பர் விளங்குக சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரிய தள விபாடன் பாஷைக்குத்

தப்புவார் கண்டன் மூவராய கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் எம்மண்டலமுங் கொண்டு ஈழந்திறைகொண்ட ராசராச பரமேசுவரன் ராச மாத்தாண்டன் ராச கெம்பீரன் ராசநரேந்திரன் ராசது ரேந்திரன் ராசசுகசாணன் நரயோகர் கண்டன் நரலோகவரன் துலுக்கர் தள வியபாடன் துலுக்கர் மொகரந் தவிழ்த்தான் ஒட்டியர் தள வியபாடன் ஒட் டியர் மொகரந் தவிழ்த்தான் மோகாங் வணங்காத மன்னர் மகுடந் துணித்து நகரிபதி சூறை கொள்ளும் பரசுராமன் அட்டதிக்கு மனோபயங் கரன் பதினெட்டுக் கோட்டத்து வன்னியர்கண்டன் ... தரணி பாலரின் அங்கம் பங்கம் கவுசலம் கங்கம் கவுடம் கொங்கம் குடகம் துளுநாடீழம் கொல்லம் கல்லியாணம் கோகர்ணம் ஒட்டியம் ஆரியம் கற்நாடகம் மறாட்டம் சிந்து சேரமண்டலம் சோழமண்டலம் பாண்டிமண்டலம் தொண்டைமண்டலம் கொங்கு மண்டலம் தொண்டைமண்டலம் கொங்கு மண்டலம் என்ற அன்பத்தாறு தேசத்துக்குமதிபதியானவர் சற்பனன் தேசா திபரும வணங்கு மகாராயன் அரயர் சற்ப கெருடன் பரராச பயங்கரன் கெசதள விபாடன் ஆனைகுந்திராயர் அசுபதிராயர் கெசபதிராயர் நரசிங் கராயர் விருப்பாட்சிராயர் மல்லிகாற்சுனராயர் பிறபுடதேவராயர் அச்சுத ராயர் ராமராயர் கிஷ்ணராயர் தேவராயர் வல்லாளராயர் இம்முடிராயர் சதாசிவராயர் கலியுகவீரவசந்தராயர் அட்டபோக புரந்தரன் அதிபெல பராக்கிரமன் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலகன் ஸ்ரீ மைசூர் தேவராச உடையர் கிஷ்டணராச உடையார் காரியத்துக்குக் கற்த்தரான தளவாய் தேவராசையனவர்கள் கோயம்புத்தூர்ச் சீமைப் பற்றதிகாரம் பண்ணுகிற நாளையில் கலியுக சகார்த்தம் 4847ற் மேல் செல்லா நின்ற அட்சய வரு ஷம் தை மாசம் 17 தியதி குரு வாரமும் பவுற்ணமையும் பூச நட்செத்திர மும் விருத்திநாம யோகமும் பெற்ற சுபதினத்தில் அவினாசி யிருபத்துனாலு நாட்டில் மாணிக்கவாழ் மலையார் சுவாமியார் மடத்துக் குச் சேர்த்த ஐன்னூறு குடிப்பாட்டத்துப் பலரும் பட்டக்காரரும் ...டிக்காட் டில் பச்சை நாயகியம்மன் சத்திரத்துக்கு குருசுவாமியார் சன்னிதானத்தில் நாங்கள் சகலருங்கூடி யெழுதிக் கொடுத்த மகமைப் பட்டயம் பாலைக் காட்டுச்சேரி கொடுவாய் கொல்லங்கோடு துப்பநாடு இந்த மாற்கங்களில் ஏறுசாத்து யிறங்குசாத்து சவளி நூல் புகையிலை பாக்கு மிளகு மஞ்சள் வெல்லன் கோசும்பைப்பூ சந்தனம் அரக்கு முதலாகிய எப்பேற்பட்ட பொதிக்கும் முன் எட்டு வகைப்பலரும் எழுதிக் கொடுத்த செப்பேட்டுப் பட்டயப் பிரகாரத்துக்கும் பொதிக்கும் பணம் மாகாணி நடந்து வருகிறது சரியே யிப்பவும் யிந்த நாலு மாற்கத்துக்கு ஏறு சாத்து இறங்கு சாத்துக்கும் பொதி 1 க்கும் பணம் அரைக்கால் பெண்ணார்க்காட்டு மாற்கம் வடக்குத்துலைப் பட்டணத்து மாற்கம் ஏறு சாத்து இறங்கு சாத்து சவழி நூல் புகையிலை நெய் சீரகம் அரக்கு சந்தனம் பாக்கு மிளகு மஞ்சள் எப்பேர்ப்பட்ட பொதிக்கும் வீரராயன் பொதி 1க்கும் பணம் மூன்று வீசம் உப்புப் பொதி 1க்கு பணம் அரைக்கால் மூலைப்பொதி 1க்கு பணம் மாக் காணி இந்தப் படிக்கு சந்திராதித்தருள்ளவரைக்கும் சத்திரத்துத் தன்மம் நடத்தி வருகிறோமென்று சம்மதித்து ஒப்பி எழுதிக் கொடுத்த பட்டயம். இந்தத் தர்மத்தை யாதாமொருவன் பரிபாலனமாய் நடப்பிவிச்சுக்

கொண்டு வந்தவர்கள் சகல சம்பத்துமுண்டாகி சுகத்திலேயிருப்பார்கள் இதுற் யாதாமொருவனிந்த தன்மத்துக்கு விகாதஞ் செய்தவன் கங்கைக் கரையிலே காராம்பசுவைக் கொன்ற தோசத்திலே போகக் கடவேனாக வும் இதற்குச் சாட்சி அவினாசிலிங்கர் பெருங்கருணையம்மன். இந்தப் பட்டயமெழுதிவனன் பொன்னையன் சிவமயம்.

வயிரவன் செட்டி சாமினாதசெட்டி வேலாயுதசெட்டி ஆவிடைசெவளை செட்டி கந்தசாமி செட்டி கெங்காதரசெட்டி சிலம்பு செட்டி அவினாசி வாத்தியார் நெட்டெழுத்து.

---

# 18. வேலங்குடி ஊரணி ஆவணங்கள்

சு. இராசகோபால், சென்னை.

சிவகங்கை மாவட்டம் காரைக்குடி-திருச்சிராப்பள்ளி சாலையில் காரைக்குடியிலிருந்து 8 கி.மீ. தொலைவில் வேலங்குடி என்ற ஊர் உள்ளது. பாலையநாட்டு அமைப்பைச் சேர்ந்த 16 ஊர்களில் ஒன்று வேலங்குடி.[1] இவ்வூர் பெரிய கண்மாய்ப் பாசனத்தில் அமைந்த வயல்களின் தென்பகுதியில் ஒருகாளி கோயில் உள்ளது. இக்கோயில் வயல்நாச்சி அம்மன்கோயில் என்றழைக்கப்படுகிறது. அதன் பின்பகுதியில் செம்புரான் கல்லால் ஆன ஊரணி உள்ளது. வயல் நடுவில், ஊரைவிட்டுத் தொலைவில் உள்ளதால் இக்கோயிலில் ஒருகால பூசை மட்டும் நிகழ்கிறது. இக்கோயிலின் காளி செப்புத் திருமேனியை ஊர்நடுவில் மற்றொரு கோயில் கட்டி அங்கு மூன்றுகால பூசையுடன் வழிபடுகின்றனர். ஊர்நடுவில் உள்ள கோயில் பெரியநாயகி அம்மன் கோயில் என்றழைக்கப்படுகிறது. எனினும் இரண்டு பெயர்களுமே இரண்டு கோயிலுக்கும் சொல்லப்பட்டு அழைக்கப்படுகின்றன.

பாலையநாட்டு 16 ஊர்களுக்குச் சொந்தமான இக்கோயிலின் தேர்த் திருவிழா பிரதானமான ஏழு ஊர் சாமியாடித் தலைவர்களின் முன்னிலையில் பல ஊர் மக்களும் மதுக்குடம் எடுத்து வந்து 'ஏழூர்ச் செவ்வாய்' என்ற பெயரில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.[2] நாட்டார்கள் அன்றி நகரத்தாரும், பிராமணரும் மற்றும் எல்லாப் பிரிவினரும் மிகுந்த ஈடுபாட்டுடன் கலந்துகொள்கின்றனர். இக்கோயில் வழிபாட்டிலும் திருப்பணியிலும் சிவகங்கை மாவட்டம் ஆத்தங்குடி மற்றும் முத்துப்பட்டணத்தைச் சேர்ந்த நகரத்தார் பெரும்பங்காற்றுகின்றனர்.[3]

19ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் வயல் நாச்சியம்மன் கோயிலின் பின்புறமுள்ள ஊரணி இந்நகரத்தாரில் ஒருவரால் வெட்டிக்கட்டப்பட்டுள்ளது. இதனை இவ்வூரணிக் கரையில் உள்ள கி.பி.1877ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டின் மூலம் அறிகின்றோம். இவ்வூரணிக்கு இடம் போதாமல் மீண்டும் நிலம் வாங்கப்பட்டுச் சேர்க்கப்பட்டதை 1916இல் எழுதப்பட்ட காகித ஆவணம் மூலம் அறிகின்றோம். ஆங்கிலேயரின் வரிக்குத்தகைக்காரர் (ஜமீன்?) இவ்வூரணிக்கு வரிவிதித்த செய்தியை 1920ல் எழுதப்பட்ட மற்றொரு காகித ஆவணத்தால் அறிகின்றோம்.

இவ்வூரணியைச் சுற்றி நாட்டார்கள் வைத்திருந்த தென்னை மரங்களை அகற்றிவிட்டு திருவீதி அமைக்கப்பட்டதையும், ஊரணிக்குப் பெரிய கண்மாயிலிருந்து மஞ்சள் மடை வழியாக தண்ணீர் விடப்

பட்டதையும் கால்வாயைத் தாண்டி ஊரணி மற்றும் கோயிலுக்கு வர பாலம் அமைத்துக்கொள்ள அனுமதிதரப்பட்டதையும், இறைவி உலா வர திருவீதி அமைக்க நிலங்கள் திரித்துக் (மாற்றி) கொடுக்கப்பட்டதையும், ஆறாம் திருநாளைத் திருப்பணி செய்த ஆத்தங்குடி நகரத்தார் நடத்த நாட்டார் சம்மதித்ததையும், திருவிழா நாள் குறித்துத் திருமுகம் அனுப்ப சம்மதித்ததையும், ஊரணியைச் சுற்றித் தென்னை மரங்கள் வளர்த்து அதன் வருவாயைக் கோயிலுக்குச் செலுத்தவும், ஊரணி மீன் வருவாயை ஊரணி பராமரிப்புச் செலவுக்குப் பயன்படுத்தவும், ஊரணிக் கரையில் விடுதி கட்டிக்கொள்ளவும், தண்ணீர் பற்றாக்காலத்தில் ஊரணி நீரை விவசாயத்திற்கு நாட்டார் பயன்படுத்தாமல் இருக்கவும், ஊரணியில் சேறு எடுக்கும்போது நாட்டாரின் தென்னந்தோப்பில் மரங்களுக்குக் கெடுதல் இல்லாமல் போடவும், நாட்டாரும் ஆத்தங்குடி நகரத்தாரில் ஒருபிரிவினரும் செய்து கொண்ட உடன்படிக்கைகளை இரண்டு ஓலை ஆவணங்கள் காட்டுகின்றன.

இன்று இவ்வூரணிக் கரையின் தென்புற, மேற்புறக் கரைகள் சிதைந்துவிட்டன. ஊரணிக்கரையில் ஒரு விடுதி, ஒரு ஓய்வுக்கூடம் (சவுக்கை), ஒரு விநாயகர் கோயில், வயல்நாச்சியம்மன் கோயில் ஆகியவை உள்ளன. கால்வாய் மீது பாலம் உள்ளது. மஞ்சள் மடையிலிருந்து ஊரணிக்கு நீர் செல்லும் வழி அடைபட்டுள்ளது. ஊரணியைச் சுற்றி ஆறாம் நாள் மண்டகப்படியின் போது இறைவி உருவம் எடுத்துச் செல்லப்படுகிறது. நகரத்தார் இதனை ஏற்று நடத்துகின்றனர். திருவிழா நாள் குறித்த ஓலை (திருமுகம்) இன்றும் நாட்டாரால் அனுப்பி வைக்கப்படுகிறது.

## 18:1 ஊரணிக் கல்வெட்டு (படம் 18.1)

இடம் : வேலங்குடி வயல்நாச்சியம்மன் கோயில் பின்புறம் உள்ள வடக்குப் படித்துறையில் மேல்புறத்தில் உள்ளது.

காலம் : தாது வருடம், கி.பி.1877.

குறிப்பு : ஆத்தங்குடி பெரிய அழகப்பசெட்டியார் மகன் சின்னான் செட்டியார் ஊரணி வெட்டி கல்கட்டு கட்டியதைக் குறிப்பிடுகிறது. இதனில் குறிப்பிடப்படும் மாத்தூர் இவர்களின் நகரக் (கோத்திரக்) கோயிலாகும். அரும்பாக்கூர் அதனில் உள்ள பிரிவாகும்.

1. உ சிவமயம்
2. சாலியவாகன சகாப்தம் 1799 யிங்கிலீசு 18-
3. 77 வருஷம் செனவரி மாதம் 21-ந் தேதி சரியான தமிள் தா
4. து வருஷம் தையி மாதம் 10-ந் தேதி பாலையநாட்டைச் சேர்ந்த வேல-
5. ங்குடி பெரியநாயகி அம்மன் கோயில் ஊரணி
6. வெட்டிக் கல்கட்டினது கேறளசிங்கவளனாடாகிய பிறம்
7. பூற் நாட்டில் மாத்தூறான வீறபாண்டியபுரத்தில் அரும்

8. பாக்கூருடையான் ஆத்தங்குடி பெரிய அளகப்ப செட்டி
9. யாற் மகன் சின்னான்ஞ் செட்டியாற் செயித தற்மம்.



படம் 18.1. வேலங்குடி ஊரணிக் கல்வெட்டு

## 18:2 வேலங்குடி ஓலை ஆவணம் (படம் 18.2)

இடம் : *சிவகங்கை மாவட்டம் ஆத்தங்குடி மற்றும் முத்துப் பட்டணத்தில் உள்ள மாத்தூர் அரும்பாக்கூர் பிரிவு பங்காளிகள் வசம் உள்ளது.*

காலம் : *பவ வருடம், கி.பி.1875*

குறிப்பு : *பாலைய நாட்டார், வேலங்குடி ஊரார் ஆகியோர் ஆத்தங்குடி லெட்சுமணன் செட்டியார் முதலானோருடன் செய்து கொண்ட உடன்படிக்கை. ஊரணிக்கு கண்மாயிலிருந்து நீர்விடவும், ஊரணித் தண்ணீரைப் பாசனத்திற்கு எடுத்துக்கொள்ளாமல் இருக்கவும், இன்னும் பிறவற்றிற்குமாக உடன்படிக்கையாக இவ்வோலை எழுதப்பட்டுள்ளது. இந்த ஓலைக்கு ஒரு தலைப்பு ஓலை உள்ளது. அதனில் 'வேலங்குடி ஊறணி முறி' என்றெழுதப்பட்டுள்ளது. ஓலை 48 செ.மீ x 3.5 செ.மீ. அளவுடையது. இதனில் குறிக்கப்படும் லெட்சுமணன் செட்டியார் சிதைந்திருந்த வயல்நாச்சிஅம்மன் கோயிலின் கருவறை, அர்த்தமண்டபம், இவற்றை ஒட்டிச் சுற்றியுள்ள நடை மண்டபம் ஆகியவற்றை புதிதாக அமைத்தவர். இவருக்கு ஒரு செப்புத்திருமேனி செய்யப்பட்டு இக்கோயிலில் பாவை விளக்காக உள்ளது.*

முன் பக்கம்

ஸ்ரீமது பெரியநாயகி அம்மன் துணை

1. பவா வருஷம் மாருகளி மாதம் 4 உ ஸ்ரீ பாலையநாட்டு வேலங்குடி பெரி யநாயகி அம்மன் கோவில் வயல் நாச்சியம்மன் ஊறணி தருமத்தை ஆத் தான்குடியிருக்கும்.
2. மாத்துஊருற் கோவில் அரும்புபாக்கு ஊருற் உடையான் சி.மு. சுப்பிறம ணியன் செட்டி லெச்சுமனனும் பெரிச்சியப்பன் செட்டி பெரிய கறுப்
3. பணும் அருணாசலம் செட்டி ராமன்நாதன்னும் பெரி. கறுப்பன்செட்டி பழ னியப்பன்னும் அள.சு.சுப்பிறமணியன் செட்டி பெரியணன் உள்ளுட் டாற்க்கு
4. பாலைய நாட்டாறும் வேலங்குடி ஊறாறும் யெளுதி குடுத்த உடன்படிக்கி யாவது வயல் நாச்சி அம்மன் கோவிலில் பூருவீகமாயி யிரு[க்குர] ஊருணி
5. யை மேற்படியாற் செல்லுமான பணம் குடுத்து வெட்டி திரித்தி கல்லு கட் டும் படியாயி விட்டுயிருப்பதால் மேற்படி ஊருறனிக்கி செல்லுமான
6. தண்ணீர் வேலங்குடி பெரியகம்மாயி மஞ்சல் மடையால் தன்னீற்விட்டு குடுகிறது அருநீற் சிருநீற் காலத்தில் ஊருறனி தன்னியை பா[சனத்]
7. தில் விடுகிறதில்லை மேற்படி ஊருறனி கரையில் தென்னை மறம் முதல் லான விரிச்சங்கள் வையித்து பரிபாலன் செயிது அதின் வருமானத்தை

பின்பக்கம்

8. அம்மன் கோவிலில் சேரிப்பிக்கிறது ஊறனியில் யிருகிறமச்சாத்தை ஊரணி தருமத்தில் சேத்து கொளுகிறது நாட்டு செவ்வாயில் தரூற்வருகி[றவீ]
9. திக்கு வேலங்குடி பெரியகம்மாயி காளுவ்வாக்கி பாலன் தெரு கட்டி அதுக்கு கிளக்கு வீதி ஒக்கு யிட்டு கொளுகிறது திரூற்வருகிறதிக்கு மேற் படி வீதியில் குருக்கு யிடு[கிற]
10. மறங்கள் நிலங்கள்லே நாட்டாற் திரித்து [குரு] விடுகிறது மட்டாகாபடிக்கி ஊறுணி கரைசுத்தி வருகிறது நாட்டு செவ்வாயில் ஆறானால் மட்டாகா
11. படி செட்டியாற் செய்து வருகிறது நாட்டாற் திருமுகம் யெளுதி அனுப்பு கிறது யிந்தபடிக்கி மேற்படி ஊறனியை செல்லுமான பணம் குடுத்து வெட்டி
12. கல்லும் கட்டி மேற்படி தற்மத்தை கல்லும் காவேரியும் சந்தறாற் சூரியாள் உள்ள வரையில் பரிபானனம் பன்னி வருகிறது யிந்தபடிக்கி நாட்டாற் ஊறாற் சொல்ல
13. நாட்டுக்கணக்கு கோவில்தன் கணக்கு நெல்லியப்பான் மகன் நெல்லியப் பன் கையியெளுத்து பளனியப்பன் சேருவைகாற மகன் திருவுடையான் சேருவை யிந்தகீறல் பழனியப்பனம்பலம்
14. மகன்ராமன்–யிந்த கீறல் பாகைச்சான் மெய்யப்பனம்பலம் மகன் வீறப் பன்ஜ–யிந்த கீறல் சின்னாசின்னான் சின்ன கறுப்பனம்பலம் பெரியனம்ப லம்–யிந்தகீறல் சின்னா வீரனத்தம்பலம் சோலையன்

15-20. சின்னதம்பி சேருவைகாறர் மகன், பெரியண்ணன் சேருவைகாறன்.

## 18:3 வேலங்குடி ஓலை ஆவணம்

*இடம் : மேற்கூறியவர்களிடம் உள்ளது.*
*காலம் : பார்த்திப வருடம், கி.பி. 1886.*
*குறிப்பு : இவ்வோலைக்கு ஒரு தலைப்பு ஓலை உள்ளது. அதனில் 'வேலங்குடி ஊற்முறி' என்று எழுதப்பட்டுள்ளது. இவ் வோலை 48 × 3.5 செ.மீ. அளவுடையது, துளையிடப்ப டாதது. ஊரணியைச் சுற்றி வைத்துள்ள தென்னை மரங்களை அகற்றிவிடவும், விடுதி இருந்த இடத்திலி ருந்தும் தென்னைமரங்களை எடுத்துவிடவும் ரூபாய் 500 பெற்றுக்கொண்டு நாட்டார் எழுதிக் கொடுத்த ஒப்புதல் (யாதாஸ்து) ஆகும்.*

**முன் பக்கம்**

1. பார்த்திப வருஷம் காற்த்திகை மீ 22 உ வேலங்குடி நகறத்தாற் ஆத்தங் குடி சி.மு.சுப்பிரமணியன் செட்டி மகன் லெட்சுமணன் செட்டிக்கும்
2. பெ. கருப்பன் செட்டி மகன் பளனியப்ப செட்டிக்கும் யெளுதிகுடுத்த யாதஸ்த்து வேலங்குடியில் வயல் நாச்சியம்மன்ங் கோவிலுக்கு தென்
3. பக்கத்தில்த் தாங்கள் ஊறணி வெட்டி கல்கட்டி யிருப்பதில் நாங்கள் ஊற ணிக் கரை ஓறமாயும் சுத்தியும் தென்னம்பிள்ளை போட்டிரு
4. ப்பதை மேற்படி ஊறணி படித்துறை தெறணை வரி ஒளுங்கு உள்ப்பட நாலு ஓரத்திலும் வயித்து இருக்குற தென்னம் பிள்ளைகளை யெடு
5. த்து போடுகிறது யென்றும் ஊறணிக்கீள்கறையில்த் தாங்கள் விடுதிகட்டி இருந்த இடத்தில் நாங்கள் தென்னம்பிள்ளை போட்
6. டிருக்குறது யெடுத்துவிடுகிறதென்றும் அதில்த் தாங்கள் விடுதி கட்டி கொள்ளுகிறதென்றும் மேற்படி ஊறணியில் சேற் யெடுத்தால் அதை

**பின்பக்கம்**

7. யெங்கள் தென்னந் தோப்பில் மரங்களுக்கு கெடுதலன்னியில் தாங்கள் போட்டுக் கொள்ளுகிற தென்றும் முன் கண்மாயில் போட்டு
8. இருக்குற மடைவளியாக வழக்கம்போலே மேற்படி ஊறணிக்கி தண்ணீற் வருகிறதென்றும் தீற்மானித்து ரூ 500 தங்களிடம் மேற்படி ரூபா
9. ய் அஞ்ஞூரு நாங்கள் வாங்கிக் கொண்டிருப்பதுநாலே இதுபோலே நடந்து கொள்ளுகிறது. பெரி.பழனியப்பன்*
10. சாட்சி அள.அரு.ராமசாமி* சாச்சி 2. அ. அறுணாசலம் அறிவேன் சா.ராம.முத்தய்யாசெட்டி*
11. இது எழுதினது மதுரையில் வந்து இருக்கும் தேவகோட்டை வெங்கடாச லமய்யந் குமாறந் குப்பய்யன்*

## 18:4 வேலங்குடி காகித ஆவணம் (படம் 18.3)

*இடம் : மேற்கூறியவர்களிடமுள்ளது.*
*காலம் : இராக்ஷச வருடம், 12.1.1916.*

---
*கையொப்பங்கள் அவ்வவர்களே இட்டதாக வெவ்வேறு எழுத்தமைதியில் உள்ளன.

குறிப்பு : 20.5 × 16.5 செ.மீ. அளவுள்ள தாளில் முன்னும் பின்னும் கறுப்பு மையில் எழுதப்பட்டுள்ளது. ஆங்கிலேய அரசின் ஒரு அணா முத்திரை வில்லையின் மீது இறுதியில் கையொப்பமிடப்பட்டுள்ளது. ஆத்தங்குடி பெரிச்சியப்ப செட்டியார், கோட்டையூர் முத்தையா செட்டியாரிடம் ஏற்கனவே வாங்கியிருந்த 6½, குறுக்கம் நிலத்திற்கும் கூடுதலாக மேலும் 3¾ குறுக்கம் நிலம் ரூ.700க்கு வாங்கியதைச் சொல்லும் விலை ஆவணம். குறுக்கம் என்பது ¾ முதல் 7 ஏக்கர் வரை பலவிடங்களில் பலவாறாக உள்ள ஒரு புஞ்சைநில அளவாகும். இவ்வூரணி சுமார் 300 × 300 அடி சதுரமுடையது. மொத்தம் 10 குறுக்கத்துக்கு ஊரணியைச் சுற்றிவிடப்பட்ட நிலஅளவும் சேர்த்துக் கொள்ள வேண்டும். இடத்தின் விலையாகத் தரப்பட்ட தொகை 'நஜற்' ரூ.700 என்று சொல்லப்பட்டுள்ளது. 'நஜற்' என்பது உருதுச்சொல். காணிக்கையாகக் கொடுக்கும் பணம் என்று தமிழ் அகராதி குறிக்கிறது. எனவே ஊரணிக்காக நிலம் கொடுத்தவர் பெற்ற பணம் அன்றைய நிலவிலை அல்ல, ஒரு சிறப்புச் சலுகை விலை எனலாம்.

**முன் பக்கம்**

1. ராக்ஷஸ வருஷம் மார்கழி மாதம் 28ந் தேதிக்கு
2. 1916 வருஷம் ஜெனவரி மாதம் 12ந் தேதி
3. ஆத்தங்குடி பெ.க.சு.பெரிச்சி
4. யப்ப செட்டியார் அவர்களுக்கு
5. கோட்டையூர் பெ.மு.சு. முத்தய்யா
6. செட்டியார் யெளுதி கொடுத்த
7. வற்த்தமானம்
8. எங்களுடைய வேலங்குடி
9. கிராமத்தில் குடியிருப்புக்கு
10. மேல்புரம் தங்களுக்கு முந்தி
11. கவுல் குருக்கம் 6¼ தந்து
12. அதில் தாங்கள் இப்பொழுது
13. ஊரணி வெட்டியிருப்பதில்
14. இன்னும் இடம் போறாதெ
15. ன்றும் ஜாஸ்தியாய் வேணு
16. மென்றும் தாங்கள் கேட்டு
17. கொண்டு அதுபோல்

**பின்பக்கம்**

18. குருக்கம் 3¾ தருவதாக
19. ஒப்புக்கொண்டு அதற்காக
20. நஜற் ரூ.700 (எழுநூரு)

21. வாங்கி கொண்டிருக்கிற
22. படியால் அது போல்
23. முந்திய கவுல்படி குருக்கம்
24. 6¼ம் இப்பொழுது குருக்கம்
25. 3¾ம் ஆக குருக்கம்
26. 10 (பத்திலும்) ஊறணி வெ
27. ட்டி கறையும் போட்டுக் கொள்ள
28. வேண்டியது மேற்படி ஊறணிக்கி
29. தண்ணியும் முன் யெழுதிய
30. வற்த்தமான லெட்டர்ப்படி
31. செய்து கொள்ளுகிறது
32. மேற்படி கவுல் பத்திறமும் தாங்கள்
33. கேழ்க்கும் போது மேற்படி குருக்கம்
34. 10 (பத்தும்) கவுல் தஸ்தாவேஜு
35. யெழுதி தருகிறோம் மேலே
36. கண்ட நஜற் துகை ரூ.700 எழுநூ
37. ரும் வேலங்குடி லெ.பெரியனண
38. ம்பலம் மூலம் வாங்கி கொண்டோம்.

## 18:5 வேலங்குடி காகித ஆவணம்

இடம் : *மேற்கூறியவர்களிடமுள்ளது.*
காலம் : *சித்தார்த்தி, 8.3.1920.*
குறிப்பு : *21 × 17 செ.மீ. அளவுள்ள அரைத்தாளில் 2 பக்கங்களில் எழுதப்பட்டுள்ளது. ஆங்கிலேய அரசின் வரிக்குத்தகை தாரின் (ஜமீன்?) பேஷ்கார், ஆத்தங்குடி பெரிச்சியப்ப செட்டியாருக்கு ஊரணி வரி குறைக்க இயலாது என்று எழுதியுள்ளார். ஊரணி வரியாக நிலவரி, சாலைவரி, தொடர்வண்டி வரி ஆகியவை உட்பட ஒரு பசலி ஆண் டுக்கு எட்டு ரூபாய் ஒரு அணா ஐந்து பைசா வீதம் தீர் வையாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. 'கவுல்' என்பது குத்தகை உடன்படிக்கையாகும்.*

**முன் பக்கம்**

| | | |
|---|---|---|
| பெ.மு.சு. | சிவமயம் | ஆத்தங்குடி |
| கோட்டையூர் | | பெ.க.க. |

1. சித்தார்த்தி வருஷம் மாசி மாதம் 25ந்தேதி
2. பெரிச்சியப்ப செட்டியாறவர்களுக்கு
3. பேஷ்க்கார் ஸாமினாதய்யர் யெளு
4. திக் கொண்டது
5. இப்பவும்
6. தங்கள் ஊறணிக்கி வருஷம் 1க்கு
7. கவுல்வரி தீர்வை ரூ.7.8.0ம் றோட்டுவரி

8. ரூ.0.7.6ம் ரயில்வரி ரூ.0.1.11ம் ஆக
9. ரூ.8.1.5 ஆகிறது மேற்படி விஷயமாய் செட்டி
10. யாரவர்களிடத்தில் சொன்னதில் வரி
11. விஷயமாய் கூடுதல் குறச்சல் செய்ய
12. சாத்தியப்படாதென்றும் சொல்லிவிட்டார்
13. கள் சென்ற 1324 (பசலி) முதல் 1328 (பசலி)
14. முடிய பசலி 5க்கு கூடுதல் ரூ.40.7.1.
15. மேற்படி துகையை லெ.பெரியணனம்பலம் பே
16. ருக்கு அனுப்பும்படி செய்ய வேணும்

**பின்பக்கம்**

17. மேற்படி துகைக்கி அச்சடி ரசீதும்
18. அனுப்புகிறோம்
19. மேற்படி விஷயமாய் லெ.
20. பெரியண்ணம்பலகாரர் வசம் யெல்லாம்
21. சொல்லியிருக்கிறது
22. வேணும்
23. ஸாமிநாகமஅய்யர்
24. பேஷ்கார்
25. கோட்டையூர்
26. 8.3.20

---

**அடிக்குறிப்புகள்**

1. *பாலையநாட்டைச் சேர்ந்த 16 ஊர்கள் பின்வருமாறு: 1. வேலங்குடி, 2. பள்ளத்தூர், 3. கோட்டையூர், 4. மனச்சை, 5. கண்டனூர், 6. பாலையூர், 7. கருவியப்பட்டி, 8. வடகுடி, 9. கொத்தரி, 10. கானாடுகாத்தான், 11. நேமத்தான்பட்டி, 12. பலவான்குடி, 13. கழனிவாசல், 14. காரைக்குடி, 15. முல்லாம்பட்டி, 16. சுட்டிநல்லிபட்டி. இதுபோல் இப்பகுதியில் அமராவதிநாடு, உஞ்சனைநாடு, ஜெயங்கொண்டான் நாடு என்பவையும் உள்ளன. இந்நாடு அமைப்புகளில் உள்ளவர்கள் அம்பலார் என்றும் சேர்வை என்றும் அழைக்கப்படுகின்றனர். தகவல்: திரு. கணபதி அம்பலம், வேலங்குடி.*
2. *ஏழு ஊர்கள் 1. வேலங்குடி, 2. பள்ளத்தூர், 3. கோட்டையூர், 4. மனச்சை, 5. கண்டனூர், 6. வடகுடி, 7. கொத்தரி. மதுக்குடம் எடுத்தல் பற்றிய விவரங்களுக்குப் பார்க்க 'கொற்றவை வழிபாடும் மறவரும்' கரு. இராசேந்திரன் ஆவணம்: 6.*
3. *நகரத்தார் எனப்படும் இப்பகுதி நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் தங்களுக்கென்று 9 நகரச் சிவன்கோயில்களைக் கொண்டு அவற்றில் ஒன்றைத் தங்கள் பிரிவாக வகை செய்துகொண்டு பெண்கொடுத்தல், பெண் எடுத்தல் நெறிமுறைகளைக் கடைபிடிக்கின்றனர். அக்கோயில்களுக்கு அவர்கள் பெரும்பாலும் சென்று வருவதில்லை. ஆனால் நாட்டார், வேளார் பகுதியில் உள்ள காளி, ஐயனார் கோயில்களைத் தங்கள் குல தெய்வக்கோயில்களாகக் கொண்டு அதிகம் சென்று வழிபடுகின்றனர்.*

---

# 19. பிரஞ்சுத்தமிழில் ஒரு வீடு கிரைய சாசனம் (கி.பி.1843)

**கோ. விசய வேணுகோபால், பாண்டிச்சேரி.**

*இந்த வீட்டு விலையாவணம் மாதரசம்மாள் என்பவருக்குக் காரைக்காலிலிருக்கும் வெங்கிடாசலம் செட்டியார் மகன் லெட்சுமண செட்டியார் எழுதிக் கொடுத்தது. 1843 ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் பத்தாம் தேதி காரைக்கால் பதிவலுவலகத்தில் (தபலியோம்) பதிவாகி யுள்ள இது பிரெஞ்சுப் புரட்சிக்குப் பின் ஆட்சியிலிருந்த மன்னன் லூயி பிலிப்பு வெளியிட்ட கட்டளையைத் தெரிவிக்கிறது. 19ஆம் நூற்றாண்டுப் பிரெஞ்சுத் தமிழுக்கு நல்ல எடுத்துக்காட்டு இது. ஆவணத்தில் பல பிரெஞ்சுச் சொற்கள் தமிழெழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. க்க, த்த என்று ஓரின மெய் மிகும் இடங்களிலும், 'மேற்படி' என்ற சொல்லும் கூட்டெழுத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியிடப்படவில்லை.*

***கிறைய சாசனம்***

பிராஞ்சுக் காறர்களுக்கு இராசாவாகிய லூய பிலிப்பு யென்பவரிப்போதுமெப்போது மனவோர்க்கும் வந்தனஞ் சொல்லியறிவிக்கின்றதாவது

ஆயிரத்து யெண்ணூத்து நாற்பத்து மூணாமாண்டு அவுறில்[1] மாதம் பத்தாந்தேதிக்குச் சரியான சுபகிருது வருஷம் பங்குனி மாத முப்பதாந்தேதி காரைக்கால் தபலியோம்[2] நாகை குமாரசாமி பிள்ளையாகிய நாம் காரைக்காலில் திருநள்ளாத்து வீதியில் வடசிறகிலிருக்கிற நாசர் ஞானப்பிரகாச முதலியார் வீட்டுக்குப் போயங்கே நமது முன்பாகக் காரைக்காலிலிருக்கும் தன் புருஷன் சர்ஷாமாஷோந்[3] மலையப்ப நாயக்கரைக் குப்புராத் தேராக[4] வுதவிக்கொண்ட மாதரசம்மாளுக்கு மேற்படி யூரிலிருக்கும் வெங்கிடாசல செட்டியார் மகன் லெட்சுமண செட்டியார் யெழுதிக்கொடுத்த கட்டுக்கோப்பு வீடு சுத்தக்கிறைய சாதனம் யென்னவென்றால் யென்னுதான வீடானது காரைக்காலில் மாதாகோவில் தெருவில் கீழ் சிறகில் முசியெ டொர்வன்[5] துரை வீட்டுக்கு மேற்கு மோரீசு சாந்தப்பிள்ளை வீட்டுக்குத் தெற்கு வாத்தியார் அருளப்பிள்ளை வீட்டுக்கு வடக்கு இந்த நாற்பாங்கெல்லைக் குள்பட்ட வீட்டினிலத்தளவு தெற்கு வடக்குச் சாதியடி நாற்பது: கிழக்கு மேற்குச் சாதியடி யெண்பது. இந்த வீட்டுக்கு நம்மிரு திறவர் மனராசியில் விலை நிற்செயித்துக் கொண்டது செல்லுங் கும்பினி டாலர் ரூ.565. இந்த ரூபாயன்னூத்தறுபத்தைந்துக்கும் விலையறவித்துப்பொருளற யிதற்கு முன் நான் தங்களிடத்தில் ரொக்கம் பற்றிக் கொண்டபடியினாலெ யிதுவே விலையாகவு மிதுவே விலைக்கிறைய சாதனமாகவுங் கட்டிக்கொண்டு தாங்கள் மெலெழுதிய வீட்டை செலதரு பாஷாண நிதி நிட்சேப முள்படத் தானாதி விக்கிறையங்களுக்கு யோக்கியமாகப் புத்திர பௌத்திர பாரம்பரையாக ஆண்டுகொண்டு சுகத்திலெ யிருப்பீர்களாகவும். இதற்க்கி

யாதொரு கலனுமில்லை யுண்டாகில் வித்த நானே கலன்றீர்த்துக் கொடுப்பேனாக வும் இதற்கு ராசாவின் றீர்வை நூத்துக்கு ரெண்டரையாக ரூபாய் பதினாலெயரைக் கால் கொடுக்கப்பட்டுது. மேற்படி வீட்டின் மூலசாதனம் ஆயிரத்து யெண்ணூத்து யிருபத்தோராமாண்டு அவுறில் மாதம் ஒன்பதாந் தேதி பிறந்த தபலியோஞ் சீட்டு ஒண்ணு - ஆயிரத்து யெண்ணூத்து யிருபத்தெட்டாமாண்டு மூவேன்[6] மாதம் பதி னைந்தாந்தேதி பிறந்த பேலப்பு றொசொவற்பால ஒண்ணு ஆக ரெண்டு ஆதரவுக ளையும் நான் தங்களிடத்திற் கொடுத்து விட்டேன். மேற்படி வீட்டைத்தான் நன்றா யறிவேனென்று மாதரசம்மாள் வெளிப்படுத்தினாள் இந்தப்படி சம்மதித்து மாதரசம் மாளுக்கு லெட்சுமண செட்டியார் மனராசியிலெழுதிக்கொடுத்த கட்டுக்கோப்பு வீடு சுத்தக்கிறைய சாதனம். இதற்கு சாட்சியாக வழைத்தது காரைக்காலிலிருக்கும் நெல் வற்தகம் வயித்திலிங்க பிள்ளை மகன் அய்யாறு பிள்ளை. சாந்தண்ணா முத லியார் மகன் தம்பி தெய்வசகாய முதலியார் இந்தப் பத்திரத்தை வாசித்துக் காட்டிய பின்பு மாதரசம்மாள் தனக்குக் கையெழுத்து வைக்கத் தெரியாதென்று வெளிப்படுத் தினாள். மைற்றப்பேயர்[7] நம்முடன் கூடக்கையெழுத்து வைத்தார்கள். இந்தப்படி மேற்படி யிடத்தில் மேலெழுதிய வருஷம் மாதந் தேதியிலானது. கையெழுத்து. லெட்சுமணன் அய்யாறு தம்பி தெய்வசகாயம் அ மலையப்பன் நாகை குமாரசாமி ஊர்கணக்கு.

ஆயிரத்து யெண்ணூத்து நாற்பத்து மூணாமாண்டு அவுறில் மாதம் பதிநோராந் தேதி 12ம் நம்பர் தவெதிரத்திவணை 16வது யேட்டில் முன் பத்திரம் பதிந்திருக்கி றது. சிறொப்பியர் மேத்திறுபெத்தி[8] தெசங்கூறு துரை கையொப்பம் வைத்திருக்கிறார்.

வேண்டுஞ்சமையத்தில் சகல நாசர்களுமிந்தப் பத்திரத்தை தகுமானபடி முழு தும் நிரவேத்திவைக்கவு மதற்குக் கைகொடுக்கும்படி நமது புறொக்கியுறோர் ஷென் ரோமார்[9] களுக்கும் முதல் விசாரணைத் திறிபுநால்[10] களிலிருக்கின்ற நமதயுறோக்கிப்புறோமார்களுக்கும்[11] ஞாயமாய்க் கேட்டுக்கொள்ளும்போது குமுக்குக் கொடுக்கும்படி யிராணுவத்தினுட சகல சறுதார்களுக்குஞ் சேனாபதிக ளுக்குங் கட்டளையிட்டிருக்கிறோம். — நாகை. குமாரசாமி, ஊர் கணக்கு.

---

***அடிக்குறிப்புகள்***

1. *ஏப்ரல்*
2. Tabellion - *பதிவு அலுவலகம்*
3. Sergent Major
4. *காப்பாளர் போன்றவர்*
5. Monsieur (Mr.) Dorwin
6. *ஜூன்*
7. *மற்ற பேர்கள்*
8. Graffier Major Petit
9. Procureur - Sergent Major
10. Tribunal
11. Procurear

# 20. அஞ்சல் உறைகள் தரும் வரலாறு

ந. வள்ளி, காரைக்குடி

வரலாற்றை அறிய உதவுகின்ற சாதனங்களுள் அஞ்சல் உறைகளுக்கும் அஞ்சல் தலைகளுக்கும் சிறந்த இடமுண்டு. அவைகள் சுவையான செய்திகள் பலவற்றையும் தருகின்றன. இங்கு இரண்டு அஞ்சல் உறைகள் தரும் செய்திகளைப் பார்ப்போம்.

ஆங்கிலேயர் ஆட்சியில் 1848 முதல் 1856 வரை டல்லௌசி பிரபு இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்தார். இவர் காலத்தில் நாட்டில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டன. இருப்புப் பாதைகள் போடப்பட்டன. தந்தி நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டன. பெரிய சாலைகள் போடப்பட்டன. கடிதப் போக்குவரத்து எளிமையாக்கப்பட்டது. அரையணா அஞ்சல் உறைகள் வழக்கத்திற்கு வந்தன.

1908, 1911-இல் அரசாங்கத்தால் வெளியிடப்பட்ட இரண்டு அஞ்சல் உறைகள் கள ஆய்வின்போது கிடைத்தன. 6.5 செ.மீ. அகலமும், 11.5 செ.மீ. நீளமும் உடைய அரையணா தபால் உறைகள் அவை. அதில் ஒன்று காரைக்குடியிலிருக்கும் முரு.லெ.சி.சொ. சொக்கலிங்கம் செட்டியார் என்பவருக்கு 1908 டிசம்பர் 28 ஆம் தேதி அனுப்பப்பட்ட கடிதம்.

இன்று நாம் கடிதம் விரைவாகச் சென்று சேரவேண்டுமென்றால் Q.M.S. என்றும் Speed Post என்றும் அஞ்சல் உறையில் எழுதி விரைவுத் தபாலை அனுப்புகிறோம். அது போல விரைவுத்தபால் மேலே குறிப்பிட்டவருக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. விரைவாக அனுப்பப்பட வேண்டும் என்பதைக் குறிக்க 'ஜரூர் ஜரூர்' என்று இரண்டு முறை எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. மேலும், இந்த அஞ்சல் உறையின் மேல் எழுதப்பட்டிருக்கும் விலாசத்தின் மூலம் காரைக்குடிப் பகுதியைச் சேர்ந்த நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தங்கள் பெயரை எழுதும் போது தங்கள் தந்தையார் பெயரின் முதலெழுத்தை மட்டுமின்றி தங்கள் முன்னோர் பெயர்களின் முதல் எழுத்துக்களையும் சேர்த்து நீண்ட விலாசமாக எழுதும் வழக்கமுடையவர்கள் என்பதும் தெரியவருகிறது.




படம் 20.1. அஞ்சல் உறைகள்

முருகப்பச் செட்டியார்

|

லெட்சுமணன் செட்டியார்

|

கிருஷ்ணன் செட்டியார்

|

சொக்கலிங்கம் செட்டியார்

என்று இக்கடிதத்தில் நான்கு தலைமுறையினரின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இதைப்பார்க்கும் போது புகளூர்க் கல்வெட்டில் இதே போல மூன்று தலைமுறையினரின் பெயர்கள் (கோ ஆதன் செல்லிரும் பொறை மகன் பெருங்கடுங்கோன் மகன் இளங்கடுங்கோன்) குறிக்கப் பட்டிருப்பது நினைவுக்கு வருகிறது. அது மட்டுமல்லாமல் நகரத்தார்கள் தங்கள் பெயரின் முதல் எழுத்தையே தங்கள் பெயருக்கு முன்னால் எழுதிக் கொள்ளும் வழக்கமுடையவர்கள் என்பதையும் இந்த அஞ்சல் உறை எடுத்துக்காட்டுகிறது.

1911-ஐச் சேர்ந்த அஞ்சல் உறையில், 'தாசி.சூரியக்கண்ணு அம்மாள் திருப்பத்தூர்' என்று முகவரி எழுதப்பட்டுள்ளது. இதில் Personal என்பதைக் குறிக்க உறையின் இடது மூலையில் 'தனது' என்ற சொல் காணப் படுகிறது.

கோயில்களில் கலைகளை வளர்ப்பதற்கும் மற்ற கோயிற் பணிகளுக்குமாக அரசர்கள் தேவரடியார்களை நியமித்திருந்ததை கல்வெட்டுகள் மூலம் நாம் அறிவோம். செட்டி நாட்டுப் பகுதிகளில் குன்றக்குடி, திருக்கோஷ்டியூர், திருப்பத்தூர், திருக்கோகர்ணம் போன்ற பழமையான கோயில்கள் உள்ள ஊர்களில் இத்தகைய தேவரடியார்கள் வாழ்ந் திருக்கிறார்கள். தமிழகக் கோயில்களில் 1950 வரை தேவரடியார்கள் என்ற தேவதாசி முறை வழக்கத்தில் இருந்திருக்கின்றது. தேவதாசி முறை ஒழிக்கப்படுவதற்கு முன்பு திருப்பத்தூரில் வசித்தவர்தான் இந்த 'தாசி சூரியக்கண்ணு அம்மாள்'.

மேலே சொன்ன இரண்டு கடிதங்களிலும் மெய்யெழுத்துக்கள் புள்ளியிடப்படாமல், இறுதியில் உள்ள மெய்யெழுத்து மட்டும் புள்ளி பெற்று காணப்படுகிறது. இரண்டு கடிதங்களிலும் தெருப்பெயர்கள் குறிப்பிடப்படவில்லை.

மற்றொரு கடிதம் சிவகங்கையிலிருந்து பதிவு அஞ்சலில் காரைக்குடியில் வசிப்பவருக்கு வந்துள்ளது. உறையின் மேல் எழுதப்பட்ட பெயர் மட்டும் நான்கு வரிகள் கொண்ட நீண்ட வாசகமாக உள்ளது.

"வன்னியன் சூரக்குடிக் கோவில் குத்தகை
தாரர்களில் ஒருவரான காரைக்குடியிலி
ருக்கும் முரு.வெ.கி. சொக்கலிங்கம்
செட்டியாருக்குக் கொடுப்பது"

என்று எழுதப்பட்டுள்ளது. கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருப்பவர், சிவ கங்கை அரசிடமிருந்து வன்னியஞ்சூரக்குடி என்ற ஊரிலுள்ள பழமை யான சிவன் கோயிலைக் குத்தகைக்கு எடுத்துத், திருப்பணி செய்த குடும்பத்தாருள் ஒருவர். இச்செய்தியை முகவரியே விளக்குகிறது. இந் தக் கடிதம் அனுப்பப்பட்டபோது அவர் காரைக்குடியில் இல்லை. பழ னியில் இருந்திருக்கிறார். கடிதம் பழனிக்கு அனுப்பப்பட்டு அங்கு அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அஞ்சல் உறையின் பின் புறம் 'இந்த லெட்டடற்தாற் பழனியில்' என்று எழுதப்பட்டுள்ளது. போக்குவ ரத்து வசதிகள் அவ்வளவாக இல்லாத அந்தக் காலத்தில் 1910 ஏப்ரல் 28 ஆம் தேதி காரைக்குடிக்கு வந்த கடிதம் ஏப்ரல் 30 ஆம் தேதியே பழனி யில் பட்டுவாடா செய்யப்பட்டுள்ளது மிக வியப்புக்குரியது.

இன்றைக்கு ஒரு நூற்றாண்டிற்கு முன்பு அஞ்சல் அலுவலகங்கள் எவ்வாறு செயல்பட்டன என்பதை இந்த அஞ்சல் உறைகள் தெரிவிப்ப தோடு, அஞ்சல் உறையின் மேல் எழுதப்பட்டுள்ள முகவரிகள் அந்தந் தப் பகுதி மக்களைப் பற்றியும் தெரிந்துகொள்ள உதவுகின்றன.

---

# 21. பூநகரியில் கிடைத்த அரிய சங்ககால நாணயங்கள்

ப. புஸ்பரட்ணம், தஞ்சாவூர்.

அண்மைக் காலத்தில் தொல்லியலாளரின் கவனத்தை ஈர்த்த ஒரு இடமாக வட இலங்கையில் உள்ள பூநகரி வட்டாரம் திகழ்கிறது. இலங்கையின் பெரு நிலப் பகுதியையும், யாழ்ப்பாணக் குடா நாட்டையும் இணைக்கும் தொடக்க வாயிலாக உள்ள இப்பகுதி தெற்கே கல்முனை தொட்டு மாதோட்டத்திற்கு வடக்கே சோழ மண்டலம் வரையுள்ள பரந்த நிலப்பரப்பை உள்ளடக்கியுள்ளது. இதன் அமைவிடம் தமிழ் நாட்டிற்கு எதிரே மிகக் கிட்டிய தூரத்தில் அமைந்திருப்பதினால், தமிழ் நாட்டில் காலத்திற்கு காலம் தோன்றிய பண்பாட்டலைகள் சம காலத்தில் இப்பகுதியிலும் செல்வாக்குச் செலுத்தின. இதைக் கட்டுரை ஆசிரியர் 1989-91 காலப் பகுதியில் மேற்கொண்ட தொல்லியல் கள ஆய்வின் போது பெறப்பட்ட சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன.[1] அவற்றுள் சங்காலப் பண்பாடு தொடர்பாகக் கிடைத்த முதுமக்கள் தாழிகள், பெருங் கற்கால மட்பாண்டங்களில் பெறப்பட்ட தமிழ் பிராமி எழுத்துக்கள், நாணயங்கள் என்பன சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. அதில் தனித்துவம் வாய்ந்ததாக கணிக்கக் கூடிய மூன்று அரிய நாணயங்கள் பற்றி ஆராய்வதே இக்கட்டுரையாகும்.

இவ்வட்டாரத்தில் உள்ள ஈழஊர், கல்முனை, வீரபாண்டியன் முனை, மண்ணித்தலை, வெட்டுக்காடு, பள்ளிக்குடா ஆகிய இடங்களில் இருந்து சங்க காலப் பாண்டியர் வெளியிட்ட நாணயங்களோடு வேறு மூன்று வகை நாணயங்கள் கிடைத்துள்ளன. அவற்றில் இடம் பெற்றுள்ள குறியீடுகள், சின்னங்கள் தமிழகத்தில் இதுவரை கிடைத்த நாணயங்களில் இருந்து சற்று வேறுபடுகின்றன. அவற்றின் விவரம் வருமாறு:

**21:1** நாணயம்: 1. (படம் 21.1.1.)

| | | |
|---|---|---|
| கிடைத்த இடம் | : | பள்ளிக்குடா, செப்பு நாணயம், நீளம்: 1.5 செ.மீ., அகலம்: 1.3 செ.மீ., எடை: 2.3 கிராம். |
| முன்புறம் | : | ஐந்து தூண்கள் தாங்கி நிற்கும் கவிழ்ந்த பிறை வடிவுள்ள கூரைக் கோயில். |
| பின்புறம் | : | மீன் குறியீட்டுச் சின்னம். |

**21:2** நாணயம்: 2. (படம் 21.1.2.)

| | | |
|---|---|---|
| கிடைத்த இடம் | : | வீர பாண்டியன் முனை, செப்பு நாணயம், நீளம்: 1.6 செ.மீ., அகலம்: 1.4 செ.மீ., எடை: 2.0 கிராம். |
| முன்புறம் | : | ஸ்ரீவத்ஸம் |
| பின்புறம் | : | மீன் குறியீட்டுச் சின்னம். |

**21:3** நாணயம்: 3. (படம் 21.1.3.)

| | | |
|---|---|---|
| கிடைத்த இடம் | : | வீர பாண்டியன் முனை, செப்பு நாணயம், நீளம்: 1.6 செ.மீ., அகலம்: 1.3 செ.மீ., எடை: 2.3 கிராம். |
| முன்புறம் | : | இடப்புறம் நோக்கிய காளை, காளையின் முகத்திற்கு கீழே கும்பம். |
| பின்புறம் | : | நடுவில் நான்கு புள்ளிகள், புள்ளிகளைச் சுற்றி சிறிய வட்டம், வட்டத்திற்கு வெளியே இரு சதுரக் கோடுகள். |

முதலிரு நாணயங்களின் பின்புறத்தில் மீன் குறியீட்டுச் சின்னம் இருப்பதினால் இவை சங்க காலப் பாண்டியரால் வெளியிடப்பட்டதாகக் கருத இடமுண்டு. ஆனால் இவற்றின் முன்புறத்தில் தனியுருவமாக கூரைக் கோயிலும் ஸ்ரீவத்ஸமும் இடம் பெற்றுள்ளன. தமிழகத்தில் கிடைத்த பாண்டிய நாணயங்களில் இச்சின்னங்கள் பிற சின்னங்களுடன் சேர்ந்து வருவதைக் காண முடிகிறது. ஆனால் எந்தவொரு நாணயத்திலும் தனியுருவமாக இடம் பெற்றிருப்பதற்கு இதுவரை தமிழகத்தில் சான்றில்லை.[2] இது இந்திய நாணயங்களுக்கும் பொருந்தும். மூன்றாவது நாணயத்தில் இடம் பெற்றுள்ள காளையுருவம் சங்க கால நாணயங்களில் பொதுவாக காணப்பட்டாலும், பாண்டியர் வெளியிட்ட நாணயங்களில் சிறப்பாகக் காணப்படுகின்றது. அண்மையில் அழகன்குள அகழாய்வில் கிடைத்த நாணயமொன்றின் முன்புறத்தில் காளையுருவம் இடம் பெற்றுள்ளது.[3] இவ்வுருவம் அப்படியே பூநகரியில் கிடைத்த நாணயங்களை ஒத்துள்ளன. ஆனால் பின்புறத்தில் பாண்டியரின் குலச் சின்னமான மீன் குறியீட்டுச் சின்னம் இடம் பெற்றுள்ளது. ஆனால் பூநகரியில் கிடைத்த நாணயங்களில் நான்கு புள்ளிகளும், புள்ளிகளைச் சுற்றி சிறிய வட்டமும், வட்டத்திற்கு வெளியே இரு சதுரக் கோடுகளும் இடம்பெற்றுள்ளன. இச்சின்னங்கள் தமிழகத்தில் கிடைத்த சங்க கால நாணயங்கள் எதிலும் காணப்படவில்லை.[4]

மேற்கூறப்பட்ட மூன்று நாணயங்களும் தமிழகத்தில் கிடைத்த நாணயங்களில் இருந்து வேறுபடுவதினால் இவற்றை தனித்துவம் வாய்ந்ததாகக் கணிக்க முடியும். இவ்வகை நாணயங்கள் பூநகரியில்




படம் 21.1. பூநகரியில் கிடைத்த சங்ககால நாணயங்கள். 1, 2, 3. நாணயங்களின் ஒளிப் படம். 1 அ. 2 அ. 3. அ நாணயங்களின் வரைபடம்

மட்டுமின்றி இலங்கையின் ஏனைய இடங்களிலும் கிடைத்ததாகத் தெரிகிறது.[5] தமிழகத்தில் பரவலாகக் கிடைத்து வரும் சங்க கால நாணயங்கள் இலங்கையில் அரிதாகவே இதுவரை கிடைத்துள்ளன. அதிலும் பாண்டிய நாணயங்களைத் தவிர பிற சங்ககால மன்னர்களின் நாணயங்கள் கிடைத்ததாகத் தெரியவில்லை. பூநகரியில் கிடைத்த நாணயங்கள் இலங்கையின் ஏனைய பகுதியில் கிடைக்கும்போது அவை தமிழ் நாட்டில் கிடைக்காமலிருப்பது வியப்புக்குரிய ஒன்றாகும். இவற்றை சங்க கால மன்னர் வெளியிட்டிருந்தால் அவை தமிழ் நாட்டில் கிடைத்திருக்க வேண்டும். அப்படியானால் இவற்றை சமகாலத்தில் இலங்கையில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர்கள் வெளியிட்டனர் எனக் கூற இடமுண்டு.

சங்க காலத் தமிழகம் மூவேந்தரினதும், குறுநில மன்னர்களதும் ஆளுகைக்கு உட்பட்டிருந்தபோது இலங்கை தமிழ், சிங்கள மன்னர்களால் மாறி மாறி ஆட்சி செய்யப்பட்டது. தமிழ் மன்னர்களைத் தமிழ் நாட்டிலிருந்து வந்த அன்னியர், ஆக்கிரமிப்பாளர் எனக் கூறும் பாளி இலக்கியங்கள் இந்நாட்டுடன் அம்மன்னர்களுக்கிருந்த உரிமையை நிராகரித்துள்ளன. ஆனால் காதலையும், வீரத்தையும் மையமாகக் கொண்டெழுந்த சங்க இலக்கியத்தில் தமிழ் நாட்டவர் இலங்கை மீது படையெடுத்தது பற்றியோ, அவர்கள் இலங்கையில் ஆட்சிபுரிந்தது பற்றியோ எந்தவிதக் குறிப்பும் காணப்படவில்லை. இலங்கையின் சமீபகால ஆய்வுகள் சங்க காலத்திற்கு முன்பிருந்தே தமிழ் நாட்டில் இருந்து புலம் பெயர்ந்த மக்கள் இங்கு வாழ்ந்ததைக் கோடிட்டுக் காட்டுகின்றன. இதனால் இலங்கையில் ஆட்சிபுரிந்த தமிழ் மன்னர்களை தமிழ் நாட்டுடன் மட்டும் தொடர்புபடுத்தாது இலங்கையுடனும் தொடர்புபடுத்திப் பார்க்க இடமுண்டு.

மேற்குறிப்பிட்ட நாணயங்களில் பின்புறத்தில் வரும் மீன் குறியீட்டுச் சின்னம் பாண்டிய வம்சத் தொடர்பைக் காட்டுகிறது. பண்டைக் காலத்தில் இலங்கை தமிழ் நாட்டின் ஏனைய பகுதிகளைவிட அருகில் உள்ள பாண்டி நாட்டுடனும், பாண்டிய வம்சத்துடனும் நெருக்கமான வரலாற்றுத் தொடர்பு கொண்டிருந்ததற்குப் போதிய சான்றுண்டு. கி.மு. 5-4 ஆம் நூற்றாண்டில் இலங்கையில் ஏற்பட்ட தென்னிந்தியக் குடியேற்றம், அரசதோற்றம், தொடக்க கால மன்னர்கள் பாண்டி நாட்டுத் தொடர்பால் ஏற்பட்டதைப் பாளி இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம்.[6] இலங்கையில் உள்ள கி.மு.3-2 ஆம் நூற்றாண்டுக்குரிய கல்வெட்டுக்கள் பாண்டிய வம்சம் பற்றியும், பாண்டியக் கிராமம் பற்றியும் கூறுகின்றன. சில கல்வெட்டுக்களில் பாண்டிய வம்சத்துடன் தொடர்புடைய பழைய, மாற போன்ற பெயர்கள் காணப்படுகின்றன.[7] இலங்கையில் கி.மு.2-ஆம் நூற்றாண்டில் பழைய மாறன், பிழைய மாறன் ஆகிய தமிழ் மன்னர் ஆட்சி புரிந்ததாக மகா வம்சம் கூறுகிறது.[8]

இச்சான்றுகள் இலங்கையில் வாழ்ந்த மக்கள் பாண்டி நாட்டுடன் கொண்டிருந்த பாரம்பரிய வரலாற்றுத் தொடர்பைக் காட்டுகின்றன. இதற்கு மேலும் முக்கிய சான்றாக தமிழ்ச் சிற்றரசு தொடர்பான கல்வெட்டுகளை எடுத்துக் காட்டலாம்.

இலங்கையின் மைய அரசாக அநுராதபுரம் விளங்கிய போது தென்னிலங்கை மகாகமை என்ற உள்ளூரைத் தலைநகராக கொண்ட சிற்றரசின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. இங்குக் காணப்படும் கி.மு. 3-2 ஆம் நூற்றாண்டுக்குரிய 16 கல்வெட்டுகள் மஜிமகாராஜா வம்சம் பற்றியும், அவன் வழிவந்த பத்து சகோதரர் ஆட்சி பற்றியும் கூறுகின்றன.[9] பாளி மொழியில் மஜிமகாராஜா என்றால் மீன் அரசன் என்பது பொருள். இதை மேலும் உறுதிப்படுத்தும் வகையில் இக்கல்வெட்டுகள் அனைத்திலும் மீன் கோட்டுருவச் சின்னம் காணப்படுகிறது.[10] இலங்கையின் புகழ்பெற்ற வரலாற்று அறிஞர்களில் ஒருவரான ஜி.சி. மெண்டிஸ் கல்வெட்டுகளிலுள்ள மீன் சின்னங்கள் ஆதி காலத்தில் இலங்கையில் குடியேறிய தமிழர்களின் வழி வந்தவர்களைக் குறிக்கிறது எனவும், இவர்கள் சிங்கள மன்னர்களுக்கு கட்டுப்படாமல் சுதந்திரமாக ஆட்சி புரிந்தனர் எனவும் கூறுகிறார்.[11] இங்குச் சிற்றரசர்களாக இருந்தவர்களே பின்னர் இலங்கை மன்னராக வந்ததை வரலாற்றில் காண்கிறோம். இதனால் பூநகரியில் கிடைத்த மீன் குறியீட்டுச் சின்னத்துடன் கூடிய நாணயத்தை பாண்டிய வம்சத் தொடர்புடைய தமிழ் மன்னர் சிற்றரசராக அல்லது இலங்கை மன்னராக இருந்த போது வெளியிட்டிருக்கலாம் எனக் கூற இடமுண்டு.

மூன்றாவது நாணயத்தில் பின்புறத்தில் உள்ள சின்னங்கள் தமிழகத்தில் கிடைத்த நாணயங்களில் காணப்படாவிட்டாலும் இலங்கையில் கிடைத்த சிங்க உருவம் பொறித்த சதுர நாணயங்களில் காணப்படுகின்றன.[12] இந்நாணயங்களை கி.பி.2-3-ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த வசபன் அல்லது மகாசேன மன்னன் வெளியிட்டிருக்கலாம் எனக் கூறப்படுகிறது. இந்நாணயத்தைக் கொண்டு மூன்றாவது நாணயத்தில் உள்ள சின்னங்களை இலங்கைக்குரிய மரபென நிச்சயப்படுத்திக் கொள்ளலாம். சிங்கள மன்னர்களின் நீண்டகால வரலாற்றில் அரச சின்னமாக சிங்கம் பயன்படுத்தப்பட்டற்குச் சான்றுண்டு. ஆனால் அவர்கள் அரச சின்னமாகவோ, புனித சின்னமாகவோ காளை உருவதத்தைப் பயன்படுத்தியதற்கு சான்றில்லை. இலங்கைத் தமிழரின் நீண்ட கால வரலாற்றில் இவ்வுருவம் புனிதச் சின்னமாகப் பயன்படுத்தியதற்குச் சான்றுண்டு. 13-ஆம் நூற்றாண்டில் வட இலங்கையில் ஆட்சி புரிந்த தமிழரசின் கொடிகளிலும், நாணயங்களிலும் காளையுருவம் அரச முத்திரையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.[13] இதனால் சிங்க உருவம் பொறித்த நாணயத்தை சிங்கள மன்னர்களும், காளையுருவம்

பொறித்த நாணயங்களைத் தமிழ் மன்னர்களும் வெளியிட்டனர் எனக் கூறலாம்.

---

## அடிக்குறிப்புகள்

1. *புஸ்பரட்ணம், ப.1993. பூநகரி - தொல்பொருளாய்வு, யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு, யாழ்ப்பாணம். பக்.11-40.*
2. *தமிழகத்தின் பல இடங்களில் இருந்து கிடைத்த சங்க கால நாணயங்களையும், சங்க கால நாணயங்கள் தொடர்பாக வெளிவந்த பல நூல்களையும் கட்டுரைகளையும் சேகரித்து வைத்திருப்பதுடன் நாணயங்கள் தொடர்பாக பல நூல்களையும், கட்டுரைகளையும் எழுதியுள்ள திரு.இரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும், திரு.ஆ. சீதாராமன் அவர்களும் உரையாடலின் போது கூறிய கருத்து.*
3. *காசிநாதன், ந.1995. தமிழர் காசு இயல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. ப.21.*
4. Krishnamoorthy, R.1997. *Sangam Age Tamil Coins*, Garnet Publication, Madras. Pts. 1-19.
5. Codrington, H.W.1924. *Ceylon Coins and Currency, Memoirs of the Colombo Museum*, Colombo. p.24.
6. Mahavamsa, Ch.VIII.
7. Paranavitana, S.1970. *Brahmi Inscriptions of Ceylon*, Department of Archaeology Ceylon, Colombo. Nos. 610, 968, 1097, 58, 159.
8. Mahavamsa, V.61.
9. Paranavitana, S., *Op.cit*, Nos.556-568.
10. *Ibid*, Plates. LIX - LXIII
11. Mendis. G.C.1957. *A Comprehensive History of India*, Vol. 11(ed) Nilakanta Sastri, K.A., p.575.
12. Codrington, H.W. *Op. cit.*
13. Pathmanathan, S.1978. *The Kingdom of Jaffna*, Colombo.

---

# 22. சம்புவராயர் நாணயம்

ப. வெங்கடேசன், பாணாவரம்.

தொண்டை நாட்டில் பல்லவப் பேரரசு வீழ்ச்சி அடைந்த பின் சோழ மன்னர்களின் கீழ் சிற்றரசர்களாக விளங்கியவர்கள் சம்புவராயர்கள். இவர்கள் கி.பி.13-ஆம் நூற்றாண்டளவில் தனியரசு நிறுவி படைவீட்டை தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டை அரசாண்டனர். இவர்கள் சோழர்களின் சிற்றரசர்களாக இருந்தபோதும், தனியரசர்களாக விளங்கியபோதும் நாணயங்களை வெளியிட்டுள்ளனர் என்பதற்கு கல்வெட்டுகள் சான்றுகளாக உள்ளன.

இவர்கள் காலத்தைச் சேர்ந்த நாணயம் ஒன்று திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் வட்டம், தித்தாண்டப்பட்டு என்னும் ஊரில் கிடைத்துள்ளது. இது செப்பு நாணயமாகும். 2.97 கிராம் எடையும், 5.3 செ.மீ. சுற்றளவும் கொண்டதாக உள்ளது. (படம் 22.1).

இந்நாணயத்தின் முன்பக்கத்தில் காளை உருவமும், இதற்கு மேல் சந்திரனும் சூரியனும் பொறிக்கப்பட்டுள்ளன. பின்பக்கத்தில் நின்ற நிலையில் மனித உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. இதில் காளை உருவம் சம்புவராயர் சின்னமாகும். நிற்கும் மனித உருவம் சோழ அரசர்களின் நாணயங்களில் இடம்பெறுவதாகும். ஒரே நாணயத்தில் சம்புவராயரின் சின்னமும் சோழர்க்குரிய நிற்கும் மனித உருவம் இடம் பெறுவதால், இது சோழரின் கீழ் சம்புவராயர்கள் அரசாட்சி செய்த போது வெளியிட்ட நாணயம்.



படம் 22.1. சம்புவராயர் நாணயம்

# 23. தென்னிந்தியக் காசுகள் - புதிய கண்டுபிடிப்புகள்

ஆறுமுக சீதாராமன், தஞ்சை.

### 1. பிற்காலச் சோழர் காசுகள்

*அ. இராஜராஜன் காசில் காரைக்கால் அம்மையார் (படம் 23.1.1)*

இராஜராஜசோழனின் (கி.பி.985-1014) அரிய செப்புக்காசு ஒன்று மயிலாடுதுறையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 4 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் மனிதன் நின்ற நிலையிலும், மனிதனின் வலதுகையின் கீழ் காரைக்கால் அம்மையார் நின்ற நிலையில், தலை முடி விரிந்த கோலத்திலும் உள்ளது. காசின் பின்பக்கத்தில் மனிதன் அமர்ந்த நிலையிலும், இடதுகையின்கீழ் ஸ்ரீராஜராஜ என்று நாகரி எழுத்திலும் உள்ளது.

*ஆ. முதலாம் இராஜேந்திரசோழன் காசு (படம் 23.1.2)*

இராஜேந்திர சோழனின் (கி.பி.1012-1044) செப்புக்காசு ஒன்று தஞ்சையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 3.5 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் மனிதன் நின்ற நிலையிலும், காசின் பின்பக்கத்தில் மனிதன் அமர்ந்த நிலையிலும், இடது கையின் கீழ் 'ராஜந்திர' என்று தமிழ், நாகரி எழுத்துக்களில் உள்ளது. 'ஜ' நாகரி எழுத்திலும் 'ந்திர' கூட்டெழுத்திலும் உள்ளது.

### 2. செஞ்சிநாயக்கர் காசு (படம் 23.1.3)

வெங்கடப்ப நாயக்கர் ஆட்சியில் (கி.பி. 1570-1600) வெளியிட்ட செப்புக்காசு ஒன்று திருவண்ணாமலையில் கிடைத்துள்ளது. காசின் எடை 1.5 கிராம். காசின் முன்பக்கத்தில் விஷ்ணு நின்ற நிலையிலும், விஷ்ணுவின் இடது கையின் கீழ் அனுமன் அமர்ந்து கொண்டு விஷ்ணுவை வணங்கும் நிலையிலும், பின்பக்கத்தில் 'வெங்கடப' என்று இரண்டு வரிகளில் தெலுங்கு, நாகரி, தமிழ் ஆகிய மூன்று மொழிகளிலும் பொறிக்கப்பட்டுள்ளது. 'வெ' எழுத்து தெலுங்கிலும், 'க, ட' எழுத்து நாகரியிலும், 'ப' எழுத்து தமிழிலும் உள்ளது. தென்னிந்தியாவில் கிடைத்த காசுகளில் செஞ்சி நாயக்கரால் வெளியிட்ட காசில் மட்டும் ஒரே பெயரில் மூன்று மொழி எழுத்துக்களையும் பொறித்து புழக்கத்தில் வெளியிட்டுள்ளனர் என்பது புலனாகிறது.




படம் 23.1. தென்னிந்தியக் காசுகள் - புதிய கண்டுபிடிப்புகள்.

### 3. தஞ்சை இரகுநாத நாயக்கர் காசுகள்

*வகை 1 (படம் 23.1.4)*

இரகுநாத நாயக்கனின் (கி.பி.1600-1634) செப்புக்காசு ஒன்று மன்னார்குடியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 3.4 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் கடவுள் அமர்ந்த நிலையிலும், பின்பக்கத்தில் '[வி]சையராயரகுனாதன்' என்று நான்கு வரிகளில் தமிழ் எழுத்தில் உள்ளது.

*வகை 2 (படம் 23.1.5)*

இரகுநாத நாயக்கனின் செப்புக்காசு ஒன்று கும்பகோணத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 2.7 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி அமர்ந்திருக்கும் காளையும், காளையின் மேலே சூரியன், சந்திரன் உள்ளது. பின்பக்கத்தில் 'ஸ்ரீரகுநாத' என்று மூன்று வரிகளில் தெலுங்கு எழுத்தில் உள்ளது.

*வகை 2 (படம் 23.1.6)*

இரகுநாத நாயக்கனின் செப்புக்காசு ஒன்று திருவையாற்றில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 3.3 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் சக்கரம் உள்ளது. பின்பக்கத்தில் 'ஸ்ரீரகுணாத' என்று இரண்டு வரிகளில் தெலுங்கு எழுத்தில் உள்ளது.

### 4. மதுரை நாயக்கர் காசுகள்

*அ. முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கர் காசு (படம் 23.1.7)*

முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கரின் (கி.பி. 1564-1572) செப்புக்காசு கரூரில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 3.2 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் பாலகிருஷ்ணன் அமர்ந்தநிலையில் உள்ளான். பின்பக்கத்தில் 'கிட்டணபநாய[க்கர்] என்று மூன்று வரிகளில் தமிழ் எழுத்தில் உள்ளது.'

*ஆ. முத்து கிருஷ்ணப்ப நாயக்கர் காசு (படம் 23.1.8)*

முத்துகிருஷ்ணப்ப நாயக்கரின் (கி.பி. 1601-1609) செப்புக் காசு ஒன்று மதுரையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 5.2 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் 'முத்து கிருஷ்ண' என்று இரண்டு வரிகளில் தெலுங்கில் உள்ளது. பின்பக்கத்தில் சங்கு, சக்கரம், கீழே 'வராஹ' என்று நாகரி எழுத்தில் உள்ளது. ஒரே காசின் இரு மொழி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளது. நாயக்கர் ஆட்சியில் செப்புக் காசிற்கும் 'வராஹ' என்று பெயர் இருந்துள்ளதை அறியலாம்.

### 5. விஜயநகர மன்னர் மூன்றாம் ஸ்ரீரங்கன் காசு *(படம் 23.2.9)*

மூன்றாம் ஸ்ரீரங்கனின் (கி.பி. 1642-1685) செப்புக்காசு ஒன்று வேலூரில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 1.9 கிராம் எடையுள்ள இக்காசின்



படம் 23.2. தென்னிந்தியக் காசுகள் - புதிய கண்டுபிடிப்புகள்

முன்பக்கத்தில் இடது பக்கம் நோக்கி நிற்கும் ஒட்டகம் உள்ளது. பின் பக்கத்தில் 'ஸ்ரீரங்க' என்று தெலுங்கு எழுத்தில் உள்ளது.

**6. மைசூர் உடையார் காசு** *(படம் 23.2.10)*

கண்டீரவ நரசராஜ உடையாரின் (கி.பி. *1638-1656*) செப்புக்காசு ஒன்று வேலூரில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. *3.2.* கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் கண்ட பேருண்ட பறவை உள்ளது. பின்பக் கத்தில் 'ஸ்ரீபட்டண' என்று தெலுங்கு எழுத்தில் உள்ளது. இந்தக் காசு ஸ்ரீரங்கபட்டணத்தில் உள்ள அக்கசாலையில் வெளியிட்டதாகக் கருத லாம்.

**7. ஆர்க்காடு நவாபு காசு** *(படம் 23.2.11)*

மாபூசுகானால் (கி.பி. *1752-1759*) வெளியிடப்பட்ட செப்புக்காசு ஒன்று திருநெல்வேலியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. *2* கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் யானையின் மேல் ஒரு குடையின் கீழ் மன்னன் அமர்ந்தநிலையிலும், பின்பக்கத்தில் 'தினவெலி' என்று மூன்று வரிகளில் தமிழ் எழுத்தில் உள்ளது. மாபூசுகான் திருநெல்வேலியில் ஆளுநராக, சுயேட்சை நிலையில் இருக்கும்போது வெளியிட்டதாகக் கருதலாம்.

**8. இராஜகோபால சக்கரப்பொன்** *(படம் 23.2.12-17)*

*தஞ்சை மாவட்டத்தில் கி.பி. 17, 18ஆம் நூற்றாண்டுகளில் இராஜகோபால சக்கரப்பொன் என்ற பொற்காசு குறிப்பிடத்தக்க காசாக புழக்கத்தில் இருந்துள்ளது. இந்தப் பொன்காசு தஞ்சை நாயக்கர் ஆட்சியிலும், மராட்டியர் ஆட்சியிலும்கூட அரசு செலாவணியிலும், பொதுமக்கள் புழக்கத்திலும் இருந்துள்ளது. ஆனால் இதுவரை இந்தக் காசை யாரும் கண்டுபிடித்த செய்தியில்லை. இதற்கு விடைகாணும் பொருட்டு அண்மையில் இராஜகோபாலன் உருவம் பொறித்த செப்புக் காசு (சக்கரம்) ஒன்று மன்னார்குடியில் கிடைத்தது. (படம் 23.2.12) காசின் எடை 1 கிராம், இந்தக் காசின் முன்பக்கத்தில் இராஜகோபாலன் கையில் செண்டும், பின்பக்கத்தில் சங்கும் உள்ளதால் இந்தக்காசை 'இராஜகோபாலச் சக்கரம்' என்று உறுதி செய்யலாம். தஞ்சை மாவட்டத்தில் பாபநாசம், கும்பகோணம், தஞ்சை, மன்னார்குடி, திருவையாறு, மயிலாடுதுறை போன்ற இடங்களில் சேகரித்த பொற்காசுகளை ஆய்வு செய்தபோது சில பொற்காசுகளில் இராஜகோபாலன் கையில் இருக்கும் செண்டைப் போலவே பொற்காசுகளில் இருந்தது தெரிந்தது. இந்த காசுகள் தூய தங்கத்திலும், (22 கிராம்) மாற்று குறைந்த தங்கத்திலும் (8 காரட்) 350 மி.கிராம் எடையில் செய்யப்பட்ட காசுகளும் இருந்தன. இந்த சிறிய காசுகளில் இராஜகோபாலனின் உருவம் பொறிப்பது மிகவும் அரிது. அதனால் இராஜகோபாலன் கையில் உள்ள செண்டையே பொற்காசுகளில் அடையாளமாக பொறித்துள்ளனர். (படம் 23.2.13-15). தூய தங்கத்தால் ஆன காசுகளை 'இராஜ கோபாலன் மாடை' (தங்கக்காசு) என்று கூறலாம் (படம் 23.2.16). பொற்காசைப் போன்றே வெள்ளியிலும் கிடைத்துள்ள காசை இராஜகோபாலி பணம் என்று கூறலாம் (படம் 23.2.17). தஞ்சை மாவட்டத்தில் இராஜகோபாலன் பொற்காசுகள் அதிகமாக கிடைக்கின்றன. வெள்ளிக்காசுகள் குறைவாகவே கிடைக்கின்றன.*

*இராஜகோபாலன் பொற்காசுகளில் முன்பக்கத்தில் தென்னிந்திய பொற்காசுகளில் காணப்படும் காளியின் உருவமே காணப்படுகிறது. பின்பக்கம் கோடுகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. காசின் விளிம்பில் இராஜகோபாலன் கையில் காணப்படும் செண்டு காணப்படுகிறது. விஜயராகவ நாயக்கர் காலத்தில் எழுதப்பெற்ற இரண்டு செப்பேடுகளிலும் தஞ்சை மராட்டியர் காலத்தில் எழுதப்பெற்ற செப்பேடுகளிலும் இராஜகோபாலச் சக்கரப் பொன் பற்றி குறிக்கப்பெற்றுள்ளது. மெக்கன்சி சுவடிகளால் இக்காசு கி.பி. 19ஆம் நூற்றாண்டிலும் புழக்கத்தில் இருந்தது என்பது அறிய முடிகிறது.*

---

# 24. ஆலக்கிராமத்து சிற்பங்கள்

முத்து எத்திராசன், சென்னை.

விழுப்புரம் மாவட்டம், திண்டிவனம் வட்டம், கூட்டேரிப்பட்டுக்கு நேர்மேற்கில் ஆலக்கிராமம் உள்ளது. ஊருக்குப் போகும்வழியில் செல்லியம்மன் கோயில், சிவன்கோயில், அய்யனார் கோயில்களும், ஊருக்கு வெளியே பெருமாள் கோயில் எதிரில் அய்யனார் சிற்பமும், ஊருக்கு நடுவில் ஆலமரத்தடியில் துர்கை சிற்பமும் உள்ளன. இவ்வூரில் பலசிற்பங்கள் காணப்பட்டாலும் மேற்குறிப்பிட்ட இடங்களில் காணக்கிடக்கும் சிற்பங்கள் மிகவும் அழகுடையனவாகவும், பழமை வாய்ந்தனவாகவும் உள்ளன.

### கௌமாரி

பிராமி, மகேசுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, சாமுண்டி ஆகியோர் சப்தமாதர்கள் ஆவார்கள். செல்லியம்மன் கோயிலில் மேற்குறிப்பிட்ட சப்தமாதர் உருவங்கள் சிறிய அளவில் காணப்படுகின்றன. அக்கோயில் கிழக்குப் பார்த்தப்படி உள்ளது. கோயிலின் இடப்புறத்தில் கௌமாரி சிலை காணப்படுகிறது. இச்சிலை 105 செ.மீ உயரமும் 46 செ.மீ. அகலமும் கொண்டு விளங்குகிறது. மிகவும் சிற்ப வேலைப்பாடுடன் காணப்படுகிறது. தலையில் அழகிய ரத்தினம் பதித்த மகுடமும் நாற்கைகளில் அக்கமாலை, அங்குசம், அபயம், வரதம் அமைந்தும் காணப்படுகிறது. இச்சிற்ப அமைப்பு பல்லவர்களின் பிற்காலத்திலும் சோழர்களின் தொடக்கத்திலும் உள்ள காலத்தில் தோன்றியதாகக் கொள்ளலாம் (படம் 24.1.1).

### திருமால்

செல்லியம்மன் கோயிலுக்கு மறுபக்கத்தில் அதாவது சாலையின் தென்புறத்தில் திருஎமகண்டீசுவரர் கோயில் உள்ளது. அக்கோயிலில் பிற்காலச் சோழர்களின் கல்வெட்டுகள் காணப்படுவதால் கி.பி.10 அல்லது பதினொன்றாம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஆனால் இதற்கு முன்னரே அங்கு திருமாலுக்குரிய கோயில் கட்டப்பட்டதற்கான அடையாளம் காணப்படுகிறது. கோயில் வளாகத்தில் சற்று கிழக்கே ஒரு பெரிய பலகைக்கல்லில் புடைப்புச் சிற்பமாக திருமால் காணப்படுகிறது. இச்சிற்பம் சமபங்கமாக நின்ற நிலையில் நான்கு கரங்களுடன் காணப்படுகிறது. மார்பில் தடித்த பூணூலும் இடையிலிருந்து கணுக்கால் வரை பீதாம்பரமும் காணப்படுகின்றன. திருமாலின் காலடியில் இடப்புறமாக ஒரு பெண்ணும் வலப்புறமாக ஓர் ஆணும்

முட்டியிட்டு அமர்ந்து கைகளில் எதையோ படையல் பொருளாக ஏந்தி வழிபாடு செய்வதாகக் காணப்படுகின்றனர். திருமாலின் தலைக்கு மேலாக இரு வெண்சாமரங்கள் காட்டப்பட்டுள்ளன. அணிமணிகளும் ஆடைகளும் நோக்க இது பல்லவர்கால அமைப்பு என்பது தெளிவாகிறது (படம் 24.1.2).

**ஆலமர்செல்வன்**

எமகண்டீசுவரரின் கோயில் தென்பக்கச் சுவரில் மிக அழகான தட்சிணாமூர்த்தியின் சிற்பம் செங்கற் சுவர்களின் இடையில் வைக்கப் பட்டுள்ளதை நோக்க கோயிலுக்கும் இதற்கும் தொடர்பில்லை என்பது தெளிவாகிறது. இச்சிற்பத்தை நோக்க அமைப்பும் வடிவமும் சோழர்களின் சிற்ப அமைப்பை மிகத் தெளிவாகக் காட்டுகிறது. அபய, வரத கரங்கள் உடைந்து காணப்பட்டாலும் சிற்பத்தின் எழில் குன்றவில்லையெனலாம் (படம் 24.1.3).

**அய்யனார் (1)**

முதலில் குறிப்பிட்ட செல்லியம்மன் கோயிலுக்குப் பின்புறம் சற்று தூரத்தில் அவ்வூர் அரிசி ஆலைக்கு வடப்புறத்தில் அய்யனார்கோயில் இடிந்து காணப்படுகிறது. இக்கோயிலில் மேற்கு நோக்கியபடி ஒரு கற் பலகையில் (38 செ.மீ. உயரம், 80 செ.மீ அகலம்) அய்யனார் புடைப்புச் சிற்பமாகக் காட்சியளிக்கின்றார். ஒரு பீடத்தின் மீது அமர்ந்தபடியும் இடக்கால் தொங்கவிட்டுக் கொண்டும் வலக்கால் பீடத்தின்மேல் மடக்கிக் குத்திட்டவாறும் காணப்படுகின்றார். தலையில் சடாமுடி சூடியுள்ளதைக் காணலாம். வலக் காது நீண்டு தோள்பட்டைமீது படும்படி காணப்படுகிறது. இடக்காது கனமான குண்டலம் அணிந்துள்ளது. தலைக்குமேல் சாமரங்களும் அதற்கு மேலே ஒரு குடையும் உள்ளன.

அய்யனாரின் இடப்புறம் ஒரு அழகிய பெண் வலக்கையில் ஒரு கலசத்தைத் தாங்கியபடியும் இடக்கை இடுப்பில் வைத்தபடியும் நின்று கொண்டிருக்கின்றாள். எதிர்ப்பக்கத்தில் குதிரைவீரன் ஒருவன் காணப் படுகின்றான். வலக்கையின் கீழே இடக்காலின் ஓரத்தில் கம்பீரமான சேவலின் உருவம் உள்ளது. பீடத்தின் வலப்பக்கத்தில் ஒரு குரங்கு தனது முன்னங்கால்களால் பிடித்துக் கொண்டுள்ள தன் குட்டியுடன் விளையாடிக் கொண்டிருக்கும் காட்சியும் காணப்படுகிறது. பீடத்தில் இடப்பக்கத்தில் ஒரு நாய் தலையை உயர்த்தி உட்கார்ந்தபடி காணப்படுகிறது. இந்நாயின் இடப்புறத்தில் குள்ள ஆண் உருவம் காணப்படுகிறது (படம் 24.1.4).

அய்யனார் உருவத்துடன் அழகிய பெண், குதிரை வீரன், குரங்குகள், நாய், சேவல், குள்ள ஆண் உருவம் ஆகியவை செதுக்கப்பட்டு காணப்படும் இச்சிற்பக்கலை இதுவரையிலும் எங்கும் காணப்படாத




படம் 24.1. ஆலக்கிராமத்துச் சிற்பங்கள். 1. கௌமாரி, 2. திருமால். 3. ஆலமர்ச்செல்வன். 4. அய்யனார்



5



6

படம் 24.2. ஆலக்கிராமத்துச் சிற்பங்கள் 5. வைணவி 6. அய்யனார்

தாகும். மேலும் இவ்வூரின் மேற்கே காணப்படும் அய்யனாரின் புடைப்புச் சிற்பத்தில் இவைகள் இல்லை எனலாம். இச்சிற்பத்தில் காட்டப்பட்டுள்ள வெண்சாமரங்கள் போன்று முன்னர் குறிப்பிட்ட திருமால் சிற்பத்தில் காணப்படுவதால் ஏறக்குறைய இவ்விரண்டு சிற்பங்களும் சமகாலத்தவையாக இருக்க வேண்டும் என்று எண்ணுவதற்கு இடமளிக்கிறது.

**வைணவி**

இச்சிற்பம் விஷ்ணுவின் சங்குசக்கரங்களைக் கொண்டு அபய வரத முத்திரைகளைக் கொண்டு காணப்படுவதால் வைணவி அதாவது விஷ்ணுதுர்க்கை என்றே துணிந்து கூறலாம். இச்சிற்பம் ஊரின் நான்கு தெருக்களும் கூடும் இடத்தில் தேநீர்க்கடையின் சுவரில் (கிழக்கு) நின்ற கோலத்தில் உள்ளது. பாதங்களின் கீழ்ப்பகுதி பூமிக்குள் புதைந்து இருப்பதால் மற்றவை பற்றி அறிய நமக்கு வாய்ப்பு இல்லை. இச்சிற்பம் மிக அழகிய வேலைப்பாடுடன் காணப்படுவதைக் கொண்டு பெரும்பாலும் சோழர்களின் கலைப்படைப்பாக இருக்க வேண்டும் என்று எண்ண வைக்கின்றது (படம் 24.2.5).

**அய்யனார் (2)**

அய்யனார் சிற்பம் ஊரைக்கடக்கும் இடத்தில் பெருமாள் கோயிலின் தென்புறத்தில் புதர்கள் மண்டிய இடத்தில் அநாதையாகக் காணப்படுகிறது. நீண்ட சதுரப் பலகைக்கல்லின் மிக அழகிய புடைப்புச் சிற்பமாக அய்யனார் காணப்படுகின்றார். அய்யனார் இடக்காலை நன்கு மடித்து அதன்மீது இடக்கையை வைத்தபடி உள்ளார். வலக் காலை சிறிதளவு மடித்து முழங்கால்மேல் வலக்கையைத் தொங்கவிட்டபடி அமர்ந்துள்ளார். அய்யனாரின் இருபுறமும் சிறிய அளவில் இரு பெண்கள் நின்றபடி உள்ளனர். அய்யனாரின் கீழ் இடப்புறத்தில் ஒரு குதிரையும் அதன் கடிவாளத்தைப் பிடித்து நிற்கும் குதிரை வீரனும் உள்ளனர். வலப்பக்கத்தில் குத்து விளக்கு, நாய் முதலியன காணப்படுகின்றன (படம் 24.2.6). முற்குறிப்பிட்ட அய்யனாரைப் போன்று சடைமுடி, இடுப்பில் கச்சை, குறுவாள் முதலிய அமைப்பைக் கொண்டு விளங்குவதால் இவ்விரண்டும் ஏறக்குறைய முன்னும் பின்னுமாக வடிக்கப்பட்ட சிற்பங்கள் என்பது தெளிவாகிறது.

---

# 25. இரு அரிய சிற்பங்கள்

கி.ஸ்ரீதரன், திருச்சிராப்பள்ளி.

**1. கீழ்வயலூர் யோகீசுவரர்** *(படம் 25.1.1).*

*திருச்சிராப்பள்ளி வயலூர் சாலையில் சோமரசம்பேட்டை அருகே பெருங்குடி (திருச்சிராப்பள்ளி வட்டம்) என்ற ஊரில் சுந்தரசோழனால் கட்டப்பட்ட கோயில் ஒன்று உள்ளது. அகத்தீசுவரர் கோயில் எனப்படும் இக்கோயிலை தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வரலாற்றுச் சின்னமாகப் பராமரித்து வருகிறது. இவ்வூருக்கு மேற்கில் கீழ்வயலூர் கிராமத்தில் வாழைத்தோப்பு ஒன்றில் யோகீசுவரர் சிற்பம் கண்டறியப்பட்டது. ஏழு கன்னியர்கள் எனப்படும் சப்தமாதர் சிற்பங்களுடன் யோகீசுவரர் என்ற சிவபெருமானின் உருவமும் வழிபடப் பெறுகிறது. காதுகளில் பத்ர, மகர குண்டலங்கள் அணிந்தும், ஜடாபாரம் எனப்படும் தலை அலங்காரத்துடன் இடது காலை குத்திட்டு வலது காலை தொங்கவிட்டு அமர்ந்திருக்கிறார். இடதுகரம் குத்திட்டு அமர்ந்த காலின் மீது தொங்கும் நிலையில் வைத்தும், வலது கரம் வலது தொடையின் மீது ஊன்றிய நிலையிலும் காணப்படுகிறது. இதன் காலம் சுமார் கி.பி. 9ம் நூற்றாண்டு[1]*

**2. நங்கவரம் சமண தீர்த்தங்கரர்** *(படம் 25.1.2).*

*திருச்சிராப்பள்ளியிலிருந்து மேற்கே 20 கி.மீ. தொலைவில் நங்கவரம் (குளித்தலை வட்டம்) என்ற ஊர் அமைந்துள்ளது. கல்வெட்டுகளில் நங்கைபிரமதேயமான அறிஞ்சிகை சதுர்வேதி மங்கலம் என இவ்வூர் குறிக்கப்படுகிறது. இவ்வூரிலுள்ள சுந்தரேசுவரர் கோயில், கல்வெட்டுகளில் மறவனீசுவரத்து பெருமாள் கோயில் என அழைக்கப்படுகிறது. செம்பியன் இருக்குவேள் என்பவன் இக்கோயிலுக்கு பல தானங்களை அளித்திருக்கிறான். இவ்வூரிலுள்ள பிடாரி கோயில் பிடாரியார், சாத்தனூர் நங்கை என்று அழைக்கப்படுகிறார். சுந்தரேசுவரர் கோயிலில் சுமார் 10-11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தீர்த்தங்கரர் சிற்பம் வழிபாட்டில் உள்ளது.[2] இச்சிற்பத்தில் 24 தீர்த்தங்கரர்களும் காட்டப்பட்டுள்ளனர்.[3] இச்சிற்பத்தில் முதல் வரிசையில் மூவரும் 2, 3வது வரிசைகளில் ஐந்துபேரும்; 4, 5வது வரிசைகளில் நால்வரும், 6வது வரிசையில் இருவரும் சிறிய அளவில் தீர்த்தங்கரர்கள் காட்டப்பட்டுள்ளனர். 24வது தீர்த்தங்கரராகிய மகாவீரர் நடுவில் பெரிய அளவில் காட்டப்பட்டுள்ளது சிறப்பாகும். மகாவீரர் தலைக்கு மேல் முக்குடை காட்டப்பட்டுள்ளது. இருபுறமும் இயக்கர்கள் உள்ளனர். அமர்ந்திருக்*



1



2

படம் 25.1. இரு அரிய சிற்பங்கள். 1. யோகீசுவரர் சிற்பம், கீழ்வயலூர், 2. தீர்த்தங்கரர் சிற்பம், நங்கவரம்

கும் பீடத்தின் கீழே சிம்மங்களும் காணப்படுகினறன. இச்சிற்பத்தின் உயரம் 35 செ.மீ., அகலம் 22 செ.மீ .

---

குறிப்புகள்

1. இச்சிற்பம் பற்றி தகவல் தந்தவர்கள்: மாணவர் இளமாறன், ஆசிரியர் தமிழ கன், அரசுமேல்நிலைப்பள்ளி சோமரசம்பேட்டை. புதைந்து கிடந்த சிற் பத்தை அகழ்ந்தெடுத்து ஆய்வு செய்ய உதவியவர்கள் ஸ்தபதி வே. இராமன், எஸ். நடராசன், தொல்பொருள் ஆய்வுத்துறை, திருச்சி.
2. ஆய்வின் போது உதவிய ப. இராசமோகன், காப்பாட்சியர், அரசு அருங்காட் சியகம், திருச்சி மற்றும் கோயில் செயல் அலுவலர் திரு. இராமனாதன் பிள்ளை அவர்களுக்கு நன்றி.
3. ஆதிநாதர், அஜிதநாதர், சம்பவநாதர், அபிந்தானர், சுமதிநாதர், பத்மபிரபர், சுபார்சுவநாதர், சந்திரபிரபா, புஷ்பநாதர், சீதளநாதர், ச்ரேயம்நாதர், வாசுபூஜ் யர், விமலநாதர், அனந்தநாதர், தர்மநாதர், சாந்திநாதர், குந்துநாதர், அரநாதர், மல்லிநாதர், முனீசுவரர், நமிநாதர், நேமிநாதர், பார்சுவநாதர், மகாவீரர்.

---

# 26. படவேட்டுச் செப்புத் திருமேனிகளும், அணிகலன்களும்

நடன. காசிநாதன், சென்னை.

திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டம், படவேடு, கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் சம்புவராய மன்னர்களின் கோட்டை கொத்தளங்களுடைய தலைநகரமாகப் பொலிவும், வலிவும் பெற்று விளங்கியது. இந்நகரின் முக்கிய கோயிலாகவும், சம்புவராய மன்னர்களின் குலதெய்வம் குடிகொண்டிருக்கும் இடமாகவும் அமைந்தது அம்மையப்பீசுவரம். இவ்வூரில் சோமநாத ஈச்சுரம் என்னும் கோயிலும் இருந்திருக்கிறது. தற்போது ரேணுகாம்பாள் என்னும் கோயில் மிகவும் செல்வாக்கு பெற்று வழிபாட்டில் இருந்து வருகிறது.

அம்மையப்பீசுவரம், இராஜகம்பீரச் சம்புவராயன் காலத்தில், அதாவது கி.பி. 1257ல் படைவீட்டில் இருந்திருக்கிறது.[1] இக்கோயிலைக் கட்டிய விவரம் தெரியவில்லை. ஆனாலும் இரசகம்பீரச் சம்புவராயன் இக்கோயிலுக்கு நிலக்கொடை அளித்திருப்பது இக்கோயிலில் பொறிக்கப்பெற்றிருந்த கல்வெட்டுகளினால் புலனாகிறது.[2] இராசகம்பீரச் சம்புவராயனின் பட்டத்தரசி ஆராயும் பெருமாள் இக்கோயிலுக்கு கி.பி.1268ல் விநாயகர் செப்புத் திருமேனியை எழுந்தருளிவித்திருக்கிறார்.[3]

ரேணுகாம்பாள் வழிபாடு படைவீட்டில் புகழ் பெறத் தொடங்கியதும் அம்மையப்பீசுவரர் கோயில், மக்கள் வருகை குன்றி செல்வாக்கு இழந்து போய் விட்டது. இத்தருணத்தில் வேலூர் மாவட்டம் ஆரணியைச் சார்ந்த பெருநிலக்கிழார் ஒருவர் படைவீட்டு அம்மையப்பீசுவரர் கோயிலைப் பிரித்து எடுத்து வந்து தம்மூர் சைதாப்பேட்டைக் குளத்து மேட்டில் கங்கையம்மன் கோயில் என்ற பெயரில் புதிய கோயிலாக எடுப்பித்துள்ளார்[4]. ஆனாலும் அம்மையப்பீசுவரர் கோயிலில் கல்வெட்டுக்கள் எந்த அமைப்பில் வெட்டப்பட்டிருந்தனவோ அதே அமைப்பில் சிறிதும் மாறாமல் கங்கையம்மன் கோயிலிலும் காணப்படுகின்றன.

அம்மையப்பீசுவரர் கோயில் அமைந்திருந்த இடத்தில் மீண்டும் கோயில் அமைக்கச் சென்னை வேணுகோபாலசுவாமி அறங்காவல் குழு அடித்தளக்குழி தோண்டுகையில் இருமுறை செப்புத் திருமேனிகளும், அணிகலன்களும் குவியலாகக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. முதன்முறை சிறு சிறு திருமேனிகளும் குறைந்த அளவில் ஆபரணங்க

ளும் கிடைத்தன. இரண்டாம் முறை கிடைத்த குவியலில் சில திருமேனிகளும் பரிகலன்களும், எறிமணியும், விளக்குத்தண்டும் மற்றும் எழில் வாய்ந்த அணிகலன்களும் அடங்கும்.

சுப்பிரமண்யர், விநாயகர் (சிறியது), திருவாசியுடன் கூடிய சுப்பிரமண்யர், யோகேஸ்வரி, விநாயகர் (சற்றுப் பெரியது) அமர்ந்த நிலையிலுள்ள தேவி, சிறிய நந்தி, சற்று பெரிய நந்தி, பைரவர், விநாயகர், ஒட்டிக் கொண்டிருக்கும் தட்சிணாமூர்த்தி (விநாயகர் முக்காலியுடன்) ஆகிய திருவுருவங்களுடன் எறிமணி, தூபக்கால், விளக்குத்தண்டு, கலசத்தண்டு, மணியின் கைப்பிடி ஆகிய மற்ற செப்புப் பொருட்களும் குறிப்பிடத்தக்கவை. ஒரு சுப்பிரமண்யர் மயில் வாகனத்தில் அமர்ந்த நிலையில் திருவாசி இல்லாமலும், மற்றொரு சுப்பிரமண்யர், திருவாசியோடு மயில் வாகனத்தில் அமர்ந்த நிலையிலும் உள்ளனர். பைரவர் நின்ற நிலையில் பின்புறம் நாய் உருவோடு காணப்படுகிறார். பெரிய விநாயகர் வலக்காலைக் குத்திட்டு வைத்து, இடக்காலை மடக்கி வைத்து அமர்ந்த நிலையில் நான்கு கரங்களுடனும், மற்றொரு விநாயகர் உச்சிஷ்ட கணபதியாக, இடப்பக்கம் தேவியைத் தம் இடது தொடை மீது அமர்த்திய நிலையில் காட்சி தருகிறார். மற்றொரு சிறிய விநாயகரும் அமர்ந்த நிலையில் உள்ளார். தட்சிணாமூர்த்தி (முக்காலி மற்றும் விநாயகர் உருவங்களோடு ஒட்டிக் கொண்டிருப்பது) வலக்காலைத் தொங்கவிட்டு, இடக்காலை மடக்கி அமர்ந்த நிலையில் மேலிரு கரங்களில் மழுவையும், மலரையும் கீழிரு கரங்களில் அபயம் மற்றும் லோல முத்திரை காட்டியும் உள்ளார். இரு கால்களையும் மடக்கி வைத்து அமர்ந்த நிலையில் உள்ள யோகேசுவரியாகவும்; சோமாசுகந்தர் தேவியாக அமர்ந்த நிலையில் உள்ள உமாவாகவும் மற்றும் அமர்ந்த நிலை தேவியாகவும் மூன்று தேவியர் உருவங்கள் காணப்படுகின்றன.

மேலே கூறப்பட்டுள்ள அனைத்துச் செப்புத் திருமேனிகளும் கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். இவைகளின் அளவு (சென்டிமீட்டரில்) கீழ்க்காணுமாறு:

| | | உயரம் | அகலம் |
|---|---|---|---|
| 1. | மயில் வாகனத்தில் சுப்பிரமண்யர் | 7 | 6 |
| 2. | திருவாசியுடன் கூடிய சுப்பிரமண்யர் | 10 | 8 |
| 3. | உச்சிஷ்ட விநாயகர் | 6 | 6 |
| 4. | யோகேசுவரி | 6 | 2 |
| 5. | விநாயகர் (பெரியது) | 7 | 4 |
| 6. | அமர்ந்த நிலை தேவி (சிறியது) | 5 | 2 |
| 7. | பைரவர் | 7 | 3.5 |
| 8. | விநாயகர் | 5 | 3.5 |



1



2



3



4

படம் 26.1. படவேட்டில் கிடைத்த தொல்பொருள்கள். 1. அமர்ந்த நிலையிலுள்ள தேவி. 2. மயில்மீதமர்ந்த முருகன். 3. கடகம் 4. இராமர் பட்டாபிஷேகம் பொறித்த பதக்கம்.

| | | உயரம் | அகலம் |
|---|---|---|---|
| 9. | தட்சிணாமூர்த்தி | 6.5 | 3 |
| 10. | உமா (சோமாஸ்கந்தர் குழு) | 5 | 1.5 |
| 11. | பெரிய நந்தி | 5 | 3 |
| 12. | சிறிய நந்தி | 4.5 | 2 |

| | | உயரம் | விட்டம் | நீளம் |
|---|---|---|---|---|
| 13. | எறிமணி | | 11.5 | 22 |
| 14 | பெரிய முக்காலி (ஒருகால் உடைந்துள்ளது) | 9.5 | 8 | - |
| 15. | சிறிய முக்காலி (ஒரு கால் உடைந்துள்ளது) | 6.5 | 5 | - |
| 16. | தூபக்கால் | | - | 21 |
| 17. | விளக்குத்தண்டு | 30 | | |
| 18. | கலசத்தண்டு (நான்கு துண்டுகளாக உடைந்துள்ளது) | | - | 25.5 |
| 19. | மணியின் கைப்பிடி (உடைந்துள்ளது.) | 7.5 | - | - |

சில ஆண்டுகளுக்கு முன்பு, இவ்வூர் பெருமாள் கோயிலின் பாது காப்பு அறையிலிருந்து கண்டெடுத்ததாகப் படைவீட்டு ரேணுகாம்பாள் கோயிலில் கீழ்க்காணும் செப்புத் திருமேனிகள் வைத்துப் பாதுகாக்கப் படுகின்றன.

| | | உயரம் | அகலம் |
|---|---|---|---|
| 1. | அம்மன் முவ்வளைவுகளில் (த்ரிபங்கத்தில்) நின்ற கோலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டு | 44 | 10 |
| 2. | தனி அம்மன் முவ்வளைவுகளில் (த்ரிபங்கமாக) நின்ற நிலை கி.பி.10, 11 ஆம் நூற்றாண்டு | 59 | 12.5 |
| 3. | சோமாஸ்கந்தர், சிவன், உமை ஒரே பீடத்தில் அமர்ந்த நிலை, கந்தருக்கு இடம் உள்ளது; உருவம் இல்லை. கி.பி. 10-11 ஆம் நூற்றாண்டு | | |
| | சிவன் | 49 | 17 |
| | உமை | 42 | 11 |

தனி அம்மன் மற்றும் சோமாஸ்கந்தர் திருமேனிகள் சோழர் காலத்தில் இங்கு அமைக்கப் பெற்றிருந்த கோயிலைச் சார்ந்தனவாக இருக்கலாம். அக்கோயில் இவ்வூரில் எந்த இடத்தில் அமைந்திருந்தது என்பது தெரியவில்லை.

அம்மையப்பீசுவரர் கோயில் அடித்தளக் குழி தோண்டுகையில் கிடைத்த அணிமணிகள் தற்போது போளூர் வட்டாட்சியர் கருவூலத்தில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அவற்றை இக்கட்டுரையாசிரியர் ஆய்வு செய்த போது கீழ்க்காணும் அணிமணிகள் கண்டறியப்பட்டன.[5] இவை பற்றிய பட்டியல் அரசிதழிலும் வெளிவந்திருக்கிறது.[6] இவ்வணிமணிகள் சோழர் காலத்தில் கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகின்ற அணிமணிகளோடு ஒப்பிட்டு ஆராயத்தக்கவை. சோழர் கால முடிவுக்குப் பின்னர் தலையெடுத்த சம்புவராய மன்னர்களும் சோழர் காலக் கலைப்பாணியை அணிகலன்கள் செய்வதிலும் கையாண்டிருக்கிறார்கள் என்பது இவை மூலம் தெரிய வருகிறது.

பொன்னால் செய்யப் பெற்ற கிரீடம், கடகம், கால்தண்டை, சங்கிலி, சங்கு, சக்கரம், அபயஹஸ்தம், தங்க ஒட்டியாணம், தங்கநாக பொட்டு, மாற்றுக் குறைந்த பொன்னால் உருவாக்கப் பெற்ற பொன்சரடு, கைக்காப்பு, காதணி, நெல்லிக்காய் மணிகள், வெள்ளி திருமண், தாலிகுண்டு, புல்லாக்கு, பொட்டு, காதணி, கண்மலர், ஒட்டியாணம்; நற்பவளங்கள் உருண்டை, சன்ன முத்துக்கள், அகல மோதிரம், கூட்டு மோதிரம், குண்டு மோதிரம், செம்புக்கல் பதித்த இராமர் பட்டாபிஷேகப் பதக்கம் (16 குச்சக் கம்புகள் மற்றும் 16 பலச்ச வைரம் பதிக்கப் பெற்றது) ஆகிய அணிகலன்கள் வியந்து பாராட்டத் தக்கவை.

மேற்காணும் திருமேனிகள் மற்றும் அணிகள் போன்று தமிழகத்தின் முக்கிய ஊர்களின் கோயில்களில் சம்புவராயர் காலத்தில் இருந்திருக்கலாம் என்று ஊகிக்க இடமேற்படுகிறது. இவை மன்னர் குடும்பத்தினர், உயர் அதிகாரிகள் குடும்பத்தினர் மற்றும் சாதாரண பொதுமக்கள் ஆகியோரால் அளிக்கப் பெற்றவையாக இருக்கலாம். இவ்வாறு கொடை அளிக்கின்ற அளவுக்கு மக்கள் செல்வச் செழிப்புடனும், இறை அன்போடும், கலை உணர்வோடும் தொழில் நுட்பத்தோடும் சம்புவராய மன்னர்கள் காலத்திலும் வாழ்ந்திருக்கின்றனர் என்பதை நம்மால் உணர முடிகிறது.

---

**அடிக்குறிப்புகள்**

1. தெஇக. 1, எண்.78-80.
2. மேலது எண் 78, கோ. தங்கவேலு, இல.தியாகராசன், சம்புவராயர் வரலாறு, பக்கம் 327 330.
3. மேலது, பக்கம் 330.

4. மேலது, பக்கம் 327. அடிக்குறிப்பு. இக்கட்டுரை ஆசிரியராலும் நேரிடையாகப் பார்வையிடப் பட்டது.

5. இக்கட்டுரை ஆசிரியர் ஆய்வு செய்தபோது தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை, ஆர்க்காடு காப்பாட்சியர் திரு.து.துளசிராமன், சென்னை பதிவு அலுவலர் திரு. மா சந்திரமூர்த்தி, நிழற்படக் கலைஞர் திரு. ஸ்ரீதரன், போளூர் வட்டாட்சியர், கருவூல அலுவலர், ஸ்ரீவேணுகோபாலசுவாமி டிரஸ்ட்டைச் சேர்ந்த திரு. சேகர், ரேணுகாம்பாள் கோயில், செயல் அலுவலர், அறங்காவலர் ஆகியோர் உடன் இருந்தனர்.

6. திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்ட அரசிதழ், ஜுலை 7, 1995 (யுவ, திருவள்ளுவர் ஆண்டு 2026 வைகாசி 24) எண். 6.

---

# 27. பெருங்காஞ்சி புடைப்புச் சிற்பத்தொடர்

கோ. திருமூர்த்தி, சென்னை.

பெருங்காஞ்சி என்னும் ஊர் வேலூர் மாவட்டம் வாலாஜா வட்டத்தில் வாலாஜா-சோளிங்கர் வழியில் 16 கி.மீ தொலைவில் உள்ளது. சங்க இலக்கியத்தின் புறம் பற்றிய செய்திகளைச் சொல்லும் புறத்துறை என்ற பொருள் பெருங்காஞ்சி என்னும் பெயரில் பொதிந்துள்ளதால் இவ்வூர் மிகப்பழமையானதாகத் தெரிகின்றது.[1] கடமூர் கோட்டத்தில் சோழர்குலசுந்தரி சதுர்வேதிமங்கலம் என்ற பெயருடன் சிறப்பான நிலையினை பெற்ற தனியூராக ஜெயங்கொண்ட சோழ மண்டலத்தின் ஒருகைவல்ல நாட்டில் இவ்வூர் விளங்கியது.[2]. இவ்வூரில் உள்ள பல்லவர் காலத்திய எழில் கொஞ்சும் தாய்மார் எழுவர் சிற்பங்களும், சோழர் காலத்திய சிவன் கோயிலும் இவ்வூரின் தொன்மைக்கு எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றன.

இவ்வூரில் உள்ள அகஸ்தீஸ்வரசாமி என்னும் சிவன் கோயில் முற்கால சோழர் காலத்தியதாகும். முதலாம் பராந்தக சோழன் (கி.பி. 948) கல்வெட்டு உட்பட மொத்தம் ஏழு சோழர் காலத்திய கல்வெட்டுகள் இக்கோயிலில் உள்ளன. கருவறை, அர்த்த மண்டபம், முக மண்டபம், பிற்காலத்திய மகாமண்டபம், பரிவார தேவதைகள் சன்னதிகள் போன்றவற்றைக் கொண்டிருக்கும் இக்கோயில் முறையற்ற செப்பனிடும் பணியினால் பழம் பொலிவை இழந்து நிற்கிறது.

இக்கோயிலில் அண்மையில் மேற் கொள்ளப்பட்ட ஆய்வின் போது முகமண்டபத்தில் தட்சிணாமூர்த்தி சிற்பத்தின் பீடத்தில் வைக்கப்பட்டுள்ள மிகச் சிறிய புடைப்புச்சிற்பம் ஒன்று இக்கட்டுரை ஆசிரியரால் கண்டறியப்பட்டது.

சுமார் $30 \times 20$ செ.மீ. அளவுடைய சிறிய கருங்கல் பலகையில் ஆறு உருங்கள் வரிசையாக வடிக்கப்பட்டுள்ளன. தொடர்ந்து மேற் கொள்ளப்பட்டு வரும் எண்ணெய்ப் பூச்சு போன்றவற்றினால் இச்சிற்பத்தின் மீது அடர்த்தியான கருப்புப் படலம் ஏற்பட்டுள்ளது. இதனால் இவ்வுருவங்களை பற்றி முழுமையாக அறிய இயலவில்லை. எனினும் சிற்ப வரிசையின் ஐந்தாவதாக கணபதி மற்றும் ஆறாவதாக ஜேஷ்டதேவி என்று அறிய முடிகிறது. கணபதி உயர்ந்த தாமரை பீடத்தின் மீது அமர்ந்துள்ளார். ஜேஷ்ட தேவி வழக்கமான அமர்ந்த நிலையில் காளை முகத்துடன் கூடிய மாந்தன் மற்றும் மாந்தி புடைசூழ காணப்படுகி

றார். முதலில் காணப்படும் மூன்று உருவங்கள் நின்ற நிலையில் அஞ்சலி முத்திரையுடன் இருப்பதால் அவற்றை சிற்பத்தை வடிக்க உதவிய கொடையாளர்கள் என்று கண்டு கொள்ளலாம். இச்சிற்பம் மஞ்சள் குங்குமத்துடன் காணப்படுவதால், தொடர்ந்து வழிபாட்டில் இருந்து வருகின்றது என்பது தெளிவாகிறது.

தமிழ்நாட்டில் இது போன்ற புடைப்புச் சிற்பங்கள் முன்னூர், மணிமங்கலம், மதுராந்தகம், பிரம்மதேசம் போன்ற இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றின் அடிப்படையில் பெருங்காஞ்சி சிற்பத்தின் காலத்தை கி.பி. 6-7 ஆம் நூற்றாண்டு என கணிக்கலாம். இச்சிற்பங்களில் உள்ள கடவுளர்கள்தான் இடத்துக்கு இடம் வேறுபடுகின்றனர்.

பெருங்காஞ்சியில் உள்ள புடைப்புச் சிற்பத்தில் கணபதியும், ஜேஷ்ட தேவியும் மட்டுமே காணப்படுகின்றனர். இது இவ்விரு கடவுளர்களுக்கு இப்பகுதியில் தரப்பட்டிருந்த முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. மேற்கண்ட இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள சிற்பங்களின் வரிசையில் பெருங்காஞ்சி சிற்பமும் இந்து சமயத்தின் ஆரம்ப கால வழிபாட்டினை எடுத்துக்காட்டும் சான்றுகளில் ஒன்றாகத் திகழ்கிறது.[4]

---

**அடிக்குறிப்புகள்**

1. *தமிழ் அகராதி, 5, ப. 2871*
2. *இக., 1941 எண். 16-23*
3. இவ்வரிய பல்லவர் காலத்து தாய்மார் எழுவர் சிற்பங்கள், தமிழக அரசு தொல் பொருள் ஆய்வுத்துறையினரின் பாதுகாப்பில் உள்ளது.
4. Sarma. I.K, *The Development of Early Saiva Art and Architecture*, Delhi, 1982. p.158.

# 28. தொண்டை மண்டலத்துக் கோழிக் கற்கள்: மீளாய்வு

**ஐராவதம் மகாதேவன், சென்னை.**

*முந்தைய ஆவணம் இதழில் (இதழ் 8, ஜூலை 1997) மேற்படித் தலைப்புடன் வெளியான என் கட்டுரையில் 'அரசலாபுரம் கோழிக் கல்' என்ற பகுதியில் (பக்.12) அக் கல்வெட்டின் வாசகத்தைக் கீழே உள்ளவாறு தந்திருந்தேன்.*

*1. முகையுரு மெற்[ செ]ச*
*2. ரிடுயாடிக்க*
*3. ருகிய கொழி*

*இக் கல்வெட்டை மீண்டும் நேரடியாக ஆய்வு செய்து புதிதாக மசிப்படிகளை எடுத்த தமிழறிஞர் கொடுமுடி சண்முகனாரும், கல் வெட்டாய்வாளர்கள் வீரராகவன், மங்கைராகவன் ஆகியோரும் இரண் டாவது வரியின் இரண்டாவது எழுத்தைக் 'கு' என்றே வாசிக்க வேண்டும் என்று எனக்குத் தெரிவித்தனர். அவர்களுக்கு என் நன்றி. நானும் என் உதவியாளர் திருமதி. லக்ஷ்மியும் விழுப்புரத்திற்கு 1998 பிப்ரவரி முதல் தேதி அதிகாலையிலேயே மீண்டும் ஒரு முறை சென்று, சாய்ந்துவிழும் சூரிய ஒளியில் அக்கல்வெட்டைக் கூர்ந்து கவ னித்துப் பார்த்ததில் இவ்வெழுத்து கு என்றே உறுதியாகத் தெரியவந் தது. எழுத்து மிகவும் தேய்ந்து இருப்பதாலும் அதன் அடிப்பகுதி சிதைந்துள்ளதாலும், நானும், எனக்கு முன் இக் கல்வெட்டைப் படித்த ஆய்வாளர்களும் இதை டு என்று மாற்றிப் படிக்க நேர்ந்துவிட்டது. சென்ற இதழில் அச்சாகியுள்ள மசிப்படத்தை மீண்டும் கவனமாகப் பார்த்ததில் அதிலும் கு என்ற எழுத்தைக் காணமுடிகிறது. கல்வெட் டின் திருத்திய வாசகம் வருமாறு:*

முகையூர் மேற்சேரி[க்]கு ஆடிக் கரு[க்]கிய கோழி

என்பதாகும். 'சேரிக்கு' என்பது பேச்சுவழக்கில் 'சேரிக்கி' என்றாகி, அடுத்த சொல்லான 'ஆடி'க்கு முன் யகர உடம்படுமெய் சேர்த்து எழு தப்பட்டது போலும். மற்றபடி கல்வெட்டின் பொருளில் மாற்றம் எது வும் இல்லை.

# 29. புதிய வெளியீடுகள்

29:1 Osmund Bopearachchi and D.P.M. Weerakkody, *Origin, Evolution and Circulation of Foreign Coins in the Indian Ocean*, Manohar Publishers and Distributors, New Delhi, 1998, pp.272.

இலங்கை நாணயவியல் கழகமும், கொழும்பு தேசிய அருங்காட்சியகமும் இணைந்து 1993 சூலை 20-22ல் நடத்திய நாணயவியல் செயலரங்கில் அளித்த சிறந்த கட்டுரைகளையும், இலங்கை நாணயவியல் கழகமும், இலங்கை-பிரான்சு நாட்டு தொல்லியல் கட்டுரை தூதுக்குழுவும், இலங்கை தொல்பொருள் ஆய்வுத்துறையும் இணைந்து 1994 செப்டம்பர் 8-10ல் 'இலங்கையில் வெளிநாட்டு காசுகள் மற்றும் இந்துமாக்கடலில் பண்டை கடல் வழிகள்' என்ற தலைப்பில் நடத்திய பன்னாட்டு கருத்தரங்கில் அளித்த கட்டுரைகளையும் உள்ளடக்கிய கட்டுரைத் தொகுப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது. ஆன்ட்ரூ பர்னெட்டும் சி.கிரான்ட் ஜானும் எழுதிய முதல் இரு கட்டுரைகளில் நாணயத்தின் தோற்றத்தையும், வளர்ச்சியையும் குறிப்பிட்டு நாணயம் எந்தச் சூழ்நிலையில் மேற்கு ஆசியாமைனரில் தோன்றியது என்பதையும் கிரேக்க நாணயத்தின் பன்முக வளர்ச்சி எங்ஙனம் ரோம நாணயத்தின் எழுச்சியில் முழுமை பெற்றது என்பதையும் தெளிவுபடுத்தியுள்ளனர். பிரான்காய்ஸ் தியரி சீன நாணயத்தைப் பற்றி மூன்று கட்டுரைகள் வரைந்துள்ளார். தமது முதல் கட்டுரையில் சீன நாணயத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் குறிப்பிடும் பொழுது சோழிகள் கி.மு.16ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு கொடையாகவும் பின்னர் நாணயமாகவும் விளங்கி வந்துள்ளதைக் குறிப்பிட்டுள்ளார். இரண்டாவது கட்டுரையில் இலங்கையில் யபுவா என்ற இடத்தில் கிடைக்கப்பெற்று தற்பொழுது அநுராதபுர அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டுவரும் சீன நாணயங்களைப் பற்றியும், மூன்றாவது கட்டுரையில் சீன நாணயப் புதையல் அடிப்படையில் கடல்வழி வணிகம் பற்றியும் ஆய்வு செய்துள்ளார். வெனிதியா போர்டர் தமது முதல் கட்டுரையில் இசுலாமிய காசுகளைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். எச். கிவிட் தமது முதல் கட்டுரையில் காகித பணத்தின் தோற்றத்தையும் இரண்டாவது கட்டுரையில் பெண்கள் எங்ஙனம் செல்வத்தின் அறிகுறியாக பயன்படுத்தப்பட்டனர் என்பதையும் விளக்கியுள்ளார். மூன்றாவது கட்டுரையில் இங்கிலாந்தில் அச்சிடப்பட்டு இலங்கையில் வெளிவந்த காகிதப் பணத்தைப் பற்றி விவரித்துள்ளார். பி.ஜே. குக் தமது முதல் கட்டுரையில் காசுகள் எங்ஙனம் பதக்கங்களாக பயன்படுத்தப்பட்டன

என்பதையும் இரண்டாவதில் புதையல்களை ஒழுங்குபடுத்தவும் ஒருங்கிணைப்பு செய்யவும் இங்கிலாந்து நாட்டில் உருவாக்கப்பட்ட சட்ட வடிவங்களைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

மூன்றாவது கட்டுரையில் இலங்கையில் புழக்கத்தில் இருந்த ஐரோப்பிய நாணயங்களைப் பற்றி ஆய்வு செய்துள்ளார். இந்நூலின் பதிப்பாசிரியரான ஒசுமண்ட் போப்பியராச்சி தமது கட்டுரையில் இலங்கை நாட்டிற்கும் மேலை நாட்டிற்கும் இடையே நடைபெற்ற கடல்வழி வாணிகத்தை இலக்கியம், கல்வெட்டு, தொல்லியல் மற்றும் வெளிநாட்டவர் குறிப்புகள் மூலம் திறம்பட விவரித்துள்ளார். இலங்கையிலும் இந்தியாவிலும் இதுவரை கிடைத்துள்ள ரோம நாணயங்களின் அடிப்படையில் ஆராயப்படும் ஆய்வுகளில் காணப்படும் குறைபாடுகளை ஆண்ட்ரூ பர்னெட் தமது கட்டுரையில் சுட்டிக்காட்டியுள்ளார். எனவே, இந்நூல் நாணயத்தின் தோற்றம், வளர்ச்சி மற்றும் அதன் பன்முக தாக்கத்தைப்பற்றி அறிந்துகொள்ள பெரிதும் உதவும் எனலாம்.

**கா. ராஜன்.**

29:2 S. Swaminathan, *The Early Cholas-History, Art and Culture*, Sharada Publishing House, Delhi, 1998, pp.240.

பல தத்துவங்கள் அடிப்படையில் வரலாற்றினை ஆய்வு செய்துவரும் காலகட்டத்தில் வட்டார அடிப்படையிலும், வம்சாவழி அடிப்படையிலும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பதை உணர்த்தும் வகையில் சோழப் பேரரசின் வளர்ச்சிக்கு வித்திட்ட முதலாம் பராந்தக சோழன் காலத்தில் ஏற்பட்ட அரசியல், பொருளாதார, சமூக, சமய வளர்ச்சியை நிரல்பட இந்நூல் எடுத்துரைக்கிறது. இதற்கு முன்பும் பின்பும் நடந்த சமூக மாற்றங்களும் ஆங்காங்குச் சுட்டப்படுகின்றன. சோழப்பேரரசை தொண்டை மண்டலத்திலும் பாண்டி மண்டலத்திலும் விரிவுபடுத்த பராந்தகன் மேற்கொண்ட முயற்சிகளையும், அக்காலகட்டத்தில் நிகழ்ந்த அரசியல் சூழலையும் இம் மன்னன் காலத்தில் நிர்வாகம் எங்ஙனம் சீரமைக்கப்பட்டது என்பதையும் கல்வெட்டுகள் அடிப்படையில் ஆராயப்பட்டுள்ளது. பிராமணர், வணிகர், வெள்ளாளர், மன்றாடியார் ஆகியோரின் சமூக நிலையைப் பற்றியும், சைவ சமயத்தின் வளர்ச்சி குறித்தும், பெண்கள் நிலை பற்றியும் இதற்கு கோயில் ஆற்றிய பங்கு குறித்தும் விரிவாக ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. நிலவரி, நிலப்பாகுபாடு, நிலச்சீர்த்திருத்தம் எங்ஙனம் பொருளாதார மேம்பாட்டிற்கு வித்திட்டது என்பதை ஆசிரியர் விவரித்துள்ளார். இறுதியாக சோழர் கட்டிடக்கலையின் வளர்ச்சி குறித்து அதன் அமைப்பு, கொடை, புவியியல் அமைப்பு கொண்டு ஆய்வு

மேற்கொள்ளப்பட்டுள்ளது. இந்நூல் முற்சோழர் ஆட்சியில் ஏற்பட்ட சமூக, பொருளாதார, அரசியல் மாற்றங்களை அறிந்து கொள்ள பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை. **கா. ராஜன்.**

29:3 R. Krishnamurthy, *Sangam Age Coins*, Garnet Publication, 1997, pp.168.

வரலாற்றுக்கு உறுதுணைபுரியும் முதன்மைச் சான்றுகளில் ஒன்றான காசுகளைக் கொண்டு சங்ககாலச் சோழர் நாணயங்கள், பாண்டியர் பெருவழுதி நாணயங்கள், மலையமான் நாணயங்கள், தென்னிந்தியாவில் பிற்கால ரோமர் செப்புக் காசுகள் என நாணயவியலுக்கு துணைபுரியும் நூல்களை வெளியிட்ட இந்நூலாசிரியர் தற்போது தம்வசம் உள்ள அனைத்து காசுகளையும் ஒருமுகப்படுத்தி இந்நூலை வெளியிட்டுள்ளார். இந்நூலில் காணப்படும் வரைபடங்கள் குறிப்பாக 253 காசுகளை உள்ளடக்கிய 19 வண்ணப்பட அட்டைகள் இந்நூலுக்கு அணி சேர்ப்பதுடன் ஆசிரியர் அளிக்கும் கருத்துகளை ஏற்றுக்கொள்ளவும், உரசிப் பார்க்கவும் துணைபுரிகின்றன. வெள்ளி, செம்பு, ஈயம் ஆகிய உலோகங்களின் அடிப்படையிலும், சின்னங்களின் அடிப்படையிலும் பாகுபடுத்தி அவற்றிற்கு கீழே தேவைப்படும் இடத்தில் தமது கருத்துக்களை குறிப்பிட்டுள்ளார். தமிழ்-பிராமி வரி வடிவத்துடன் வெளிவந்துள்ள பெருவழுதி, மாக்கோதை, குட்டுவன் கோதை, கொல்லிப்பொறை, கொல்லிரும்பொறை காசுகள் காசுகளின் வளர்ச்சியை அறிந்து கொள்ள பெரிதும் துணைபுரியும். தொல்லியல் அகழ்வுகளில் காசுகள் கிட்டாமையால் அவ்வெற்றிடத்தை இக்காசுகள் நிரப்பி தமிழக வரலாற்றிற்கு வளம் சேர்க்கின்றன. சங்ககால அரசர்களில் குறிப்பாக காசுகளில் கிடைக்கப்பெறுகின்ற மன்னர்களைப் பற்றிய குறிப்புகளையும், சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் அரசர் பெயர்களையும் கொண்ட பிற்சேர்க்கை பயனுள்ள செயல். ஆர்வம் காரணமாக தனிப்பட்டவர்களிடம் முடங்கிக் கிடக்கும் முதன்மைச் சான்றுகளை வெளிக்கொணர்ந்து தமிழக வரலாற்று வளர்ச்சிக்கு உரமூட்டியுள்ளார் என்ற வகையில் ஆசிரியரைப் பெரிதும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

**கா. ராஜன்.**

29:4 F.De. Romanis and A. Tchernia (ed.) *Crossings - Early Mediterranean Contacts with India*, Manohar Publishers and Distributors, New Delhi, 1997.

இந்தியாவிற்கும் மத்திய தரைக்கடல் பகுதிக்கும் கி.மு. 6ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி. 3ஆம் நூற்றாண்டிற்கும் இடையே நடைபெற்ற

வணிக உறவுகள் தொடர்பான ஆய்வுக் கட்டுரைகளைக் கொண்ட தொகுப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது. ஏற்கனவே பிரெஞ்சு, இத்தாலி மொழிகளில் வெளியிடப்பெற்ற சிறந்த கட்டுரைகள் மொழி பெயர்க்கப்பட்டு இந்நூலில் இடம் பெற்றுள்ளமை சிறப்பம்சமாகும். இவ்வணிகம் தொடர்பாக இதுவரை மேற்கொண்ட ஆய்வுகளையும் அதன் தன்மைகளையும் ரொமிலா தாப்பர் அவர்கள் தமது முதல் கட்டுரையில் குறிப்பிடும் பொழுது பிராமிக்கும் செமிடி மொழி எழுத்துக்கும் இடையில் காணப்படும் வரிவடிவ ஒற்றுமை இந்தியாவிற்கும் மேற்கு ஆசியாவிற்கு இடையே இருந்த வணிகத் தொடர்பினால் உருவாகியிருக்க வேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்துள்ளார். (ப.13). தென் அரேபியா பகுதிகளில் கிடைத்த அண்மைக்கால சான்றுகளை வைத்துக் கொண்டு பெரிப்ளுஸின் காலத்தை கிறிஷ்டியன் ரோபின் தமது கட்டுரையில் மறு நிர்ணயம் செய்துள்ளார். இன்னொரு கட்டுரையில் தெரார்டுபியூஸ்மன் இந்தியாவில் பெரிப்ளுஸ் காலத்தில் நிலவிய அரசியல் சூழலை திறம்பட எடுத்து இயம்புகிறார். சாந்தோ மாசாரினோ ஹிப்பாலஸ் (Hippalus) என்ற சொல் மாலுமியை குறிக்கவில்லை; கடல் நீரோட்டத்தையே குறிக்கிறது எனவும் முதன்மைச் சான்றுகளில் இச் சொல் ஹிபலஸ் (Hipalus) என்றே குறிக்கப்பட்டுள்ளது எனவும் ஹிப்பாலஸ் (Hippalus) என அழைக்கப்படுவது தவறு எனவும் சுட்டிக்காட்டியுள்ளார். பிடெரிகா டி ரோமனிஸ் ரோம நாட்டிற்கும் தென்னகத்திற்கும் இடையே கி.மு. 30 முதல் லெவியன் காலம் வரை நடைபெற்ற வணிகத் தொடர்புகளையும், மேலைக் கடற்கரையில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்களையும், அவற்றின் நிலப்பரப்பில் ஏற்பட்ட மாற்றங்களையும் விரிவாக எடுத்துரைக்கிறார். கடைசி கட்டுரை இலங்கைக்கும் ரோம நாட்டிற்கும் முதல் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னரும் ஏற்பட்ட வணிகத் தொடர்பையும் இலங்கைக்கும் தமிழகத்திற்கும் இடையிலான தொடர்பினையும் குறிக்கிறது. பெரும்பாலும் முதன்மைச் சான்றுகளின் அடிப்படையில் எழுதப்பட்டு இதுவரை முடிவானவை எனக் கருதப்பட்டுவரும் சில கருத்துக்களை மாற்றிக் கொள்ள வேண்டும் என்ற நிலையில் இந்நூல் அமைந்துள்ளது.

**கா. ராஜன்.**

29:5 J. Heitzmann, *Gifts of Power: Lordship in an Early Indian State* *(ஜேம்ஸ் ஹெய்சுமந், ஆற்றல் தரும் கொடைகள்: ஒரு பழைய இந்திய அரசில் 'பிரபுத்துவம்')*. Oxford University Press, Delhi 1997.

குறிப்பிட்ட சில வட்டாரங்களின் கல்வெட்டுத் தரவுகளை ஆழ்ந்து பகுப்பாய்வு செய்து இடைக்கால (கி.பி. 850-1280) சோழ அரசின் தன்மையைப் புரிந்து கொள்ள முயல்கிறது இந்த நூல். தமிழை நன்கு கற்

றறிந்த இந்த நூலாசிரியர் கும்பகோணம், திருத்துறைப் பூண்டி, திருச்சி ராப்பள்ளி, புதுக்கோட்டை, திருக்கோயிலூர் ஆகிய வட்டங்களைச் சேர்ந்த எல்லாக் கல்வெட்டு மூலங்களையும் தனித்தனியாக புள்ளி யியல் முறையில் பகுப்பாய்வு செய்து இவ்வைந்து பகுதிகளிலும் காணப்படும் நீர்ப்பாசனம், வேளாண்மை உற்பத்தி முறை, அரசு நடவ டிக்கைகள் ஆகியவற்றை ஒப்பிட்டு சோழ அரசு தன் ஆதிக்கப்பகுதி முழுவதும் ஒரே சீரான அதிகாரத்தைச் செலுத்தியிருக்க இயலாது என்ற முடிவுக்கு வருகிறார். வளமான மையப் பகுதிகளில் மட்டும் சோழ அர சின் நேரடி அதிகாரம் செல்லுபடியானது; வறண்ட புதுக்கோட்டை போன்ற பகுதிகளில் உள்ளூர் வேளாண் தலைவரான நாட்டாரும்; ஓர ளவு வளம் கொண்ட திருக்கோயிலூர் போன்ற எல்லைப் பகுதிகளில் பழைய சிற்றரசர் குல வழித்தோன்றல்களும் அதிகாரத்தைச் செலுத்தி னர். இருப்பினும் சில சடங்குகள் அடிப்படையில் சோழ அரசு எல் லாப் பகுதிகளிலும் மேலாண்மை செலுத்தியது என்று ஆசிரியர் கருதுகிறார்.

சோழ அரசின் ஒரு முக்கிய கூறு அரசாங்கத்திற்கும் உள்ளூர் அமைப்புகளுக்கும் இடையேயிருந்த பெரும் நிலக்கிழார்களான உள் ளூர்த் தலைவர் என்று கொண்டு அத்தலைவர்கள் தோற்றம், வளர்ச்சி அவர்களின் அதிகார எல்லை ஆகியவைகள் ஆராயப்படுகின்றன. ஆசி ரியர் இத்தலைவர்களை 'பிரபுக்கள்' (lords) என்று பெயரிட்டு இவர் களை இடைக்கால ஐரோப்பாவில் இருந்த பிரபுக்களோடு ஒப்பிட்டுப் பார்க்கிறார்.

கோயில்களை மையமாக வைத்து எப்படி நகரங்கள் வளர்ந்தன என்பது இன்னோர் ஆய்வாகும். இந்த வகையில் ஒரு மூன்று ஊர்கள் சிறப்பாக ஆராயப்படுகின்றன.

இந்நூலின் சிறப்புப் பண்புகளில் குறிப்பிடத்தக்கவை புள்ளியியல் ஆய்வும், அதன் அடிப்படையில் அமைக்கப்பட்ட நல்ல நிலப்படங்க ளும் ஆகும். இம்முறைகள் இந்திய வரலாற்றாய்வுக்கு ஓரளவு புதியன வாதலால் இந்த நூலைப் புரிந்து கொள்ள சிறிது முயற்சி தேவைப்படுகிறது. இளம் ஆய்வாளர்கள் இவ் ஆய்வுமுறைகளைப் புரிந்து பயன்படுத்தினால் தமிழ்நாட்டு வரலாற்றுக்கு மேலும் ஆக்கஞ் சேர்க்கலாம்.

**எ. சுப்பராயலு.**

29:6 K. Rajan, *Archaeological Gazetteer of Tamil Nadu,* Manoo Pathipakam, Thanjavur, 1998, pp. 360.

இந்நூலாசிரியர் முனைவர் கா. ராஜன் தமிழகத்தின் வடபகுதியி லும், மேற்குப் பகுதியிலும் - கோவை, ஈரோடு, தர்மபுரி, வேலூர், திரு

வண்ணாமலை, விழுப்பும், கடலூர் மாவட்டங்களில் - மேற்கொண்ட தீவிர தொல்லியல் கள ஆய்வில் கண்டுபிடிக்கப்பட்ட சுமார் ஆயிரம் ஊர்களைப் பற்றிய தொல்லியல் செய்திகளை உள்ளடக்கி வந்துள்ள இந்நூல் தமிழகத் தொல்லியலில் ஒரு புதிய முயற்சியாகும். ராபர்ட் சீவெல் 1882ல் தொகுத்து வெளியிட்ட 'சென்னை மாகாணத்தில் பழம் பொருள் சின்னங்கள் பட்டியல்' (Robert Sewell, Lists of Antiquarian Remains in the Presidency of Madras) இந்த வகையில் செய்யப்பட்ட முதல் முயற்சியாகும். கடந்த நூறாண்டுகளாகப் புதிதாக அறியப்பட்ட செய்திகளும் கா. ராஜன் கண்டுபிடித்த செய்திகளும் சீவெல் நூலைப் பெரிதும் காலாவதியாக்கிவிட்டன என்று சொல்லலாம்.

ஆசிரியர் ஊர்கள் அகரவரிசையில் ஒவ்வொரு வட்டாரத்துக்கும் உரிய பண்பாட்டுக் கூறுகளை தொல்பழங்காலம் தொட்டு வரலாற்றுக் காலம் வரை அளித்துள்ளார். இச்செய்திகள் அவ்வப் பகுதியின் தொன் மைச் சிறப்பினை அறிந்து கொள்ள உதவுவதோடு சங்க காலத்தில் ஆட்சிபுரிந்த சேரர், அதியமான், நன்னன், மலையமான், வீரை வெளி யன் வேண்மான், புல்லி போன்ற அரச குலங்களின் ஆட்சிப் பகுதிக ளின் பரப்பையும் தன்மையையும் அறிய உதவும். நொய்யல், அமராவதி, பெண்ணை, பாலாறு ஆகிய ஆற்றுப் பள்ளத்தாக்குகளில் உள்ள தொன்மைச் சான்றுகளைக் கொண்டு வட்டாரங்களுக்கிடையே உண்டான பண்பாட்டுப் பரிமாற்றங்களை அளந்தறியவும் இந்நூல் உத வும். பெருங்கற்படைச் சின்னங்களுக்கும், பாறை ஓவியங்களுக்கும் இடையே காணப்படும் ஒற்றுமையையும் அது சங்க இலக்கியங்களில் பயின்று வருவதையும், பெருங்கற்படைச் சின்னம் நடுகற்களாக மாற் றம் பெற்றமையையும் இந்நூல் விளக்கிச் செல்கின்றது. வரைபடங்க ளும், ஒளிப்படங்களும் நூலின் பயன்பாட்டை பெரிதும் கூட்டுகின்றன. இந்நூல் தமிழகத் தொல்லியலுக்கு ஒரு சிறந்த அடிப் படை நூலாக அமையும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடி யாது.

**எ. சுப்பராயலு.**

---

# 30. செய்தித் திரட்டு

30:1 பேரூர் தந்த சில அரிய தொல்பொருள்கள் (படம் 30.1.1, 30.1.2).

*அண்மையில் கோயம்புத்தூருக்கு மேற்கே உள்ள பேரூருக்கருகில் வீடுகள் கட்ட மண் பறிக்கையில் கிடைத்த சில அரிய தொல்பொருள் கள் போளுவாம்பட்டி தமிழாசிரியரும் நாணவியலாருமான திரு. ஐ. ராமாசாமி அவர்களிடம் உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை பிராமி எழுத்துக்கள் கீறி எழுதப்பட்ட சுட்ட மண் தகடுகள் மூன்று, அதே எழுத்துக் கொண்ட சுட்ட மண் பொம்மைகள் சில, வெண்கலத் தகட்டின் சில்லு ஒன்று ஆகியவை.*

*இவற்றில் உள்ள பிராமி எழுத்துகள் கிபி. முதல் மூன்று நூற்றாண் டுகளைச் சேர்ந்தவை எனலாம். பெரும்பாலும் தமிழ்-பிராமி எழுத்தை ஒத்திருந்தாலும் சில எழுத்துகள் இதுவரை கண்டிராதவை. கூட்டெழுத் துகள் பெரும்பாலும் இல்லாமையாலும், தமிழ் சிறப்பு எழுத்துகளான ழ, ற, ன ஆகியன ஆங்காங்கு வருவதாலும் இவ்வெழுத்துகள் உள்ள மொழி தமிழாக இருக்க பெரும் வாய்ப்புண்டு. ஊர் என்று முடியும் சொற்கள் அடிக்கடி வருகின்றன. மண் தகடுகளில் பின்பக்கம் உள்ள எழுத்துகள் இடைக்காலத்தை சேர்ந்த நாகரி எழுத்துகளாதலால் அவை பிராமி எழுத்துகள் எழுதி சில நூற்றாண்டுகள் கழித்து கீறப்பட்டவை என்று கொள்ள வேண்டும்.*

*பொம்மைகளைப் பொறுத்தவரையில் ஆண் பெண் இணையா கவோ, ஒரு பெண் தனித்தோ கைகூப்பி வணங்கும் நிலையில் செய்யப் பட்டுள்ளன. பிரபையில் பாம்பு இருப்பதாகத் தெரிகிறது. ஓரிரு பொம்மைகளில் ஒரு முனிவர் கால் மடக்கி அமர்ந்த நிலையில் காணப் படுகிறார். ஒரு பொம்மையில் காணப்படும் நான்கு துளைகள் அப் பொம்மையை உரிய இடத்தில் பொருத்தி வைக்கப் பயன்பட்டிருக்கலாம். இப்பொம்மைகள் சமணச்சார்பு கொண்டவை என்று கருத இடமுண்டு. மேற்குறிப்பிட்ட பொருள்கள் பக்தர்கள் தம் விருப்பம் நிறைவேற கோயிலில் படைத்து வணங்கப்பட்டவை போல் தெரிகிறது.*

*வெண்கலத் தகட்டில் பறவை முகம் போன்று வரையப்பட்ட மனி தன் தலை உள்ளது. (இத்தலை ஆட்டுத்தலை எனக்கொண்டு எகிப்தி யக்கடவுளான 'அமந்' இப்படிச் சித்தரிக்கப்பட்டுள்ளது என்று ஐ. ராமசாமி அவர்கள் கருதுகிறார்). தலைக்கு மேல் எழுதப்பட்ட எழுத்து களை காடனஸ என்று திரு. ஐ. மகாதேவன் படிக்கிறார். திடனஸ என்று படிக்கவும் இடமுண்டு.*




படம் 30.1.1. பேரூரில் கிடைத்த தொல்பொருள்கள். 1.2. சுடுமண் பொம்மைகள், 3 , 4, 5. எழுத்துக்களுடைய சுடுமண் தகடுகள், 6. சுடுமண் பொம்மையின் அடிப் பகுதியில் உள்ள எழுத்துக்கள். 7, 8. ஆளுருவம் மற்றும் எழுத்துக்களு டைய வெண்கலத்தகடுகள்.



1



2



3

படம் 30.1.2 பேரூரில் கிடைத்த தொல்பொருள்கள் 1-3 சுடுமண் தகடுகளில் உள்ள எழுத்துக்களின் கண்படி.

இவ்வரிய எழுத்துகளை முற்றும் படிக்காத நிலையில் இங்கு வெளியிடுவதன் நோக்கம் இத்துறையில் ஈடுபாடுடைய யாவரும் இவற்றைப் படிக்க வாய்ப்பேற்படுத்தவே. இக்கண்டுபிடிப்புகளுக்கு மூலவரான ராமசாமி ஐயா அவர்கள் நம் பாராட்டுக்குரியர். ஆவணத்தில் வெளியிட முன்னுரிமை கொடுத்தமைக்கு மிக்க நன்றியும் செலுத்துகிறோம்.

**எ. சுப்பராயலு, தஞ்சாவூர்; இரா. பூங்குன்றன், கோயம்புத்தூர்.**

30:2 தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் அண்மைக் கண்டு பிடிப்புகள் (படம் 30.2.1).

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை பூம்புகார், அழகன் குளம், கொடுமணல் ஆகிய இடங்களில் அகழாய்வு மேற்கொண்டு அரிய தொல்பொருட்கள் பலவற்றைக் கண்டுபிடித்துள்ளது. அழகன்குளத்தில் யானையின் உருவம் ஒருபுறமும் மீன்சின்னம் மறுபுறமும் பொறிக்கப்பட்ட சதுரச் செப்புக்காசு கிடைத்துள்ளது (இது கி.மு.3-ஆம் நுற்றாண்டைச் சார்ந்த பாண்டியர் காசாகும்.). கி.பி.5-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ரோமானிய காசு ஒன்றும் கிடைத்துள்ளது. இக்காசில் "குரோரோம நார்வம்" என்று எழுதப்பட்டுள்ளது. மேலும், எடைக் கல், கல்மணிகள், சங்குவளையல் துண்டுகள், பண்டைத் தமிழ் எழுத்துகள் பொறித்த கருப்பு சிவப்பு நிறப் பானையோடுகள், ரூலடெட் (Rouletted) பானையோடுகள் ஆகியனவும் கிடைத்துள்ளன. பானையோடுகளுள் "*தானிய துவரைமா(ன்)*" என்று பொறிக்கப்பட்ட ஓடு *(படம் 30.2.1.1)* குறிப்பிடத்தக்கது. இவைதவிர செங்கல்லால் ஆன நீர் வடிகால் ஒன்றும் கிடைத்துள்ளது. மேலும் ஒரு பானையோடு அனைவரது கவனத்தையும் ஈர்ப்பதாக உள்ளது. எகிப்தியப் பிரமிடுகளில் உள்ள ஓவிய உருவங்களை நினைவுறுத்துவதாய்ப் பெண்ணுருவங்கள் காட்டப்பட்டுள்ளன.(படம் 30.2.1.2) இரண்டு பெண்கள் அருகருகே வலப்பக்கம் திரும்பிய நிலையில் வடிக்கப்பட்டுள்ளனர். அதில் ஒருத்தி இடக்கரத்தில் நீண்ட கழுத்துடைய குடுவையொன்றினை ஏந்தியும், மற்றொருத்தி தன் இடக்கரத்தில் விசிறி அல்லது கண்ணாடி ஒன்றினைப் பிடித்த வண்ணமும் வடிக்கப் பெற்றுள்ளனர். அடுத்து மற்றொரு பெண்ணும் விசிறி அல்லது கண்ணாடி ஒன்றினைப் பிடித்த நிலையில் இருந்திருத்தல் மட்டும் தெரிகிறது. இவ்வுருவங்கள் அனைத்தையும் சுற்றிச் சிறுசிறு குமிழமைப்புகள் காணப்படுகின்றன. இது கி.மு. இரண்டு அல்லது முதல் நுற்றாண்டைச் சார்ந்ததாகலாம். இங்குக் கிடைத்துள்ள சிவப்பு வண்ணப் பானையோட்டில் அழகாகப் பொறிக்கப்பட்டுள்ள பாய்மரத்துடன் கூடிய கப்பல் உருவம் குறிப்பிடத்தக்கது *(படம் 30.2.1.3)*. அழகன்குளத்தில் கப்பல் உருவம் பொறிக்




படம் 30.2.1. தமிழகத் தொல்பொருள் துறையின் அண்மைக்காலக் கண்டுபிடிப்புக்கள். 1,4. பிராமி எழுத்துக்களுடைய பானை ஓடுகள் 2. பெண்ணுருவங்களுடைய பானை ஓடு. 3. பாய்மரக் கப்பல் கீரலுடைய பானை ஓடு.

கப்பட்டுள்ள பானையோடு தற்போது இரண்டாம் முறையாகக் கிடைத்துள்ளது. இது கி.பி.4, 5 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததெனலாம்.

கொடுமணல் அகழாய்வில் கீறல் உருவங்கள் மற்றும் பண்டைத் தமிழ் எழுத்துகளுடன் கூடிய பானையோடுகள் கிடைத்துள்ளன. புதைகுழிகளில் இரும்பாலான பெரிய வாள்களும், கருப்பு சிவப்பு வண்ண வகைக் கிண்ணங்களும், சாடிகளும் கிடைத்துள்ளன. இதுவரை 5 வாள்கள் கிடைத்துள்ளன. முதன்முறையாக இங்கு கிடைத்துள்ள வட இந்திய வழவழப்பான கருப்புப் பானையோடு மவுரியர்களுடன் தமிழ்நாட்டுக்கு இருந்த வணிகத் தொடர்பை உறுதி செய்கிறது.

பூம்புகாரில் கிடைத்துள்ள பானையோடு ஒன்றின் மீது அசோகன் பிராமி எழுத்தில் பிராகிருத மொழியில் எழுதப்பட்டுள்ள குறுவாசகம் காணப்படுகிறது. அவ்வாசகம் "(அ) ஹாப கேதரோ" என இருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது (படம் 30.2.1.4). இதுவரை பூம்புகாரில் எழுத்துகள் பொறித்த பானையோடே அகழாய்வில் கிடைக்காத நிலையில் எழுத்துகளுடன் கூடிய இப்பானையோடு கிடைத்திருப்பது இவ்வாண்டின் அரிய கண்டுபிடிப்பாகும். இவ்வாண்டு அகழாய்வில் வெளிநாட்டு ஆம்பொரா மதுச் சாடிகளின் கைப்பிடிப் பகுதிகள், எலும்பிலான அம்பு முனைகள், கல் மணிகள் ஆகியவனவும் கிடைத்துள்ளன.

வேலூர் வட்டம் வாணியம்பாடி வட்டத்திலுள்ள மாதனூர் என்ற ஊரின் மலையடிவாரத்தில் புதிதாக நான்கு நடுகற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஒரு கல்வெட்டு பரகேசரிவர்மன் விஜயராஜேந்திரதேவனின் ஒன்பதாவது ஆட்சியாண்டை (கி.பி.1060) சார்ந்தது. சயங்கொண்ட சோழமண்டலத்துப் பெரும்பாணப்பாடி கீழடையாறு நாட்டுத் தொப்பாலத்துத் திருக்குமரந்தையான உத்தம நிதி ஆன சித்திரமேழிப் பெரிய நாட்டு அய்யன் என்பான் தனது ஊர் ஆநிரைகளைப் பிறர் கவர்ந்து சென்றபோது போரிட்டு அவற்றை மீட்டுப்பட்டான். இக்கல்வெட்டில் இடையில் "உத்தமநிதி அபையம்" என்று மேலும் கீழும் கோடிட்டு எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

அடுத்து மூன்று நடுகற்கள் பார்த்திபசேகரவர்மனின் 4, 6 மற்றும் 16-ஆவது ஆட்சியாண்டைச் சார்ந்தவை. இவன் சோழமன்னன் சுந்தர சோழனின் காலத்தில் தொண்டை மண்டலத்தில் கி.பி.959 முதல் கி.பி.979 வரை ஆட்சி புரிந்தவன். தொறு மீட்டுப்பட்டு இறந்தவனுக்கும், தம் தலைவன் போரில் வெற்றி பெற வேண்டும் என்று நோன்பிருந்து உயிர் துறந்தவனுக்காகவும் எடுப்பிக்கப் பெற்ற நடுகற்களாகும் இவை.

**நடன. காசிநாதன், சென்னை.**

**30:3** பல்லவர் காலத்து அரசமுத்திரை (படம் 30.3.1).

*பல்லவர் காலத்தில் வெளியிட்ட 13.5 கிராம் எடை கொண்ட வெண்கல முத்திரை ஒன்று முதன் முதலாக கும்பகோணம் அரிசிலாற்றங்கரையில் கிடைத்துள்ளது. முத்திரையின் முகப்பில் இரண்டு பக்கங்களிலும் உயர்ந்த விளக்குகள் இடையே பீடத்தின்மேல் பல்லவரின் அரசுரிமைச் சின்னமான நந்தி வலதுபக்கம் நோக்கி அமர்ந்துள்ளது. (படம் 30.3.1) நந்தியின் மேல் வெண்கொற்றக்குடையும் அதன் இரு பக்கங்களில் வெண்சாமரையும் உள்ளது. இந்நந்தி உருவம் பல்லவர் கால செப்புப்பட்டயங்கள், முத்திரைகள், கோயில்கள், காசுகள் முதலியவற்றில் இருப்பதைக் காண்கிறோம். இதன் காலம் சுமார் கி.பி.7-ஆம் நூற்றாண்டாகக் கருதலாம்.*

**ஆறுமுக சீதாராமன், தஞ்சாவூர்.**



படம் 30.3.1. காளை உருவம் பொறித்த பல்லவர் முத்திரை.

**30:4** தமிழகத் தொல்லியல் கழக எட்டாம் ஆய்வுக் கருத்தரங்கம்.

*தமிழகத் தொல்லியல் கழகத்தின் எட்டாம் ஆய்வுக் கருத்தரங்கம் ஈரோட்டில் 1997 சூலைத் திங்கள் 19, 20 ஆகிய இரு நாட்களில் இந்திய மருத்துவர் சங்க அரங்கத்தில் சிறப்புடன் நடைபெற்றது. தொடக்க*

விழாவில் உள்ளூர்ச் செயலர் டாக்டர் வெ.ஜீவானந்தம் அவர்கள் வரவேற்பு உரையை நல்க கழகத் தலைவர் முனைவர் கோ. விசய வேணு கோபால் அவர்கள் தலைமையுரையாற்றினார். ஆவணம் இதழை வெளியிட்டு தொடக்க உரையை இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் முன்னாள் இணை மேலாண் இயக்குநர் முனைவர் கே.வி. ரமேஷ் அவர்கள் நிகழ்த்தினார். பேரா. செ. இராசு அவர்கள் எழுதிய 'புயல் காத்தும் பஞ்சக் கும்மியும்' என்ற நூலை திரு. என்.பி. இராம சாமி அவர்கள் வெளியிட்டு உரை நிகழ்த்தினார். கொங்கு நாட்டில் கிடைத்த சுவடிகள், நாணயங்கள், கல்வெட்டு மைப்படிகள், தொல் பொருட்கள் கொண்ட பொருட்காட்சியை ஈரோடு நகர மன்றத் தலைவர் திரு. செ. அரங்கராசன் அவர்கள் திறந்து வைத்து உரை நிகழ்த்தினார்.

கருத்தரங்கில் மூதறிஞரும் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் முன்னாள் முதன்மைக் கல்வெட்டாய்வாளருமாகிய திரு. கே.ஜி. கிருஷ்ணன் அவர்கள் கழகத்தின் சார்பாக செப்பேடு அளிக்கப் பட்டு பாராட்டப் பெற்றார். கூனம்பட்டி ஆதினம் தவத்திரு இராச லிங்க மாணிக்கவாசக சுவாமிகள் செப்பேடு வழங்க, திரு. என் சேதுராமன் அவர்களும், திரு நடன. காசிநாதன் அவர்களும் திரு கிருஷ்ணன் ஆய்வுப் பணிகளைப் பாராட்டி வாழ்த்தினார்கள்.

இரு நாட்களும் ஐந்து அமர்வுகளில் 31 கட்டுரைகள் படிக்கப்பெற்றன. முதல் நாள் மாலை பேராளர்கள் ஈரோடு கலைமகள் அருங்காட்சியகத்தைப் பார்த்துவிட்டு, விஜயமங்கலம் சென்று நாகேசுவரர் கோயில், கரிய மாணிக்கப் பெருமாள் கோயில், விஜயபுரி அம்மன் கோயில், சந்திரப் பிரப தீர்த்தங்கரர் கோயில் ஆகியவற்றைக் கண்டு களித்தனர். அன்று இரவு பேராளர்களுக்கு விஜய மங்கலம் திரு. சி. துரைசாமி அவர்கள் விருந்தளித்தார். பேரா. செ. இராசு அவர்களின் நன்றி நவிலலுடன் இக் கருத்தரங்கம் முடிவடைந்தது.

**கா. ராஜன்.**

# கட்டுரையாளர்கள்

**திரு. ஆறுமுக சீதாராமன்**
12, ராஜராஜன் நகர்
மனோஜிப்பட்டி (தெற்கு)
தஞ்சாவூர்

**முனைவர் சு. இராசகோபால்**
இராஜாஜி இல்லம்
4 அ, முதல்தெரு
வெங்கடேஷ்வரா நகர்
அடையாறு
சென்னை 600 020

**திரு. கரு. இராசேந்திரன்**
ஆசிரியர்
மேலப்புனையூர் (அஞ்சல்)
விராச்சிலை வழி
புதுக்கோட்டை 622 420

**முனைவர் செ. இராசு**
பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

**திரு. ஐராவதம் மகாதேவன்**
இ.ஆ.ப. (ஓய்வு)
18 அ, 4வது கடல்நோக்குச்சாலை
வால்மீகி நகர், திருவான்மியூர்
சென்னை 600 041

**திரு. முத்து. எத்திராசன்**
128, காமராசர் குடியிருப்பு
தெற்கு உஸ்மான் சாலை
தியாகராய நகர்
சென்னை 600 017

**முனைவர் மா. கணேசன்**
தமிழ்ப் பேராசிரியர்
அவிநாசி

**முனைவர் எஸ்.எம். கமால்**
21, ஈசாபள்ளிவாசல் தெரு
இராமநாதபுரம் 623 501

**திரு. நடன. காசிநாதன்**
இயக்குநர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை
சி.பி.டி வளாகம்
தரமணி
சென்னை 600 113

**திரு. ம. காந்தி**
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
வேலூர் 632 004

**Sri K.G. Krishnan**
Chief Epigraphist (Rtd)
711, Vaijayanti
16th main Road
Saraswathipuram
Mysore - 570 009

**முனைவர் ப. சண்முகம்**
பேராசிரியர்
தொல்வரலாறு மற்றும் தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

**திரு சொ. சாந்தலிங்கம்**
தொல்லியல் அலுவலர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
திருமலை நாயக்கர் அரண்மனை
மதுரை 625 001

**முனைவர் எ. சுப்பராயலு**
பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

**Dr. S. Swaminathan**
Senior Epigraphist
O/o The Director (Epigraphy)
Old University Office Building
Mysore 570 005

**திரு. ஜி. சேதுராமன்**
இணைப்பேராசிரியர்
கலைவரலாற்றுத் துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை 625 021

**திரு. இல. தியாகராசன்**
முதுநிலை விரிவுரையாளர்
வரலாற்றுத் துறை
அரசு கலைக்கல்லூரி
அரியலூர் 621 704

**திரு. கோ. திருமூர்த்தி**
உதவி தொல்லியல் ஆய்வாளர்
இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை
புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை 600 001

**திரு. ப. புஷ்பரட்ணம்**
முனைவர் பட்ட ஆய்வாளர்
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர் 613 005

**முனைவர் ந. ராஜன்**
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர் 613 005

**முனைவர் ந. வள்ளி**
1/1 இலட்சுமணன் செட்டியார் சந்து
காரைக்குடி 623 001

**திரு. ப. வெங்கடேசன்**
3/78 கம்பன் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜா பேட்டை 632 513

**திரு. இரா. பூங்குன்றன்**
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை
கோயம்புத்தூர்

**முனைவர் வெ. வேதாசலம்**
கல்வெட்டாய்வாளர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை
திருமலை நாயக்கர் அரண்மனை
மதுரை 625 001

**முனைவர் கோ. விசய வேணுகோபால்**
பிரஞ்சு இந்தியக் கழகம்
பாண்டிச்சேரி

**திரு. கி. ஸ்ரீதரன்**
9/ஏ மேல் அடையவிளஞ்சான் வீதி
திருவரங்கம்
திருச்சிராப்பள்ளி 620 006

---

# இரங்கல் செய்திகள்

## ஆர். திருமலை, இ.ஆ.ப.

*(மறைவு: 8.9.97)*

இந்திய ஆட்சிப்பணியில் (I.A.S.) நீண்டகாலம் பணியாற்றி மத்திய அரசில் மிக உயர்ந்த பதவிகளை வகித்தவர். ஓய்வுபெற்ற பின்னரும் தமிழக அரசில் காவிரிநதிநீர்க் குழுமம் மற்றும் தமிழக அரசின் திட்டக்குழுவில் பணியாற்றியவர். பேராசிரியர். க.அ. நீலகண்ட சாஸ்திரியாரிடம் வரலாற்றாய்வை முறையாகக் கற்றவர். ஆட்சிப்பணிகளில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டபோதும், ஓய்வுபெற்ற பின்னரும் தமிழகக் கல்வெட்டுகள், தமிழ்ப் பண்பாடு, தொல்லியல், வரலாறு ஆகியவற்றின்மீதிருந்த ஆழ்ந்த பற்றினால் இடைவிடாது ஆய்வுகளை மேற்கொண்டவர்.

பழந்தமிழகத்தின் பொருளியல் வளர்ச்சியை நுணுகி ஆய்வதே இவரின் குறிக் கோள். இக்குறிக்கோளின் வெளிப்பாடாக பலநூல்களை இவர் அளித்துள்ளார். புதுக் கோட்டை மாவட்டத்து நகரங்களின் வளர்ச்சி, ராசேந்திர விண்ணகர், சோழ பாண்டிய காலகட்டத்தில் நிலவிய நிலதானங்களும் உழவர் எதிர்ப்புகளும் போன்ற நூல்கள் சிறப் பானவை.

நேரு ஆய்வு நல்கையும், இந்திய வரலாற்றுக்குழுவின் ஆய்வு நல்கையும் இவருக்கு அளிக்கப்பட்டன. தமிழ்நாட்டு வரலாறு எழுதும் வல்லுனர் குழுவிலும் சிறப்பாகப் பணி யாற்றினார்.

எழுபத்துமூன்று வயதிலும் குன்றாத ஆர்வத்தோடு ஆய்வு மேற்கொண்ட இவரது மறைவு தமிழகத் தொல்லியல், கல்வெட்டியல் வரலாற்று ஆய்வாளர்களுக்கு ஏற்பட்ட பேரிழப்பாகும்.

## புது.போ. வேங்கடராமன்

*(தோற்றம் 10.11.1925; மறைவு 4.12.1997)*

தருமபுரி மாவட்டம் புதுரெட்டியூரில் ஒரு வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்தவர். பள்ளித் தமிழாசிரியராகப் பணியாற்றி கடத்தூர் மேல்நிலைப்பள்ளியில் துணைத் தலைமை ஆசிரியராக 1983ஆம் ஆண்டுவரை சிறப்பாகப் பணியாற்றியவர். ஆசிரியப் பணிகளோடு தொல்லியல் கள ஆய்விலும் மிகுந்த ஆர்வத்தோடு ஈடுபட்டவர். சற் றொப்ப அரை நூற்றாண்டு காலம் கள ஆய்வுகளில் தனியாக ஈடுபட்டு தொல்பழங்காலக் கல்லாயுதங்கள், காசுகள், மண்பாண்டங்கள் போன்ற பல தொல்லியல் பொருள்களைத் திரட்டினார். அவற்றுள் பலவற்றை அருங்காட்சியகங்களுக்குத் தந்தருளினார். அவரது இல்லம் ஒரு தொல்பொருள் அருங்காட்சியகமாகத் திகழ்ந்தது.

சேலம் மாவட்ட ஆட்சியரின் அழைப்பை ஏற்று சேலம் அரசு அருங்காட்சியகத்தை நிறுவினார். சிலகாலம் அதன் காப்பாட்சியராகவும் பணியாற்றினார். ஓவியக்கலையில் தேர்ந்த இவர் கல்வெட்டுகளை உள்ளது உள்ளவாறே கண்படி எழுதுவதில் வல்லவர். புகழ்பெற்ற இருளப்பட்டி நடுகற்கள் இவரது கண்டுபிடிப்பே. இறுதிவரை தொல்லியல் ஆய்வில் ஈடுபட்ட இவரது மறைவு தொல்லியல் ஆய்வாளர்களுக்குப் பெரும் இழப்பா கும்.

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY,

Thanjavur.

*RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.3.98*

| RECEIPTS | | PAYMENTS | |
|---|---|---|---|
| Cash at Indian Bank | 639.00 | Printing charges | 15,995.00 |
| Cash at State Bank of India | 2,767.00 | Typing & Stationery | 1,019.00 |
| Cash in hand | 1,657.65 | Audit fees | 400.00 |
| Fixed Deposit | 95,000.00 | Salary | 350.00 |
| Sale of books | 8,185.00 | Postage | 919.00 |
| Membership fees | 9,900.00 | General Expenses | 375.00 |
| Interest | 10,120.00 | Freight | 292.50 |
| | | Bank charges | 90.00 |
| | | **Closing Balance:** | |
| | | Fixed Deposit | 95,000.00 |
| | | Indian Bank, Thanjavur. | 667.00 |
| | | Cash at S.B.I., TNJ. | 11,972.00 |
| | | Cash in hand | 1,189.15 |
| | 1,28,268.65 | | 1,28,268.65 |

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY,
Thanjavur.

## *INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.3.98*

| | **Expenditure** | | | **Income** | |
|---|---|---|---|---|---|
| To | Printing charges | 15,995.00 | By | Sale of books | 8,185.00 |
| " | Typing & Stationery | 1,019.00 | " | Membership fees | 9,900.00 |
| " | Audit fees | 400.00 | " | Interest | 10,120.00 |
| " | Salary | 350.00 | | | |
| " | Postage | 919.00 | | | |
| " | Bank charges | 90.00 | | | |
| " | Freight | 292.50 | | | |
| " | General Expenses | 375.00 | | | |
| " | Excess of income over Expenditure | 8,764.50 | | | |
| | | 28,205.00 | | | 28,205.00 |

## *BALANCE SHEET AS ON 31.3.98*

| **LIABILITIES** | | | **ASSETS** | |
|---|---|---|---|---|
| **Fund Account:** | | | Fixed Deposit | 95,000.00 |
| Opening Balance | 1,00,063.65 | | **Cash at Bank:,** | |
| **ADD:** Excess of income over expenditure | 8,764.50 | | Indian Bank, Thanjavur. | 667.00 |
| | | 1,08,828.15 | S.B.I., Thanjavur. | 11,972.00 |
| | | | Cash in hand | 1,189.15 |
| | | 1,08,828.15 | | 1,08,828.156 |

Sd/- **V. RAMASAMY**, B.Com., A.C.A.,
Chartered Accountant,
1137, East Main Street,
Thanjavur - 613 001.

*(முன் அட்டைத் தொடர்ச்சி)*

1. டி.வி. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம், பகுதி 2, 3ஆம் பதிப்பு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம். அண்ணாமலை நகர், 1967, பக்.83-90

**கட்டுரைகளுக்கு**

கட்டுரை ஆசிரியர் பெயர் (தந்தை அல்லது குறிப்பு எழுத்துகள் முதலிலும், தொடர்ந்து முழுப்பெயரும்), கட்டுரைத் தலைப்பு (மேற்கோள் குறிகளுக்குள் தரப் படவேண்டும்), கட்டுரை வெளிவந்த நூல் அல்லது பருவ ஏட்டின் பெயர் (பருவ ஏடுகளுக்கான பெயர் சுருக்க எழுத்துக்களில் தரப்படலாம். அடிக்கோடிடப்படல் வேண்டும்.), தொகுதி எண், வெளியிடப்பட்ட இடம், ஊர், வெளியிடப்பட்ட ஆண்டு, பக்க எண்.

சூ.சுவாமிநாதன், "புஞ்சை மூலபருடைக் கல்வெட்டு", ஆவணம், தொ. 6, தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர், சூலை 1995 பக்.23, அடிக்குறிப்பு எண் 6.

ஆங்கில நூல்களுக்கும் இது பொருந்தும், ஆங்கில நூல் தலைப்புகளை ஆங்கிலத்திலே கொடுக்கலாம்.

சொற்குறுக்கங்களைப் பயன்படுத்தலாம். சில கீழே தரப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| பக். | - | பக்கம்/பக்கங்கள் |
| அகு. | - | அடிக்குறிப்பு |
| பதி. | - | பதிப்பாசிரியர் |
| த.தொ.க. | - | தமிழகத் தொல்லியல் கழகம் |

கிரந்த எழுத்துக்களை எழுத்துப் பெயர்ப்பு செய்ய ஆவணம் வழங்கி வரும் முறையைப் பின்பற்றலாம் அல்லது மூல எழுத்துக்களை அப்படியே மாற்றாமல் தரலாம்.

எல்லா வரைவுகளும் தெளிவாகவும் சுருக்கமாகவும் தட்டச்சில் இரு படிகள், **சு. இராசகோபால், "ஆவணம்" பதிப்பாசிரியர், மே/ பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 005** என்ற முகவரிக்கு அனுப்பவேண்டும்.

**உறுப்பினர் கட்டணம்**

தமிழகத் தொல்லியல் கழக வாழ்நாள் உறுப்பினர் கட்டணத்தை (ரூ.500) பா.ஜெயக்குமார் பொருளாளர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 613 005 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும். காசோலை, வரைவோலைகள், "தமிழகத்தொல்லியல் கழகம்" என்ற பெயரில் இருத்தல் வேண்டும்.

பிற தகவல்களுக்கு செயலர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 005. என்ற முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் பருவ இதழ்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும் கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய யாவருடைய நூலகங்களுக்கும் இன்றியமையாத வரலாற்றுக் கரு வூலம்.

### விலை விவரம்

| | |
|---|---|
| ஆவணம் 1, 2 | இருப்பு இல்லை |
| ஆவணம் 3 | ரூ.*100.00* |
| ஆவணம் 4 | ரூ.*100.00* |
| ஆவணம் 5 | ரூ.*100.00* |
| ஆவணம் 6 | ரூ.*100.00* |
| ஆவணம் 7 | ரூ.*100.00* |
| ஆவணம் 8 | ரூ.*100.00* |

நொபொரு கராஷிமா
**வரலாற்றுப் போக்கில் தென்னகச் சமூகம்**
**(முதற் தொகுதி, சோழர் காலம்)** ரூ.*100.00*

### கழிவு

| | |
|---|---|
| நிறுவனங்களுக்கு | *15*% |
| கழக வாழ்நாள் உறுப்பினர்களுக்கு | *50*% |
| தனிப்பேருக்கு | *30*% |

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெற விழைவோர், சரியான தொகையை வரைவோலையாகவோ காசோலையாகவோ பா. ஜெயக்குமார், பொருளாளர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 005 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும். வரைவோலை, காசோலைகள், தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் மேற் கண்ட தொகையுடன் ரூ.10ஐச் சேர்த்து அனுப்பவும்.

பிற தகவல்களுக்கு **செயலர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்** 613 005 என்ற முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

---

**AVANAM** Journal of Tamil Nadu Archaeological Society,
C/o. Department of Epigraphy, Tamil University, Thanjavur-613 005.